செந்தமிழ் 'நாவல்'கள்

2.

# விஜயமார்த்தாண்டம்

காதற்பத்து—கற்புப்பத்து

இது

அ. மாதவையர், பி. ஏ.,

இயற்றியது.

இரண்டாம் பதிப்பு.

சென்னை:

ஸ்ரீ தேசமித்திரன் ஆபீஸ்.

1922.



*Price Re. 1—4.*

உள்ளுறை.

பக்கம்

I. காதற்பத்து:—



II. கற்புப்பத்து:—

லைப் பொறுத்தருளவேண்டி, வந்தனமும் அளிக்க
ஆயத்தமா யிருக்கின்றோம்; இக்கதாரம்பத்தின் முற்
கூற்றை அது நன்கு விளக்குதலின், இவ்வாறு
விஷயோபசாரம் செய்ய நேர்ந்தது:

108 ரா. மேய் விளம்பி. 5-1-18...

## புலிமலை ஜமீன்.

"செஞ்சாலிரினோ ஜில்லாவின் மலைப்பிரதேசத்
துள்ள இந்த ஜமீனைப் பற்றிய வியாச்சிய விஷய
த்தை நமது நண்பர் நன்றறியாரென்று எண்ணு
கிறோம். தென்னாட்டுள்ள பழைய ஜமீன்களில் இஃ
தொன்று. மலைவளங்கள் மலிந்த இந்த ஜமீன், லக்ஷ
ரூபா வருஷவருமான முள்ளது. ஆனால், குடிகளிற்
பெரும்பாலவர் "தேவர்" களும், திருமங்கை யாழ்
வார் குலத்தினரும், குமரக் கடவுள் மைத்துனருமா
யிருத்தலின், நாகரிகமென்பது முயற்கொம்பே; மேனா
ட்டுக் கல்விப்பயிற்சியும் புதிய நடவடிக்கைகளும் இன்
னும் இங்கே பிரவேசித்தில; நூற்றில் ஒருவனுக்
குக் கூடத் தன் பெயரெழுதத் தெரியாது. கல்வியில்
மட்டும் இத்துணை அறியாமை வாய்ந்துளதே யன்றி,
இந்த ஜமீனிலேயே கொள்ளைக்காரர்களுக் கெல்லாம்
குருபீடம் போன்ற புலிமலையென்னும் ஊரிருக்கின்
றது. 'புலிமலைப்பூனை போலீஸ் புலியின் ஓட்டத்தைப்
பிடிக்குமா?' என்று பரிகாசமாய்ச் சொல்வதுண்டு.

"இதன் கடைசி ஜமீன்தார், வடிவழகிய நம்பி வீர பாண்டிய சொக்கலிங்கத்தேவர் என்பவர், இரண்டு வருஷங்களுக்குமுன் தேகவியோகமாயினர். அவருக்குச் சந்ததியில்லை. அவர் மனைவியாரும் தம் கணவ ரிறந்த மூன்றாவது மாதத்தில் மரித்தனராக, அந்தப் பிரேதத்தைச்சுற்றி நாய், நரி, கழுகுகள் கூடுவதுபோல, அடைப்ப மாதிய சிறு தொழில்களில் முன் அமர்ந்திருந்த பல பந்துக்களும், வேறு சில ஞாதிகளும், எமக்குமக் கென்று வழக்கிடத் தலைப்பட்டனர். இராஜாங்கத்தாரோ, ஜமீனைக் கைக்கொண்டு, வழக்காளிகளை யெல்லாம் நியாய சபைக்கு அனுப்பினர். வியாச்சியச் செலவுக்குப் பணமின்றி யாவரும் வெறுங்கையராய் வாளாவிருக்க, நாட்டுக்கோட்டைச் செட்டிகளே முதல் நியாயாதிபதிக ளாயினர். இவர்கள், காலஞ் சென்ற ஜமீன்தாரின் நெருங்கிய உறவினருள் விஜயமார்த்தாண்டத் தேவர், வீரசங்கிலித்தேவர் என்ற இருவரைத் தெரிந்தெடுத்துச், சிலர் ஒருவரிடத்தும் சிலர் மற்றவரிடத்தும் ஜமீனைச் சில நிபந்தனைகளுடன் அடைமானமாக எழுதி வாங்கிப்பண முதவி, வியாச்சியத்தைத் தொடங்கச் செய்தனர். இவ்வாறு இருதிறத்தார்க்கும் பொருள் உதவிய செட்டிகளுக்குள், தோற்ற கை நஷ்டமுறுதபடி வென்ற கை தனமளிக்க வேண்டும் என்ற உள்ளுடம்படிக்கை ஒன்றிருப்பதாகக் கூறுவார் சிலர். ஜில்லா நியாயசபையிலும், சென்னைப் பெரிய நியாய சபையிலும் விஜய மார்த்தண்டத் தேவருக்கே அநு

"கூலமாயிற்று. பின்பு வீரசங்கிலித்தேவர் இங்கி
லாந்திலுள்ள அந்தரங்க சபையில் வழக்கிட்டார்;
அதில், அவருக்கே ஜமீன் உரியதென்றும், கீழ்ச்
சபையார் செய்த முடிவு தவறென்றும், உடனே
ஜமீனையும் இதுகாறும் சேர்ந்துள்ள பணத்தையும்
வீரசங்கிலித்தேவர் வசம் கொடுத்து விடும்படியும்
முடிவு செய்யப்பட்டு, நேற்று மாலை தந்தி வந்திருக்
கின்றது. இவ்வியாச்சிய விஷயத்துக்குரிய சட்டதிட்
டங்களை யாம் அறிந்திலேமாயினும், மூந்நூற்றைம்பது
சாக்ஷிகள் வரை விசாரித்து, ஒரே விதமாக முடிவு
செய்த இரண்டு இந்திய நியாய சபைகளினும், இங்
கிலாந்தி லுள்ளார் நமது ஆசார அநுஷ்டானங்களைப்
பற்றி அதிகம் தெரிந்ததாக நினைந்து முடிவு செய்
தல், மிகவியப்பே. "இராமனாண்டாலும் சரி, இராவ
ணனாண்டாலும் சரி," என்று கூறுதல், பொது நன்
மையைக் கருதுவார்க்கு நற்கொள்கை யன்றாதலின்,
விஜயமார்த்தாண்டத் தேவர் தோல்வியைப் பற்றி
நமக்கு மிக்க மனவருத்தமே. இவர் அதி புத்தி
சாலி; தென்மொழியிலும் ஆங்கிலத்திலும் மிகத்
தேர்ந்தவர்; சங்கீதத்தில் அரிய பயிற்சியுடையவர்;
நற்குணமும், நற்சிந்தையும், நல்லொழுக்கமும் நிறைந்
தவர். குழந்தைப்பருவத்தில் இவர் காட்டிய புத்தி
நுட்பத்தைக் கண்டு வியந்து, மிகவேழையாகிய இவ
ரைக் காலஞ்சென்ற ஜமீன்தாரவர்கள் எடுத்து வளர்
த்துக் கல்வி பயிற்றினர். நாளொருமேனியும் பொழு
தொரு வண்ணமுமாக வளர்ந்து, கல்வியிற்றேர்ந்து

"வந்த இவரும், பாலைவனத்தின் கண் தாமரைத் தடா கத்தைப் போல, அம்மூராட்டு மலைப் பிரதேசத்தில் வாழ்ந்து வந்தார். ஜமீன்தார், தம்மகனைப் போலவே இவரைப் பாவித்து வந்தார். தமக்கு மகப்பேறுண் டாகுமென்ற நம்பிக்கையே, இவரைச் சுவீகாரஞ் செய்து கொள்ளாததற்குக் காரணமாம்; திடீரென்று நேர்ந்த அகால மரணமே, இவருக்கு ஒருவித ஏற்பா டுஞ் செய்யாததற்குக் காரணமாம். கல்வியும், நல் லொழுக்கமும் வாய்ந்து, இதுகாறும் இராஜ பதவி யில் வளர்ந்து வந்த இவர், இப்பொழுது என் செய் வாரோ அறியேம். ஆதிமுதற் சிலராலும், ஜில்லாக் கோர்ட்டில் தீர்ப்பானது முதற் பெரும் பாலாராலும், இவரே ஜமீன்தாராக மதிக்கப்பட்டு வந்திருக்கிறார். வயதோ இன்னும் இருபத்து மூன்று நிறையவில்லை; அதிசுந்தர புருஷரெனக் கேள்வி. இன்னும் ஒரு பரிதாபமான சங்கதியையும் கேட்டு மனம் வருந்து கிறோம்: சிறு பிராயத்தில் விளையாட்டுத் தோழியா யிருந்த ஒரு பெண்மணியின்மீது, இவர் மிக்க காதல் கொண்டுளராம்; சாதியாசார விரோதமாக, அவளையும் கல்வி பயிலும்படி செய்து வந்தனராம்; தமக்கு எவ் வளவோர் உந்நதபதவி கிடைப்பினும், தம்மிலும் ஏழைக் குடும்பத்தினளாகிய அப்பெண்ணையே தம் உயிர்த்துணைவியாக்க நிச்சயித்திருந்தனராம்; ஜில்லா நியாய சபையில் தமக்கு அநுகூலமானவுடன், தம்மை மருமகனாக வேண்டிய சில ஜமீன்தார்களின் வேண்டு கோள்களை, இதன்பொருட்டே மறுத்தனராம்; ஜமீ

"னைக் கைப்பற்றிய பின்னர்த் தம் ஏழைக் காதலி யைக் கைப்பற்றுதலே சிறப்பென்று, இதுகாறும் தாழ்த்திருந்தனராம். இவருக்கு இவ்விதத் தீங்கு விளைந்தது என்ன பரிதாபம்! அந்தோ! இவரினி என் செய்வார்? ஒருவித ஏற்றமுமேயின்றி, இவர், தம் பூர்வ நிலைமையிலேயே இருந்து, தம் காதற்குரியாளை மணந்திருப்பின், மிக்க நலமாய் முடிந்திருக்குமே! சகடக்கால் போல வரும் செல்வமன்றோ இவரை இவ்வண்ணம் நிலை குலைத்துவிட்டது! இவரது கல் வித் தேர்ச்சியையும், நல்லொழுக்கத்தையும், இது காறுமிருந்த பதவியையும், இப்பொழுதுற்றுள்ள பரிதாப நிலைமையையும் நினைந்து, இராஜாங்கத்தார், இவருக்கு ஒருயர்ந்த உத்தியோகம் அளிப்பரென நம்புகின்றோம்; இந்தியப் பிரபுக்கள் மாட்டு மிக்க கண்ணோட்டமும் ஆதரவுமுள்ள நமது கவர்னரவர்கள் இதைச் செய்வாரென்பதிற் சந்தேக மில்லை. இவ்வாறேனும் பெருமையுற்று, இந்நற்குண கனவான் நீடூழி சகல சம்பந்நராய் வாழ்வாராக!

---

"நேற்று மாலை முதல் ஜமீன்தாராய்விட்ட வீர சங்கிலித் தேவரைப்பற்றி நமக்கு அதிகம் தெரி யாது. அவருக்கு வயது நாற்பத்தைந்தென்று கேள்வி; மனைவியார் இருவராம்; சந்ததி இனி உதிக்க வேண்டுமாம்; கல்விப் பயிற்சியுடையவராகத் தெரிந் திலது; யௌவன காலத்திற் குதிரை ஏற்றத்திலும்,

"இப்பொழுது சேலைற் போரிலும் மிக்க பிரீதியுடையவ ராம்; சில காரணங்களின் நிமித்தம், காலஞ் சென்ற ஜமீன்தாரவர்கள், இவரைத் தம் முன் வரவிடா திருந் தனராம். வியாச்சிய விஷயமாக, ஜமீன் மேல், சுமார் மூன்று லக்ஷ ரூபா வரையும் கடன் சுமந்தேறி யிருக் கின்றது. இவர் புத்திமானாக நடந்து கொண்டால், இரண்டு வருஷங்களுக்குள் இக்கடனைத் தீர்த்து, ஜமீனை மீட்டிவிடலாம். இப்பொழுதே யிரண்டு லக்ஷ ரூபா வரை இராஜாங்கத்தாரிடம் கையிருப்பி லிருப் பதாகக் கேள்வி. இந்தப் புராதன ஜமீன் கேடுறா வண் ணம் இவருக்கு நற்புத்தியை யளித்து, இவரை நன் னெறியில் நடாத்தி, நீனதயாளுவாகிய ஆநந்த நடே சர் காப்பாற்றி யருள்வாராக."

"பொது நன்மையைக் கருதும்" "மெய்விளம்பிப்" பத்திராதிபர் மேல் வரைந்துள்ள வியாசத்தை யெழு திக் கொண்டிருக்கையில், அதிற் கூறப்பட்ட முக்கிய புருஷர் இருவரும் என்ன செய்து கொண்டிருக்கின் றன ரென்பதைக் கவனிப்போம்.

நமது நண்பரிற் பெரும்பாலார்க்கும் சென்னை நகர் தெரியுமென நம்புகிறோம். அந்நகரில், "மௌண்ட் ரோடு" என்ற இராஜவீதியில், ஆடையாபரணங்கள் விற்கும் ஒரு பெரிய பண்டசாலையின் வாயிலில், விலை யுயர்ந்த இரண்டு வெள்ளைக் குதிரைகள் பூட்டப் பெற்ற நாலு சக்கரப் பல்லக்கு வண்டியொன்று நிற் கின்றது; கண்ணாடிச் சன்னல்களாலும், தோற்றிரை

களிலும், வண்டி நாலுபக்கமும் மூடப்பட்டிருக்கிறது; பலவருண ஆடைதரித்த சாரதி, வண்டியின் மோட்டில் வீற்றிருக்கிறான்; கையில் வெண்சாமரை பிடித்த இரண்டு பதாதிகள், இருபுறமும் குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்துக்கொண்டு, ஓட்டி நிற்கிறார்கள்; நேற்றுமாலை தந்தி வந்த பின்னரோ, அல்லது இன்று காலையோ, தைத்ததாகக் காணப்படும் வெள்ளையங்கி தரித்த ஒருவன், வண்டியின் படிகளருகே, மூடியிருக்கும் கதவின் பித்தளைப் பிடியில் ஒரு கையுடன் நிற்கிறான்; சற்றுக்கவனித்தால், தன் மூக்குச் சப்பையாய் அழுந்தும்படிக் கண்ணாடிச் சன்னலில் முகத்தை வைத்து வெளி நோக்கும் ஒரு பெண், வண்டிக்குள் இருப்பது தெரியவரும். அவள் முகத்தில் பாற்கடல் தந்த செல்விக்கு மூத்தாள் பிரசன்னமாய் நடமாடுதலையும், வெளி நிற்கும் வேலைக்காரன் அடிக்கடி அவளைப் பார்த்துச் சித்துச்சைகை செய்வதையும் கவனித்தால், அப்பெண், நவதானிய கோத்திரத்தைச் சேர்ந்த நித்தியசுமங்கலியெனத் தெரிந்துகொள்ளலாம். இவளையும் வேலைக்காரனையும் விட்டுவிட்டுப் பண்டசாலைக்குள் புகுவோம்: வாயிற் காப்பாளையும், கணக்கர்களையுங் கடந்து சென்று நோக்கின், நானாவித ஆடையாபரணப் பொருள்கள் யாவரையும் மனங்கவரும்படி அலங்காரமாய் வைத்திருப்பதைக் காண்கிறோம்; பண்டசாலை முதலாளிகள் இருவர், லக்ஷப்பிரபுக்கள், வெகு மதுரமாயும் சாதுரியமாயும் பேசவல்லவர், ஓடிச்சாடிப் பணியேற்று நிற்கின்றனர்;

பழுப்பு வேஷ்டியும், மழுப்புத் தலையும், கண்ட ருத்தி ராக்ஷமும் உள்ள இரண்டு நாட்டுக்கோட்டைச் செட்டிமாரும், வெளியே நிற்கும் வேலையாளைப் போல் புத் தங்கி தரித்த இரண்டு வேலைக்காரரும் கூட நிற்கின்றனர். உச்சி நெருங்கியுயர்ந்து நீளுள்ள நாடைப்பக்கம் பருத்தூதிச் சுரைக்காய்போல் தோன்றும் தலையும், இருந்த கழுத்தும், சுருங்கிய மார்பும், ஆலின் விழுது களைப் போல் தொங்கும் நடம்பிய கைகளும், நாலைந்து தலைமுறையாக விபாக மாகாத பெரிய குடும்பத்து உலைப் பானையைப் போன்ற தொந்தியும், மேலரை யோடு முரணியோ தொந்தி சுமையைத் தாங்க மாட்டாமலோ மிகக்குறுகிய கால்களுமுள்ள ஒருவர், இயந்திரத்திற் தைக்குமாறு முதலிலோட்டிய நூல்கள் (பிரிக்கப்படாமே) நேற்றிரவே தைக்கப் பட்டதென்ப தற்குச் சாக்ஷியாக அங்குமிங்கும் தலைநீர்க்கும் ஒரு சிவப்புப் பட்டுடை தரித்து, கோவில் திருமதிற் புறத்துச் சுண்ணம்புப் பட்டைகள் போல அகன்ற சரிகைப் பட்டைகள் அவ்வுடையை அலங்கரிக்கக், குடுமித் தேங்காய்க்குப் பூமாலை சுற்றியது போல் ஒரு பட்டுத் தலைச்சாத்து மணிந்து, கூத்திற் கோமாளியைப் போல் அங்கு விளங்குகின்றார். அவருக்கு நாற்பத்தைந்து வயதிருக்கலாம்; அவர் நீராடிய அக்கினி தேவனைப் போன்ற நிறத்தர்; சிறிய சிவந்த கண்களையும், பெரிய கறுத்த மீசையையு முடையவர்; முகத்திலுள்ள அம் மைத் தழும்புக் குழிகளை நிரப்ப, அரைப்படி குன்றி முத்தேனும் வேண்டும்; இடதுகால் சிறிது நொண்டு

வது, இன்று மாலை முதல்தான். பதினாறு ரூபா கொடுத்து நேற்றிரவு வாங்கின சோடு படுத்தும்பாடு. இனி இவர்கள் சம்பாஷணைக்குச் சிறிது செவி கொடுப்போம்.

முதல் நா. கோ:—மகாராஜா! இந்தப் பட்டைப் பாருங்கள்: தங்கள் நிறத்துக்கு வெகு நன்றாயிருக்கும்.

[இவ்வாறு செட்டியாரால் அழைக்கப்பட்டவர் தாம், புலிமலைப் புது ஜமீன்தார விரசங்கிலித்தேவர்.]

ஜமீன்தார்:—ஐயா, முதலாளி! இந்த கசம் என்ன விலை?

1-வது முதலாளி:—இது காஷ்மீர்த்தோத்துப்பட்டு; நமக்கு நேராக வருகிறது, பம்பாய் வியாபாரிகள் மூலமாய் வந்தால் விலை ஜாஸ்தியாகும்; நாலு தினங்களுக்கு முன், கன்னக் காவல் ஜமீன்தாரவர்கள் கூட ஒரு சூட்டுத் தைத்துக் கொண்டார்கள்:—

ஜமீன்தார்:—யாரு, நம்ம சின்னத்துரையா, பெரிய துரையா?

1-வது முதலாளி:—பெரிய அரமனை ஜமீன்தாரவர்கள்.

ஜமீன்தார்:—சரி; இது கசம் என்ன விலை?

1-வது முதலாளி:—தம்பி! கன்னக்காவல் துரைக்கு என்ன விலையாகக் கொடுத்தது, பாரும்.

2-வது முதலாளி:—கசம் முப்பத்து மூன்றரை ரூபா என்று கொடுத்திருக்கிறது.

ஜமீன்தார்:—சரி : நமக்கொரு சூட்டுக்கு பத்தனை கசம் வேணும் ?

உடனே தையற்காரன் வந்து ஜமீன்தாரை அளக்கத் தொடங்கினான். வழக்கம்போல் அவன் கொணர்ந்த அளவு நாடா இடுப்பைச் சுற்றி யளக்கப் போதாமற்போக, வேறு பெரியது கொணர்ந்து அளவு செய்து கணக்கிட்டு, 'மகராசா' அவர்களுக்கு, ஒரு 'சூட்டு' க்குப், பதினைலரை கசம் போதுமென்று சொன்னான். அப்படியே ஒரு 'சூட்டு'க்கு உத்திரவு கொடுக்கப்பட்டது. இம்மாதிரியாகப் பலவிதச் 'சூட்டு'க்களும், ரோடுகளும், கைக்கோல்களும், குடைகளும், தலைப்பாகை தொப்பிகளும், இன்னும் பல பொய்க்கோலப் பொருள்களும் ஆயத்தமாகும்படி 'மகராசா' திருவாய் மலர்ந்தருளினார். முடிவில் கணக்குப்பார்க்கச், சாமான்களின் விலைமட்டும் ரூ. 4572-8-9 ஆயிற்று. இந்தத் தொகைக்கு ஒரு பேரேட்டுப் புஸ்தகத்தில் 'வீரசங்கிலி' என்ற கைச்சாத்திடப் பட்டது. முந்திய மாலை தந்தி வரும்வரையும் நடந்ததுபோல், இதன் கீழ், 'நா. ச. மூ. ல. நாராயணன் செட்டி' என்ற ஜாமீன் கைச்சாத்து இப்பொழு திடப்படவில்லை. ஜமீன்தாரும் செட்டிமாரும் வண்டிக்குள் நுழைந்து, வண்டி புறப்பட்டு நாலடி போகு முன், "கோச்சுமான், நிறுத்து! நிறுத்து!" என்று கூவினார் ஜமீன்தார். "அய(ர்)த்துப் போச்சு, அய(ர்)த்துப் போச்சு," என்று சொல்லிக்கொண்டே கீழிறங்கி, கொணர்ந்து காட்டும் பொருட்டுத் தாமே வண்டிக்கும்

பண்டசாலைக்கும் கொண்டு கொண்டு ஏழுமுறை நடந்து, கடைசியில், 170—ரூபாவுக்கு ஒரு பநாரிஸ் புடவையும், 53—ரூபாவுக்கு ரவிக்கைகளும், 173 — ரூபாவுக்கு தாவணியும், 342—ரூபாவுக்குப் பாவாடைப் பட்டுக்களும் வாங்கிக்கொண்டு மீண்டனர். இவ்வண்டியுடன் சென்றால், கட்டில் மேஜை நாற்காலி முதலிய சாமான்களும், கடுக்கன், மோதிரம் முதலிய நகைகளும், குதிரைகள் வண்டிகளும், வெள்ளி தங்கங்களாற் செய்த பாத்திரங்களும் சடியாரங்களும், கையவன்மையும் மூளைவன்மையும் இல்லார் கைப்பணத்தை ஆவையுள்ளார் கைக்கு வரப் செய்வதற்கென்று ஏற்பட்ட பல விசித்திர விநோத சாமான்களும் விற்கப்படும் பண்டசாலைகளை யெல்லாம் பார்க்கலாம். கடைசியில் வண்டி கடற்கரையை நோக்கிச்செல்லும். அங்கும் உடன் செல்வது நமக்கு யோக்கியமன்று. இதுகாறும் கூடவிருந்த செட்டிமார் இருவருமே வழியில் நழுவி விடுகிறார்களே. அவர்கள் பேச்சிலிருந்து இன்றுமட்டும் 'மகாராசா' லக்ஷரூபாச் சாமான்களுக்கு 'வீரசங்கிலி'க் கைச்சாத்துத் தீட்டியதாகத் தெரியவருகிறது, நேற்று மூவாயிரம் ரூபா செலவாம்; அன்றியும், 'மகராசா'வுக்கு ஒரு யானை வாங்கும் பொருட்டு, ஒருவன் மைசூருக்கு ரயிலேறிப் போகிறானும். இத்தனை பண்டசாலைகளிலும், செட்டிமார் இருவரும், தமக்கென்று ஒரு பொருளுமே வாங்காதது ஆச்சரியமே. இவர்களை உத்தேசித்தே, மழுப்புத்தலையையும் பழுப்பு நிறை ஆடையையும் உலகத்தார் துறவின் குறிகளாக் கொண்டனர் போலும். இது நிற்க:

'வீரசங்கிலி மகாராசா' பகாரிஸ் பட்டும் கையுமாக வண்டிக்கும் பண்டசாலைக்கும் ஓடிக் கொண்டிருக்கும் பொழுது, கூவக்கரைமீதுள்ள கவர்னர் மாளிகை முன்னர், ஒரு குதிரை வண்டி வந்து நின்றது. இவ்வண்டியின் சாளரங்களும் மூடப்பட்டிருந்தன. வண்டிக்காரன் கீழே யிறங்கிக் கதவைத் திறந்தவுடன், ஒருவர் வண்டியினின்றும் குதித்து, விரைவாய் மாளிகைக்குட் சென்றார். ஒரு நாழிகைப் பொழுதில் இவர் திரும்பி வந்து வண்டிக்குள் நுழையவே, வண்டி புறப்பட்டு வேகமாகச் சென்று, திருவல்லிக்கேணியில் ஒரு வீட்டு வாயிலில் நின்றது. உள்ளிருந்தவர் இறங்கி வீட்டுள் நுழைய, வண்டி போய் விட்டது. அவ்வீட்டில் ஒரு வேலைக்காரனைத் தவிர வேறொருவருமில்லை. அவர் அவனைப் பார்த்து, "சுந்தரம்! எவராயினும் பார்க்க வந்தால், நான் வெளியே போயிருப்பதாகச் சொல்லி யனுப்பிவிடு; என்னை எவரும் தொந்தரவு செய்ய விடாதே. இரவு பத்துமணிக்குமேல் மாடிக்குச் சாப்பாடு கொண்டுவா" என்று சொல்லிவிட்டு, வேலைக்காரன், "மகாராசா புத்தி" என்று கூறி முடியுமுன், படியேறி மேல்மாடி சென்று கதவை மூடிக் கொண்டார். ஆயினும், கிரந்த கர்த்தருக்குரிய சுதந்தரத்தால், யாமும் உட்சென்றோமாக.

கதவை மூடித் தாளிட்டபின், ஒரு கட்டிலின்மேல் விழுந்து, இரண்டு கைகளாலும் முகத்தைப் பலமாய் மூடிக்கொண்டார். இவ்வாறு சில நிமிஷங்கள் கிடந்து, பின்பு திடீரென்றெழுந்து, உடுப்புக்களை யெல்

லாம் களைந்தெறிந்து விட்டுத், தோய்ந்துலர்த்தி யிருந்த ஒரு சிறிய வெள்ளை வஸ்திரத்தை மட்டும் அரையிலுடுத்திக் கொண்டு, ஆலோசனையி லாழ்ந்த வராய், அவ்வறைக்குள் உலாவத்தொடங்கினார். ஆ! ஆ! என்ன காம்பீரமும் களையும் இவர் முகத்தில் விளங்குகின்றன! சிறந்த சாஸ்திரப் பயிற்சியும், மனோவேகமும், நினைத்த வண்ணம் இயற்றவல்ல கைத் திறனும் பொருந்திய சிற்பியொருவன், பார்த்துப் பார்த்துச் செய்த மன்மதபிம்பம் போலன்றோ இவர் திவ்விய சரீரம் இருக்கின்றது; எலுமிச்சம்பழம் போன்ற நிறமும், புருஷமோகினியென்று கூறும்படி யான வடிவழகும், சிறந்த ஆரியர்க்குரிய முகவமைப் பும், லக்ஷணங்களும், இவருக் கெவ்வா றமைந்தன? ஒரு விப்பிரவிதவை முறைதப்பிப் பெற்று விடுத்துப் போன பெண்மகவை, மறவன் ஒருவ னெடுத் துவளர் க்க, அப்பெண்ணையே இவர் தந்தையார் மணம்புரிந் தன ரென்றுலாவும் வதந்தி, மெய்யே போலும். ஆகவே, ஆரியருக்குரிய உத்தமலக்ஷணங்களும், மறவருக்குரிய சரீரவலியும் திடமும், இவரிடத்து ஒருங்கமைந்தன போலும். வயது இருபத்து மூன்றேயாயினும், இப் பொழுதே கொஞ்சங்குறைய ஆறடியுயரமிருக்கின்றார்; ஸ்திரீகளைப்போல் முழுவதும் வளர்க்கப்பட்டிருக்கும் கரிய தலைமயிர், சுருள் சுருளாய்க் கழுத்தின்மேற்புர ண்டு அழகு செய்யும்படி கத்திரித்து விடப்பட்டிருக் கிறது; விசாலமான நெற்றியும், கன்னங்கரேலெனக் கறுத்தடர்ந்து வளைந்து நடுவிற் சிறிதுகூடிப் பிணங்

கும் புருவங்களும், அழகிய பெரிய கண்களும், நெற்றியின் கீழ்ப்பள்ளமின்றி யுயர்ந்து கூரிய நீண்ட மூக்கும், சிறிய மேல்மீசையும், வெள்ளிய ஒழுங்கான பல்வரிசையும், சிவந்த மெல்லிய உதடுகளும், சிறிய உள்வாங்கிய மோவாயும், கண்ணாடிபோன்ற கபோலங்களும், இன்னதென்று விவரிக்கமுடியாது. முகத்திற் பிரகாசிக்கும் திவ்யகளையும், வெகு மனோரம்மியமா யிருக்கின்றன; நெற்றிமட்டும் சிறிது சுருங்கி, மேல் மீசையுமின்றிக், கண்களில் சில சமயங்களில் திடீரென்று தோன்றும் வீராவேசநோக்கமும் இல்லாவிடின், ஓரழகிய ஸ்திரீயின் முகமென்றே சொல்லலாம் ; கழுத்தும் நீண்டுவளைந்து, அதற்கேற்கவிருக்கின்றது ; ஆனால், சரீரமெல்லாம் உத்தம புருஷலக்ஷணங்களே ; விசாலமான மார்பும், உயர்ந்து பருத்த புஜங்களும், சிறுத்த விடையும், அரியபலத்தையும் வன்மையையுங் குறிக்கும் அவயவங்களும், இவர் இடைவிடாச் சிலம்பப்பயிற்சி யுடையவ ரென்பதைக்காட்டுகின்றன.

ஒருமணி நேரம்வரை ஆலோசனையி லாழ்ந்தவராய், அங்கு மிங்கும் விரைவாக வுலாவினர் ; பின்பு கீழுதட்டைக் கடித்துக்கொண்டு, புருவங்களை நெரித்து, நெற்றியை இடதுகையாற் பிசைந்துகொண்டு, சிறிது நேரம் வெறித்து நின்றார் ; பின்பு எதையோ வெறுப்பார்போல், ' சீ ' யென்று சினந்து, பக்கத்தறைக்குட் புகுந்து, அங்கிருந்த பெரிய தண்டுக்கட்டை ஜோடியையெடுத்து, வெகுவிரைவாய்ச் சிலம்பம் பழகத்

தொடங்கினர்; அரைமணி நேரம் வரை யிவ்வாறு பழகிப், பின்பு குளிர்ந்த நீரினல் முகத்தையும் கை கால்களையுங் கழுவிக்கொண்டு, சிறிது களைப்புடனும், மனவமைதியுடனும், ஒருவிதப் புன்சிரிப்புடனும், தம் சிறிய மேல்மீசையைத் துடைத்து முறுக்கிக்கொண்டு, "ஈசன்செயல்" என்ற வார்த்தையுடன், எழுது மேஜை முன்னிருந்த ஒரு நாற்காலியில் வந்துட்கார்ந் தார். பின்னும் சிறிது நேரம் ஆலோசனை யிலாழ்ந்திருந்த பிறகு, கீழ்வரும் கடிதத்தை யெழுதத்தொடங் கினர்:

---

உ

முருகன் துணை.

திருவல்லிக்கேணி,

6-1-18....

மகா-ா-ா-ஸ்ரீ மஹாகனம் பொருந்திய அம்மான் வேலாயுதத் தேவரவர்களுக்கு, விஜயமார்த்தாண்டம் திக்கு நோக்கித் தெண்டனிட்டு விண்ணப்பம். திரு முருகன் கருணையினல் இவ்விடம் யாவரும் க்ஷேமம்; அவ்விடம் க்ஷேமத்துக்கு உடனே பதிலெழுதியனுப்ப உத்திரவாகப் பிரார்த்திக்கிறேன்.

ஈசன் அருளிருந்தவாறு இதற்குமுன் தெரிந் திருக்கலாமென்று எண்ணுகிறேன். நேற்று மாலையே எதிர்க்கட்சியார் புலிமலைக்குத் தந்தி கொடுத்து விட்ட தாகக் கேள்விப்பட்டேன். என் மனப் போக்கும் கொள்கைகளும் தங்களுக் கொருவாறு தெரிந்திருக்கு

மென் றெண்ணுகிறேன். எனக்கே ஜமீன் கிட்டு மென்று யாரும் பிறரும் நம்பி, நான் ஜமீன்தாராகவே பாவிக்கப்பட்டு வந்த காலங்களிலுங்கூட, என் சொந்தச் செலவு மாதம் இருநூறு ரூபாவுக்கு மேலாகவில்லை. ஜமீன் கிடைத்திருப்பினும், அவ்விதமே யிருந்திருக்கும். நேற்றுமாலை தந்தி கிடைத்த நிமிஷமே, அநாவசியமான சிப்பந்திகளை விலக்கி விட்டேன்; செட்டிமார்களும் நான் எதிர்பாராத வண்ணம் நலமாய் ஒதுங்கிவிட்டார்கள். நம்முடைய ஈந்தரம் மட்டுமே தான் இப்பொழுது வேலையிலிருக்கிறான். இப்பொழுதுள்ளபடி பட்டணத்திலேயே இருந்தாலுமே, எனக்கு மாதம் ஐம்பது ரூபாவுக்குமேல் செல்லாதென் றெண்ணுகிறேன். புறவூர்களில் இன்னும் செலவு குறையும். இந்தச் சொற்பப் பணத்தை எளிதிற் றேடிக் கொள்வேன். ஆகவே, ஜமீன் தவறிப் போனதைப் பற்றி, எனக்குப் பொறுக்க முடியாத மனவருத்தமில்லை. தந்தி வந்தவுடன், இடி விழுந்தாற்போல் சிறிது பிரமித்து விட்டேன்; சற்று நேரத்தில் மனந்தேறி விட்டது. ஆயினும், ஜமீன் தவறியதைப் பற்றி மூன்று விதமாக வருந்த முறுகிறேன்: மிகவுறுதியாக நம்பியிருந்தது கைதவறிப் போனது ஒன்று; என் சொந்தச் செலவுகளுக்கு வேண்டிய அற்ப திரவியத்தைத் தவிர, மிகுதி வரும்படிகளை யெல்லாம் ஜமீன் குடிகளைச் சீர்திருத்துவதிலும், நம்மவர்களுக்குள் படிப்பையும் நாகரீகத்தையும் பரவச் செய்வதிலும் செலவிட வேண்டுமென்று, நான் அவாவுற்றிருந்த எண்ணங்களெல்லாம் பாழாய் முடிந்தது ஒன்று; தாங்களும், என் மாமியும்,

தங்கள் குமாரத்தி சிவகாமியும், நான் ஜமீன் பட்டத்
துக்கு வருவே னென்று எதிர் பார்த்திருந்தது
நிறைவேறாமற் போனது ஒன்று. குழந்தைப் பருவத்
திலேயே தாய் தந்தையரை யிழந்து, உடன் பிறந்தா
ருமின்றி, அந்நியரால் வளர்க்கப் பட்டு வந்த துர்பாக்கி
யனான என் விஷயத்தில், மனவருத்த மடையக் கூடிய
வர்கள், மஹாராஜா அவர்கள் இறந்த பின்னர், தங்க
ளைத் தவிர வேறொருவருமேயில்லை. என் மனத்தை
ஒருவாறு சமாதானஞ் செய்து கொண்டு விட்டேன்,
தங்கள் பொருட்டே என் முக்கிய மனவருத்தம். ஆயி
னும் ஒரு விதத்தில் சந்தோஷப் படுகிறேன். ஜமீன்
தாராகப் பாவிக்கப்பட்டு வந்த பொழுது தங்கள்
மகளை மணம் புரிந்திருந்து, பின்பு இத்துன்பம் நேர்ந்தி
ருப்பின், எனக்குப் பொறுக்க முடியாத மனக்கிலேச
முண்டாயிருக்கும். முருகக்கடவுள் அருட்பேற்றால்,
அக்கிலேசம விலகியது. கைகடந்ததைப் பற்றி அதிக
மாய்ப் பேசுவதிற் காரியமில்லை, பாலியமுதலே நாங்
கள் விளையாட்டு நேசர்களாயிருந்ததும், தங்கள் மகள்
மேல் எனக்குள்ள பெருங்காதலும், அவள் என்மேற்
கொண்டிருக்கும் அன்பும், தங்களுக்கு நன்குதெரிந்த
விஷயங்களே, இதுவரை மணம் நிறைவேறாதது
என் பிடிவாதத்தினாலேயே. இப்பொழுது சங்கதி
ஒருவிதமாய் முடிந்துவிட்டபடியால், இனித்தாமதிக்க
முகாந்தரமில்லை. எதிர்க் கட்சியார் இந்த மாதக்
கடைசியில் அவ்விடம் வந்து ஜமீனை யொப்புக் கொள்
ளப் போவதாகக் கேள்வி. அவர்களை நேரிற் சந்திப்
பது விலக்க வேண்டிய விஷயமே. ஆதலின், அத

ற்கு முன்னமே கலியாணத்தை முடித்துக் கொண்டு வெளியேறிவிட எண்ணுகிறேன். தாங்களும் இனி அவ்வூரிலிருப்பது தகுதியன்று. குடும்ப சகிதம் என் னுடன் வெளிவந்து விடுவதே சரி. இவ்வாறெழுது வதால் என்னிடம் ஏராளமான பணமிருப்பதாகத் தாங்களெண்ணக்கூடும்; அப்படியன்று; தற்காலச் செலவுக்கு வேண்டிய சொற்ப திரவியத்தைத் தவிர, என்னிடம் ஒரு காசும் கிடையாது. நகைநட்டுக்களை யும் வெள்ளிப் பாத்திரங்களையுங்கூட உரியவர் வசம் ஒப்புவித்து விட்டேன். ஜீவனோபாயத்தின் நிமித்தம், இன்று மாலை, கருணாசாகரமாகிய நமது கவர்னரவர் களைப் போய்க்கண்டு, என் விருத்தாந்தத்தை யெல் லாம் அவர்களிடஞ் சொன்னேன், அவர்கள் வெகு பொறுமையுடன் கேட்டு, மிக்க அநுதாபங்காட்டி, முடிவில் எனக்கு ஒரு டிப்டி கலெக்டர் வேலை கொடு ப்பதாக வாக்களித்திருக்கிறார்கள். இதுவும் ஈசன் அருளே. இன்னும் ஒரு வாரத்தில் உத்திரவு வந்து விடும். வேலையை ஒப்புக்கொண்டது முதல் மாதம் 250 ரூபா சம்பளம் கிடைக்கும். இது நமக்கு ஏரா ளமே; ஜமீனே கிடைத்திருப்பினும், இதற்குமேற் சொந்தச் செலவிருந்திராது. ஆகவே, பணவிசாரம் இல்லவேயில்லை. நான் அங்கேபுறப்பட்டு வருகிறதோ, தாங்கள் எல்லோருமே இங்கு வந்து விடுகிறதோ, எதற்கும் தங்கள் பதிலை மறுதபாலில் எதிர்பார்க்கி றேன். நம்மை விசேஷமாகத் தெரியாத வடஜில்லாக் களில் வேலைகொடுப்பதாயும், கவர்னரவர்கள் வாக்களித் திருக்கிறார்கள். உடனே பதிலெழுதவேண்டுகிறேன்.

மாமியவர்களுக்கு என் தெண்டனளிக்கப் பிரார்த்திக்கிறேன். முருகன் துணை.

இப்படிக்குத் தங்கள் பணிவுள்ள
விஜயமார்த்தாண்டம்.



இக்கடிதத்தை யெழுதி முடித்து விலாசமெழுதியபின், மேஜையின் மேலிருந்த ஒரு மணியை யடித்தார்; சுந்தரம் உடனே வந்து கதவைத் தட்டினான்; தபாலிற் போடும்படி அவன் கையிற் கடிதத்தைக் கொடுத்துவிட்டு, யாரும் தன்னைத் தொந்தரை செய்ய வரவில்லையென்று தெரிந்துகொண்டு, அவனைச் சாப்பாடு கொண்டுவரச் சொன்னார். இக்கடிதத்தைப் படித்தவர்கள், வேலாயுதத்தேவரும் நன்கு கற்றவரென நினைப்பாராயின், அது முற்றிலும் தவறாகும். அவர், சொற்ப விவசாயமுள்ள குடித்தனக்காரர்; தற்குறி நபர், வியாச்சியந் தொடங்கி நமது கதாநாயகர் சென்னை வந்த பின்புதான், அவர் வாழ்நாளில் அவருக்கு முதல் முதல் கடிதம் வரத் தொடங்கியது; வந்த சில கடிதங்களை, அவர் மகள் சிவகாமி வாசித்துச் சொல்வது வழக்கம். முதலில் தம்மகளைப் படிப்பிக்கச் சிறிதும் இணங்கிலரெனினும், நம் கதா நாயகர் தொந்தரவுக்கு இசைந்தும், அவர் ஜமீன்தாராக வரக் கூடுமென்பதைக் கருதியும், அவர்பாற் காலஞ் சென்ற ஜமீன்தார் வைத்திருந்த பிரீதியினிமித்தமும், அவர் உடம்பட்டார். அவர்

மட்டிலும், படிப்பில்லாத ஒரு சாதாரண ஏழைமற வரே. ஆகவே, அதிபுத்திசாலியாகிய நமது கதா நாயகருக்கு, தாமெழுதிய கடிதத்தின் கருத்துக்கள் பெரும்பாலும் தமது "அம்மான்" மூளையில் சிறிதும் ஏறாதென்பது, நன்கு தெரிந்திருக்க வேண்டும். அங் ஙனமாயின் ஏன் இவ்வளவு எழுதினரோ? எல்லாம் காதற்கூத்தே: தம் இன்னுயிர்க் காதலியாகிய சிவகாமி பார்த்து மனந்தேறி, தன் தந்தையை இணங்கச் செய் வாளென்ற உட்கருத்தன்றோ இவ்வாறெழுதத் தூண் டியது. உற்றுப் பார்த்தால், உலகமெல்லாம் எவ் விதம் நோக்கினும் ஒரு பெரிய நாடகமே; அதிகப் பொய்ம்மையின்றி, நமது பாகத்தை யாடிக் கழிக்க, "ஆநந்த நடேசர் அருள்புரிவராக."

சற்று நேரத்தில் சுந்தரம் சாப்பாடு கொண்டு வந் தான். வேலைக்காரனேயெனினும், இச்சுந்தரம் நன்கு கவனிக்கத் தக்கவன். அவனுக்கும் வயது இருபத் தைந்துக்கு மேலிராது; குலத்தை யுத்தேசித்து, அவ னும் சுந்தர புருஷனே. அவனுக்கும் நம் கதாநாய கருக்கும்முதற்கண் பரிசியமுண்டான விதம்விந்தையே இவர், படித்துக் கொண்டிருக்கும் பொழுது ஒரு நாள், தெருவில் பெருங் கூக்குரற் கேட்டு வெளியே வந்து பார்க்க, ஜமீன்தாரின் வேட்டை நாய்களிலொன்று வெறி பிடித்துச் சுந்தரத்தைத் துரத்திச் செல்வதை யும், அவன் தன்னுடம்பு தெரியாது பயந்து உளறிக் கூக்குரலிட்டுக்கொண்டு பிட்டங்களிற் குதிகளடிக்க ஓடுவதையும், அக்கம்பக்கம் ஜநங்கள் கைகொட்டிச்

சிரித்து நாயை உற்சாகப்படுத்தி வேடிக்கை பார்த்து நிற்பதையுங்கண்டு, திடீரென்று பாய்ந்து, அந்த நாயின் முகத்தைப் பிடித்து, உத்தரீயத்தாற் பலமாய்க் கட்டி யடக்கிவிட்டார். இதை யறியாது ஓடிய சுந்தரம் கற்றடுக்கிற் றடுக்கிவிழுந்து பயத்தினாலும் களைப்பினாலும் மூர்ச்சையாகிவிட்டான். மூர்ச்சை தெளிந்த பின்னர் நடந்ததை யறிந்து, தனக்குயிரளித்துக் காப்பாற்றினவராக இவர் கால்களில் விழுந்து, அது முதல் இவரிடத்துக் கரைகடந்த பக்தியும் விசுவாசமும் பாராட்டி வந்தான். இவர் வியாச்சிய விஷயமாக வெளிப்புறப்பட்டவுடன், அவனும் இவருடைய உரிமையான சொந்த வேலைக்காரனாகப் புறப்பட்டான். ஒத்த பிராயத்தாலும், உண்மையான ஊழியத்தாலும், நாளுக்கு நாள் அந்தரங்க விசுவாசமும் வாஞ்சையும் அதிகரித்து, இப்பொழுது ஒருவருக்கொருவர் இன்றியமையாத் துணைவர்களாய் விட்டனர். வேறெப்பொழுது எந்த வேலை யிருப்பினும், சாப்பாட்டு வேளைகளிலெல்லாம், நம கதாநாயகர் சுந்தரத்துடன் சிறிது நேரம் பக்ஷமாயும் மெய்யன்புடனும் பேசுவது வழக்கம். இன்று நடந்த சம்பாஷணை கவனிக்கத்தக்கது

விஜயமா: என்ன, சுந்தரம்! நம்முடைய ஜமீன்வாழ்வெல்லாம் முடிந்துவிட்டதே; இனியுன் ஆலோசனை யென்ன?

சுந்தரம்:—நாய்க்குட்டி சாகும் வரை ஊழியனே; மகாராசா உத்திரவுப்படி நடக்கக் காத்திருக்கிறேன்.

விஜயமா:—முதல் உத்திரவு, இனி 'மகராசா' என்று சொல்வதை விட்டுவிடவேண்டும். இனி வீரசங்கிலித் தேவர்தான் மஹாராஜா.

சுந்தரம்:—அந்தநாய் எப்படிப்போனாலும் சரி; நாய்க் குட்டிக்கு எசமான்தான் மகராசா.

[வேட்டை நாயைச் 'சூவிட்டு' வேடிக்கைபார்த்தவர்களில், வீரசங்கிலித்தேவ ரொருவர்.]

விஜயமா:—சரி, அதிருக்கட்டும்; உனக்கேதாவது புத்தி தட்டுப்படுகிறதா?

சுந்தரம்:—நானும் இராத்திரியெல்லாம் உறங்காமே யோசித்தேன். மகராசா கோபியாமலிருந்தால் சொல்லுகிறேன்.

விஜயமா:—என்ன, சொல்லு கேட்போம். ஜமீன் கிடைத்துவிடுமோ?

சுந்தரம்:—மகராசாவுக்குக் கோபம் வருமே.

விஜயமா:—இல்லை, சும்மா சொல்; பயப்படாதே.

சுந்தரம்:—மகராசா இங்கே ஒரு மாசத்துக்குச் சும்மா விருங்கள்; இந்த மாச இறுதியிலே அவர் புலிமலை போகிறாராம்; நேற்றுச் சொக்கன் சொன்னான். நானும் போகிறேன். அங்கே வீரமாகாளியிருக்கிறான்; அவன் தான் இப்போது கொள்ளைத் தலைவன்; மகராசா பேரைச் சொன்னால் உயிரையும் கொடுத்திடுவான்; பத்து நாளையிலே இந்த வீரசங்கலித் தேவரை

வேலையைச் சாய்த்துவிட்டு வந்துவிடுகிறேன்; அப்புறம் மகாராசாவந்து ஜமீனை வாங்கிக்கொண்டு, சுகமாய் சிவகாமித்தாயோடிருந்து, அடியோங்களை வைத்துக் காப்பாற்றலாம்.

விஜயமா:—[புன்சிரிப்புடன்] ஆமாம். இது நல்ல யுக்திதான்; ஆனால், வீரசங்கிலிதேவரைச்சுற்றி எப்பொழுதும் வேட்டைநாயிருக்குமே, நீ என்னசெய்வாய்?

சுந்தரம்:—பார்த்தீர்களா, பார்த்தீர்களா, இன்னும் சும்மா கேலி பண்ணுகிறீர்களே. இந்தப் புழுத்த நாய்க்குட்டிக்காக, மகாராசா, உயிரைப் பாராமே, அந்த வெறிபிடித்த பிசாசைப்போய்ப் பிடித்த பிறகு, இந்த நாய்க்குட்டிக்கு உயிர் கருப்புக்கட்டியா? வேண்டுமென்றாலும் பாருங்கள்: நானே மகாராசா உத்திரவு கொடுத்தால், காட்சி பங்களாவிலே புலியறைக்குள்ளே கையை நீட்டுகிறேன்.

விஜயமா:—ஆனால் பிரன்தானா, அதை நானே சோதித்து விடுகிறேன். கொலை எப்படியும வெளியாய்விடுமே; உன்னையும் வீரமாகாளியையும் தூக்கிவிட்டு விடுவார்களே?

சுந்தரம்:—மகாராசா பெரிதா? நாய்க்குட்டிகள் உயிர்பெரிதா? மகாராசா உப்பை நாங்கள் தின்னவில்லையா? நாய்க்குட்டிகளுக்காக மகாராசாவே உயிரை வெறுத்து அடியோங்களைக் காபாற்றவில்லை? நாங்கள்போனால்,

எங்கள் குஞ்சுகுழந்தைகள் மகராசா அடைக்கல மில்லே?

விஜயமா:—சரி, வெகு சந்தோஷமாயிற்று. என் னிடத்தில் ரூபா இல்லேயே: இந்த ஸ்திதியில் கடன் கேட்பது தகுதியில்லேயே; நான் இன்னும் இரண் டொரு மாதம் இங்கென்னமாயிருப்பது? உனக்கு ரயிலுக்குப் பணமெங்கே? இதற்கென்ன வழி?

சுந்தரம் சிறிதுநேரம் ஆலோசித்தான்; பின்பு வெகு கூச்சத்துடனும் பயத்துடனும் சொன்ன தாவது:

சுந்தரம்:—மகராசா கோபித்துக் கொள்ளக் கூடாது; நாய்க்குட்டி தெரிந்தும் தெரியாமலும் உளறும். ஒரு நாள் நன்றாய்ச் சமைத்ததற்காகப் பெரிய மகராசா அவர்கள் போட்ட தங்கத் தோடா இருக்கிறது; அதை எண்பது ரூபாவுக்கேனும் விற்க லாம்; அந்தப் பணத்தை வைத்துக்கொண்டு மகா ராசா இருங்கள். நான் நாளேயே கால்நடையாய்ப் புறப்பட்டு விடுகிறேன். இருபது நாட்களிற் போய்ச் சேர்ந்துவிடுவேன். நான் போய்ச் சேருவதும் வீர சங்கிலித்தேவர் வருவதும் சரியாயிருக்கும்—"

இதற்குள் நம் கதாநாயகருக்குக் கண்களில் நீர் ததும்பிவிட்டது. "என் சுந்தரமுள்ளமட்டும் எனக்கு ஒரு குறையுமில்லே" என்று சொல்லி, அவனேப் பல வாறு புகழ்ந்து, தம் ஆலோசனையையும், தாம் டிப்டி கலெக்டர் ஆகப்போவதையும் அவனுக்குத் தெரி

வித்து, அவனைச் சந்தோஷிப்பித்து, அவன் தூர்ப் புத்தியையும் மெதுவாய்க் கடிந்தார்.

---

## இரண்டாவது அதிகாரம்.

---

கஷ்டகாலத்தில் இஷ்டனை யறி.



நமது நண்பரில் ஒருவருமே புலிமலையைப் பார்த்திராரென எண்ணுகின்றோம். அம்மலை, ஒரு குறிஞ்சி நிலச்சிற்றூர்; ஜமீன்தார் அரமனைகளையும், அவர் பரிவாரங்களின் வீடுகளையும், ஒரு சிறிய தபாலாபீஸையும், முருகன் குன்றின்மேலுள்ள கோயிலையுந்தவிர, வேறு விசேஷமாய் ஒன்றும் அங்கே கிடையாது. இதனால், அவ்வூர் ஜமீன்தார்கள், பொதுவாய்ச் செஞ்சாலியிலைப் பட்டணத்திலேயே வசிப்பது வழக்கம். இதுகாறும் ஜமீனையாண்டவர்கள், நாகரீக சௌகரியங்கள மலிந்த இடத்துக்குத் தாம் போகும் சுலப வழியை நாடினரே யன்றி, அச்சௌகரியங்களைத் தம் மூரிற் குடியேற்றி விருத்திசெய்து, பிறருடன் பகிர்ந்தநுபவிக்கும் சிரம வழியை, ஒருவரும் நினைந்திலர். புதிதாக அவ்வெண்ணங் கொண்டிருந்தவருக்கும், அவ்வூரின் பாக்கியக் குறைவால், ஜமீனில்லையென்று போயிற்று.

இப்பொழுது அவ்வூரில் வசிப்பவர்களில், வேலாயுதத் தேவர் குடும்பத்தாரும், போஸ்ட்மாஸ்டருமே, நாம் கவனிக்கவேண்டியவர்கள். தேவர் குடும்பத்தினரைப்பற்றிப் பின்பு தெரியவரும். போஸ்ட் மாஸ்டர் சுப்பையரைப்பற்றிச் சிறிது விசாரிப்போம்: இவருக்கிப்பொழுது ஐம்பது வயதிருக்கலாம்; ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, ஹிந்துஸ்தானி, மலையாளம், ஆகிய ஐந்து பாஷைகளிலும் பேசத் தெரிந்தவர்; முதலிரண்டு பாஷைகளில் எழுதப் படிக்கவுந் தெரியும்; தமிழில் மிகத்தேர்ந்த புலவரென அவ்வூரார் அபிப்பிராயம்; முப்பது வருஷங்களுக்கு முன், தெருத்திண்ணைப் பள்ளி உபாத்தியாயராகவும், அப்பொழுதிருந்தஜமீன்தாரின் சிநேகதாசராகவும், இவர் அவ்வூரிற் குடியேறினர். ஜமீன்களில் தான் சிநேகதாச வருக்கத்தை விசேஷமாய்க் காணலாம்; இவர்களிற் பெரும்பாலார்க்குச் சம்பளம் கிடையாது; வேலையும் இன்னதென்று கிடையாது. ஒரு வேளை ஜமீன்தாருடன் ஏகாசனத்திருந்து சவாரி வருவார்கள்; ஒரு வேளை அவர் பின் செம்பில் நீரெடுத்துச் செல்வார்கள்; ஒரு சமயம், கவர்னர் முதலிய பெரிய உத்தியோகஸ்தர்களைக் காணச் செல்லும் பொழுது உடன் செல்வார்கள்; ஒரு சமயம் சுந்தரமூர்த்திக்கு ஆரூர்ப்பெருமானரியற்றிய தொழிற்குடன் பட்டுச் செல்வார்கள். ஜமீன்தார்கள் இவர்களை நடத்துவதும் அவ்வாறே: ஒருகால், "அவர்கள்" பட்டம்; ஒருகால், "பயல்" "பறட்டை", மரியாதை; சிலவிடங்களில் ஜமீன்தார்களுக்கு முன் இவர்களுக்கு விருந்து; சில விடங்களில் வெறும்வாயையென்று

உமிழ் நீரை யருந்துவதே. இத்தகைய திரிசங்கு ஸ்தானத்தில் சுப்பையர் முதலிற் புளிமலைக்கு வந்தார். சர்வசிலாக்கியமான எத்தனையோ இரத்நங்கள், சாகரத்தின் கீழுள்ள அகாதமான இருண்ட குகைகளிலும், திவ்ய பரிமளமான எத்தனையோ புஷ்பங்கள், நிர்மாநுஷியமான வனங்களிலும் வாளாவிருந்து, தங்கள் மேன்மை வெளிப்படாமலே கழிகின்றமைபோல, உத்தம கவிகளாகவும், யுத்தவீரர்களாகவும், மந்திர சிரேஷ்டர்களாகவும், நிலைகலங்காத் தேசாபிமானிகளாகவும் விளங்கிக் கீர்த்தி பெறவல்ல எத்தனையோ மாந்தர், அவசிய சாதகங்களும் தக்க சமயங்களும் வாய்க்காமே, வாணுட்களை வீணுட்களாகக் கழித்து, இருந்தவிடம் தெரியாமே மடிந்துபோகிறார் களென்று, ஓராங்கில கவி கூறியுள்ளார். அஃதெவ்வாறுயினும், நமது சுப்பையருக்கு மட்டும் தக்க சமயம் கிடைத்திருப்பின், அவர், அதிசூழ்ச்சியும் சாமர்த்தியமு முள்ள இராஜ்யபரிபாலன தந்திரியாய் விளங்கியிருப்பா ரென்பது நிச்சயம். சில செய்கைகளை, ஒரு சாதாரண மனிதன் செய்தாற் கொடுந்தண்டனைக் கேற்ற கொலை, களவு, கொள்ளை, வியபிசாரம், வீட்டில் நெருப்பிடல் ஆதிய அதிபாதகங்களாகவும்; முடி தரித்த மகிபன் ஒருவன் செய்தால், பரணிபாடிப் புகழற் கேற்ற படையேற்ற விஜயமாகவும், உலகம் மதித்தல் போல, 'குண்டுணி' என்றும், 'குறும்பு' என்றும், 'மித்திர பேதம்' என்றும், 'சுயலாபதிருஷ்டி' என்றும், 'நம்பிக்கைத் துரோகம்' என்றும், 'வேலைக்குத் தக்க வேஷம்' என்றும், 'மானமின்மை' யென்றும், பலவாறுக ஏழைப்

போஸ்ட் மாஸ்டர் சுப்பையர் ஜீவனோபாய விருத்தி களைப் பழித்த உலகம், அவர்மட்டும் ஒரு பெரிய மந்திரியாகவேனும் ஒரு திவானாகவேனும் இருந்திருப்பின், மிகவியக்கத்தக்க அவர் சாமர்த்தியத்தைக் கண்டு களிப்புற்று, எவ்வித உயர்பதவியும் பட்டங்களும் அவருக்கு மேலான வல்லவென்றே மதித்திருக்கும். உண்மையில், அவர் மிக வல்லவர்; அவர் சாமர்த்தியமெல்லாம் புலிமலையிலேயே புதையுண்டு போனது ஊழ்வசமே. அவ்வூரிலுள்ள லௌகிக பிராமணர்களுக்குள், ஜமீனில் மாதச் சம்பளமில்லாதவர் அவரொருவரே; அவருடைய பள்ளிக்கூடத்திற்கோ பகிரங்க வாழ்விலும் கிரகண வாழ்வேயதிகம்; தபாலாபீஸ் உத்தியோகம் வந்து ஐந்து வருஷங்கள் தாம் ஆயின. மாதம் நான்கு ரூபாய்க்களே சம்பளம். இங்ஙனமிருந்தும், அவர் குடும்பச் செழிப்புக்குக் குறைவேயில்லை. புலிமலைக்கு வரும் பொழுது, அவரும், அவர் தாயாரும், அவர் பத்தினியாரும் மட்டும் வந்தார்கள். மேயப் போகும் மாடோ கொம்பிற் புல்லைக் கட்டிக் கொண்டு போகாது. இப்பொழுது அவர் குடும்பத்தைக் கணக்கிட இரண்டு கை விரல்களும் போதாவாயினும், நகைமட்டும் இரண்டு மூவாயிரம் ரூபாவுக்கு மேலுண்டு; அன்றியும், பெருநத்தத்திற் பதினயிர ரூபாவுக்கு நிலம் வாங்கி யிருக்கிறார்; பணம் கொடுக்கல் வாங்கல் கணக்கு நமக்குத் தெரியாது. இவ்வளவும் சுய சம்பாத்தியமே; மூளை வியர்க்கப் பாடுபட்டுத் தேடிய பொருளே. ஆனால், இதில்

மிகச் சிறுபாகமே யோக்கிய வழியிற் றேடியதாகக் கொள்ளலாம்.

> "செய்க பொருளை : செறுநர் செருக்கறுக்கும்
> எஃகதனிற் கூரிய தில்"

என்ற குறளை மட்டும் ஐயர் கைகொண்டாரேயன்றி,

> "ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
> சான்றோர் பழிக்கும் வினை"

என்றதைக் கருதிலர். ஆனால், நீதி பெருத்து மதி சிறுத்துள்ள ஜமீன்களிலும், அவை போன்ற பிற இடங்களிலும், எவர் நாம் யோக்கியமாய்ப் பணந் திரட்டியவர்? யோக்கியமாய்க் காலங் கழிந்ததலே இவ் விடங்களில் கிட்டத்தட்ட அசாத்திய மாயிருக்கப், பணந்திரட்டுதல் எங்ஙனங் கூடும்? கடமைகளிவை யெனத் தெளிவாய் வரையறுக்கப் பட்டு, அவனவன் கடமையை அவனவன் பிறரைவாதிபாராது நிறை வேற்ற வழியிருந்தாலன்றோ, யோக்கிய விருத்தி சாத தியமாகும்? அவ்வாறின்றி, பெரும்பாலும் புத்தியீன னான ஒருவனது நிலையற்ற மனோபீஷ்டங்களை, எவ்வித த்தாலும் நிறைவேற்றி, அவனைச் சந்தோஷிப்பிப்பதே எல்லோருக்கும் ஒரே கடமையாயும், அதைச் செலுத் துவதில் ஒருவனோடொருவன் பலவாறு முரணிப் பணஞ் சம்பாதிக்க வேண்டியதாயுமுள்ள இத்தகைய விடங்களில், யோக்கியதை செல்லாக்காசே. ஆகவே, நற்சமயமும் நற்சகவாசமும் நல்விருத்தியும் வாய்த் திருப்பின், சுப்பையர், தம் அரிய சாமர்த்தியத்தை நல்

வழியிற் செலுத்தி, கியாதி பெற்றிருக்கக் கூடுமாயி
னும், இப்பொழுது, வார்த்தவத்தில், எட்டு (அ) யோக்
கியதைகளும் நிறைந்தவராகவே யிருந்தார். அவர்
ஆழ்ந்த புத்தியுடையவராதலில், எப்பொழுதும், முன்
பின் நன்று ஆலோசித்து, அணுவளவேனும் அபாயம்
வரக்கூடிய விடத்தில், வேறு பெரியதோர் இலாபம்
கிடைப்பதாயிருந்தாலன்றி, அப்பிரியம் நேரிடாது நட
ந்துகொள்வதே வழக்கம். ஆயினும், காலஞ் சென்ற
ஜமீன்தார் நமது கதா நாயகரைத் தமது புத்திரனைப்
போலவே நடத்தி வந்ததனாலும், அவரே
பின்பு ஜமீன்தாரானவரான நம்பியும், அவ்வாறே
இரண்டு வருஷங்களுக்கு அவர் பெருமானவரால
மதிக்கப்பட்டிருந்ததனாலும், தாழ்ந்த குணத்த
வருடன் பழகின் அவருடைய அவமதிப்புண்டாகு
மென நினைந்தும், தம்மிடத்து முதலிற் சில
காலம் அவர் கல்வி பயின்று வந்த அபிமானத்
தாலும், சுப்பையர், நாளாவட்டத்தில் வீரசங்கிலித்
தேவரை அசட்டைசெய்து, அவர் அப்பிரியத்தைச்
சிறிதுற்றிருந்தார். இப்பொழுது திடீரென்று கிடை
த்த தந்தி சமாசாரத்தைக் கேட்டவுடன், சுப்பையரும்
சிறிது திகைத்துக் கலங்கிவிட்டார். புது மகராஜா
ஆட்சியில், புலிமலையில் தங்குவது புத்திக்குறைவாக
வே தோன்றிற்று. ஆயினும், வெகு வருஷங்களாக
ருசிகண்ட பூனை, எவ்வாறு விட்டுப்போக மனம் இசை
யும்? ஒருநாள் முழுவதும் ஐயருக்குச் சாப்பாடுகூடச்
செல்லவில்லை; தம்மை ஆதரிக்கக்கூடியவருக்கு ஜமீன்
கிடைக்கவில்லையே என்ற விசனத்தாலன்று; தம்மேற்

பிரியமிலார்க்குக் கிடைத்துவிட்டதேயென்ற மநவேக் கத்திஞலேயே. பின்பு சிறிது மநத்தைத் தைரியப் படுத்திக்கொண்டு, எவ்வாறு புது 'மகாராசா' வின் பிரி யத்தை யடையலாமென்று ஆலோசித்துக்கொண்டிருந் தார்.

போஸ்ட்மாஸ்டர் சுப்பையர் இவ்வாறுலோசித் துக்கொண்டிருக்கையில், இரண்டு மூன்று தினங்கழித் து, தபாலில் வேலாயுதத்தேவர் விலாசத்துக்கு ஒரு கடி தம் வந்தது. ஜமீன்தார் ஊரிலில்லாத காலங்களில், பெரும்பாலும் தபாற் பை வெறும் பையாகவே வரும். வியாச்சியம் தொடங்கி, விஜயமார்த்தாண்டத்தேவர், செஞ்சாலியினை, சென்னை முதலிய விடங்களுக்குச் செ ன்ற பின்னர், மாதம் இருமுறை, மும்முறை அவரிட மிருந்து வேலாயுதத் தேவருக்குக் கடிதங்கள் வருவதுண்டு; அவைகளெல்லாம் முறைப்படி கொடுக் கப்பட்டு வந்தன. இப்பொழுது விஜயமார்த்தாண்டத் தேவர் கையெழுத்தில் விலாசம் வரையப்பட்டு வந்த கடிதம் எதைப்பற்றியது என்பதையறிய, போ. சுப்பையருக்கு அடக்க முடியாப் பேரவா உண்டா யிற்று. பிணநாற்றம் கழுகுக்குத் தெரிவதுபோல, அக்கடிதத்தால் நமக்கு நன்மையுண்டாகக் கூடுமென்று அவர் உள்ளத்தில் ஒரு முன்னுணர்ச்சி தோன்றியது. உடனே, தபாற்காரன் கேட்டதற்குத் தமக்கு வந்த தென்று சொல்லிவிட்டு, விரைவில் வேலையை முடித்து அவனை யனுப்பியபின், முன் கதவைத் தாளிட்டுக் கொண்டு, மெதுவாய் மேற்பையைப் பிரித்து, முந்திய அதிகாரத்தில் வரைந்துள்ள கடிதத்தை வாசித்தார்.

திரும்பவும், திரும்பவும் மும்முறை வாசித்தார். பின்பு நாற்காலியிலிருந்த படியே கையும் கடிதமுமாக வெகு நேரம் ஆலோசனையிலாழ்ந்திருந்தார். நல்லெண்ணமும் தீயவெண்ணமும் அவர் மநக்களத்தில் வெகு நேரம் போராடின. இத்தறுவாயில், அவர் மகள் பார்வதி யென்ற ஒன்பது வயதுப் பெண்ணின் சத்தம் வீட்டுள் ளிருந்து கேட்டது. அதனாற் பிறந்த நினைவில், அவர் மநம் சிறிது நேரம் அவள் விவாகத்தையும், அதற்கு இரண்டாயிரம் ரூபா வேண்டுமென்பதையும், தேடிய கைப்பொருளைச் செலவிடுவதன் மதியின்மையையும் பற்றி ஆலோசிக்கலாயிற்று; பின்பு, முன் யோசனைக்குத் திரும்பியபொழுது, தீச்சிந்தை மேலிட்டு விட்டது. தம் பழைய நண்பருக்கு உண்மையாக நடந்தால், முப் பது வருஷங்களாக வாசஸ்தலமாகவிருந்து ஏறக் குறைய அரை லக்ஷ ரூபா வரை ஆஸ்தியும் தந்த ஊரைத் துறந்து, புதிதாயோர் ஊருக்குப் போய்க் குடியேற வேண்டியது மன்றிச், சமீபத்தில் யாதொருவித நன்மையும் கிடைப்பதாயில்லை; தம் நண் பர் ஜமீனை யடைந்திருந்தால், தமக்கு முன்போல் ஒரு பொழுதும் கொள்ளை கிடைத்திராது; அவராக மன மிசைந்து உதவும் சொற்பப் பொருளே கிடைத்திருக் கும்; இப்பொழுது, அவரே ஜீவனோபாயத்தை நாடி விழித்துக் கொண்டிருக்கையில், தாம் அவர் மூலமாக இலாபம் அடைய எதிர் பார்த்தல், உரல் மத்தளத்தி னிடம் தன் கஷ்டத்தைக் கூறச்சென்றது போலாகும்; அன்றியும், அவருக்குத் தம்மாலாகக்கூடிய பேருதவி

யொன்றுமேயில்லை; தாமிழைக்கக் கருதும் அற்புத தீங்கு, அவருக்கு நன்மையாகவே முடியினும் முடிய லாம்; அன்றேல், அகஸ்மாத்தாகவேனும், பிறராலே னும் நேரிடவும் கூடும். இது நிற்க; அவரைத் துறந்து வீரசங்கிலித்தேவர் பிரியத்தை எவ்விதமாயினும் சம் பாதித்துக் கொண்டால், முதலில், ஊரை விட்டுப் போக வேண்டாம், இரண்டாவது, கைச்செலவின்றிக் குழந்தை பார்வதி கலியாணம் நிறைவேறும்; மூன்று வது, நாளாவட்டத்தில், முன்னிலும் அதிகமாக ஜமீன் சொத்தைக் கொள்ளையடிக்கலாம்; கடைசியில், ஒருவேளை தம் செல்வாக்கினால், தம் பழைய நண்பருக் கும் ஏதாயினும் நன்மை செய்யக்கூடும். நீதி, அநீதி, மெய், பொய் என்பதை யொதுக்கி, இலாபம், நஷ் டம், சாதகம், பாதகம், என்பதை மட்டும் கணக்குப் பார்க்கத் தொடங்கி விட்டால், பின்பு வண்டி வண்டி யாய் நியாயங் கூறலாம். இவ்விதமாகத் துணிவுற்ற பின், ஐயர் மனம் வெகு வேகமாய்ப் பின் யோசனை களிற் புகுந்தது. காமதுரராகிய வீரசங்கிலித்தேவர் பிரியத்தையும் நம்பிக்கையையும் ஒழுங்கு பெற, அவ ரது கொடிய பகைவராகிய விஜயமார்த்தாண் டத் தேவர் சிநேகத்தைத் துறந்து, இவருக் கென்று குழந்தை முதல் வளர்ந்து வந்த திவ்யசௌந் தரியமுள்ள கன்னிகையை அவருக்கு மணம் புரிவித் தலே தக்க உபாயம். அவருக்குச் சிவகாமியின் மேற் காதலிருப்பினும் இல்லாவிடினும், தம்மெதிரியை இதி லும் தோல்வியுறச் செய்து புண்படுத்தும் பொருட்டே வெகு சந்தோஷமாய் இம்மணத்தை விரும்புவாரென்

பதிற் சந்தேகமில்லை. ஆகவே, இனி வேண்டுவதெல் லாம் வேலாயுதத்தேவர் சம்மதமே; ஏனெனின், மாப் பிள்ளை டிப்டி கலெக்டராகவும், பெண்ணும் அவள் தந் தையும் விவாகத்துக்குடன்பட்டு மிருக்கையில், ஆங் கில ராஜாங்கத்தில், எந்த ஜமீன்தாராலும் அவ்விவா கம் தடுப்பதரிதென்பது ஐயருக்கு நன்கு தெரியும்; அது போலவே, பெண் பதினாறு வயதுக்குட்பட்ட மைநராகவும், தந்தை சம்மதமில்லாதவராகவும், இரு வரும் புலிமலையூரிலும் இருக்கையில், அவ்வூர் ஜமீன் தாருக்கு விரோதி எந்த டிப்டிகலெக்டராயினும், அப் பெண்ணைக் கலியாணஞ் செய்து கொள்வதும் அசாத் தியமே. பின்பு, வகைமோசம் நேரிடா வண்ணம், வேலாயுதத்தேவரிடம் கடிதத்தைக் கொடுத்து, பக்கு வமாய் அவர் மனத்தைத் திருப்புவதே உத்தமம். சுப் பையர் உடனே பிசினை யெடுத்து வெகு பத்திரமாய்க் கடிதத்தை உள் வைத்து மேற் பையை ஒட்டினார். கையிற் கடிதத்தை யெடுத்துக் கொண்டு, வாசற் கத வைத் திறந்தார். கும்பிடப் போன தெய்வம் குறுக் கிட்டாற் போல, வேலாயுதத் தேவர் தெரு வழியே போய்க் கொண்டிருந்தார்.

சுப்பையர்:—ஐயா, தேவரவாள்! ஆசிர்வாதம். ஒரு வார்த்தை; கொஞ்சம் தயை செய்ய வேண்டும்,

[வந்த புதிதில் "அடே, வேலாயுதம்" என்று தான் சுப்பையர் கூப்பிட்டுக் கொண்டிருந்தார். ஆனல் சிவகாமி பிறந்து சில வருஷங்களுக்கெல்லாம், அவ ளது பின் பதவியை உத்தேசித்துக் கொஞ்சம் கொஞ்,

சமாய் மரியாதையை உயர்த்தி, இப்பொழுது இம்மட்டுக்கு வந்திருந்தது. இப்பொழுதும், வேலாயுதத்தேவரது மற்ற உறவுமுறையாருக்கெல்லாம் ஏகவசனப் பிரயோகமே.]

வேலாயுதத்தேவர்:—அடியேன்; யாரு, என்னையா கூப்பிட்டீர்கள்?

சுப்பை:—ஆமாம்; சற்று தயை செய்யுங்கள்; உள்ளே வாருங்கள்.

வே. தே:—கரும்புக் கொல்லையிலே கொஞ்சம் வேலை யிருக்கிறது, போகவேணும். என்ன சங்கதி?

சுப்பை:—[வாசற் கதவை மூடி விட்டு] உட்காருங்கள், போகலாம். இதோ தங்களுக் கொரு கடிதம் வந்திருக்கிறது. தபாற்காரனிடம் கொடுத்தால் எவர் கையிலேனும் தவறிக் கொடுத்துவிடுவா னென்று நினைத்து, நானே யெடுத்துக் கொண்டு புறப்பட்டேன், நீங்களும் வந்தீர்கள்.

வே. தே:—யாரு, எனக்கா?

சுப்பை:—ஆமாம்; மஹாராஜா அவர்கள் பட்டணத்திலிருந்து எழுதி யிருக்கிறார்கள்.

வே. தே:—யாரு, வீரசங்கிலி மகாராசாவா?

சுப்பை:—இல்லை, நம்ம மகாராஜா.

வே. தே:—அவர்கள் தானே, ஐயா, நம்ம மகாராசா. பின்னை, யாரு?

சுப்பை:—விஜயமார்த்தாண்டத் தேவரவர்கள்.

வே. தே:—ஓகோ; இவர்களா; என்ன, திறந்து வாசியுங்கள், கேட்போம்.

சுப்பையர் திறந்து, தமக்கு மனப்பாடமாய்விட்ட கடிதத்தை வெகு விரைவாய் வாசித்து முடித்தார்.

வே. தே:—அவர்கள் எப்பொழுதும் இப்படித் தான்; என்னென்னமோ எழுதுவார்கள்; அவர்கள் காகிதங்களையெல்லாம் நான் சிவகாமியிடம் கொடுத்திடு வேன்; அது பார்த்து, எதாவது சொல்லும். என்ன எழுதி யிருக்கிறார்கள்? நீங்கள் நேரே சொல்லுங்கள், கேட்போம்.

சுப்பை:—என்ன விசேஷமொன்றுமில்லை; ஜமீன் கிடையாததால், அவர்கள் ஏதோ சர்க்கார் வேலையில் அமரப்போகிறார்களாம்; கையிற் பணமில்லையாம்; புது மஹாராஜா அவர்கள் புலிமலைக்கு வந்து விடு முன், தங்கள் மகளைக் கலியாணஞ் செய்து கொண்டு விட வேண்டுமாம்; தங்களை, அதற்காக உடனே குடும்ப சகிதம் பட்டணம் புறப்பட்டு வரும்படி யெழுதி யிருக் கிறார்கள். இது தான் கடிதச் சுருக்கம்; தங்கள் உத் தேசமென்ன? புது மஹாராஜா அவர்கள் வந்து விட் டால், ஒரு வேளை அவர்கள் தங்கள் மகளை மணம் புரிய விரும்புவார்களோ என்ற பயம் போலிருக்கி றது. பட்டணத்திலேயே பிரஸ்தாபம் நடந்திருக் கிறது போலிருக்கிறது; அந்தக் கடிதத்தில் அவ்வள விருக்கிறது.

வே. தே:—ஏன், நாங்கள் பட்டணத்துக்குப் போய், அங்கே புது மகாராசா கலியாணம் பண்ணிக் கொண்டு விட்டாலோ?

பார்த்தார் சுப்பையர்; பிரடை அதிகமாய் முறுகி விட்டது; தம் கைக்கு மேற் போய்விடும்போலிருந்தது; பின்பு, தம்மால் நிறைவேறியதெனக் கூறிப் பயன் பெற முடியாமற் போய்விடும்; சிறிது பிரடையை நெகிழ்த்தினர்.

சுப்பை:—பட்டணத்தில் அதெல்லாம் முடியாது, விஜயமார்த்தாண்டத் தேவருக்குக் கவர்னர்கூட இஷ்டம்; வெகு தந்திரக்காரர்; ஒரு நிமிஷத்தில் கலியாணத்தை முடித்துக்கொண்டு விடுவார்; பின்பு நம்மாலென்ன செய்யலாம்?

வே. தே:—இல்லே; பேச்சுக்கன்றோ சொல்லுகிறேன்.

சுப்பை:— ஆனல் உங்கள் உத்தேசந்தானென்ன?

வே. தே:—நீங்கள்தான் சொல்லுங்களேன்.

சுப்பை:—'பதனம்பத்துக்கெளிது.' எல்லாம் ஆற அமர்ந்து ஆலோசித்துச் செய்வதே உத்தமம். சிவகாமிக் கென்ன, இன்னும் பதினறு நிறையவில்லேயே.

வே. தே.:—தந்திவந்த பிறகு எனக்கும் மனசு ஒரு

படியாய்த்தானிருக்குது; மெள்ளத்தான் ஆகட்டு மேன்

சுப்பை:—ஆனாலப்படியே எழுதி யனுப்பிவிடுங் கள்.

வே. தே:—எனக்குத்தான் எழுதத் தெரியாதே; நீங்கள்தான் எழுதுங்களேன்.

சுப்பையர் உடனே ஒரு காகிதத்தை யெடுத்துப் பின்வருமாறு எழுதினார்.



உ

புலிமலை,

10-1-18...

சிரஞ்சீவி விஜயமார்த்தாண்டத் தேவரவர்க ளுக்கு அநேக ஆசீர்வாதம்; க்ஷேமம்; அப்படியே விரும்புகிறேன். நீங்கள் 6உ அனுப்பிய கடிதம் வந்து பார்த்துக் கொண்டேன். இவ்வளவு அவசரம் சரி யாகத் தோன்றவில்லை. எல்லாம் நன்கு ஆலோசித் துப் பின்னால் விவரமாய் எழுதுகிறேன். வேணும் அநேக ஆசீர்வாதம்.

குமரன் துணை.

——இந்தக் கீறல் வேலாயுதத்தேவர்.

சுப்பையர் வாசிக்கக் கேட்டு வேலாயுதத் தேவர் இதை ஒப்புக்கொண்டார்.

சுப்பை:—இன்று புது மஹாராஜா அவர்களுக்கு சோபனோபசாரக் 'கடிதமொன்று எழுதலாமென்று யோசித்திருக்கிறேன். மெள்ள இந்த விஷயத்தை யும் ஒரு மூலையிற் சொல்லி வைத்தால், அவர்கள் கருத்தும் தெரியும்.

வே. தே:—ஆமாம்; அப்படிச் செய்யுங்கள். பதில் வந்தாற் சொல்லுங்கள். நான் கரும்புக் கொல்லைக் குப் போகிறேன்.

சுப்பை:—உங்களுக்கு வந்த கடிதம்?

வே. தே:— இங்கே தாருங்கள்.

சுப்பை:—அதற்குள்ளே அவசரமா? ஒருதரம் தாம்பூலம் போட்டுக்கொண்டு போங்கள்.

எந்த வேளையாயினும், என்னவேலை காத்திருப் பினும், எவர் கொடுத்தாலும், வெற்றிலையை வேண் டாமென்று சொல்ல வேலாயுதத் தேவருக்குத் தெரி யாது. ஆனால் அவர் தாம்பூலம் தரித்துக் கொள்ளும் விதமும் மிக்க விந்தையே:—முதலில் இரண்டு பாக் கைப் போட்டுக் கொள்கிறது; பின்பு இரண்டு வெற் றிலையில் ஒரு சிறு நெல்லிக்காயளவு சுண்ணாம்பை வைத்துச் சேர்த்துச்சுருட்டி யுள்ளே யெறிகிறது; பிறகு, ஒரு முழுக் கருப்புக் கட்டிப் புகையிலையைச் சுருட்டி யெடுத்துப் போட்டுக் கொள்ளுகிறது; எல்

லாம், செங்கற்சூளைக்குள் கருவேல் முறடுகளைத் தள்ளுவது போலவேயே.

சுப்பை:—கடிதத்தை நீங்கள் கொண்டுபோகிறீர்களே; வீட்டிற் சிவகாமிக்குத் தெரியலாமா?

வே. தே:—ஆமாம், ஐயா! அய(ர்)த்து(வி)ட்டேன். அதுவும் மறப்பிறவி யில்லையா, நம்பக் கூடாது; அவர்கள் பேரிலே கனத்தகிறுக்கு அதுக்கு; ஒருவேளை ஓடிக் கூடப் போய்விடும்; தந்தி வந்தது முதல் சாப்பிடவே யில்லை; நம்மா அழுதுக் கொண்டே யிருக்கு. உங்கள் கிட்டத்தானே இருக்கட்டும்"

என்று சொல்லிவிட்டு, வெற்றிலையை மென்று கொண்டு, வேலாயுதத்தேவர் போய்விட்டார்.

பின்பு சுப்பையர், ஒரு பளபளப்பான காகிதமும் நல்ல மையும் புதியதோர் இறகுப் பேனாவும் எடுத்து வைத்துக்கொண்டு, பின்வரும் நிருபத்தை எழுதலானார். முதலில் பல அசல்கள் வரைந்து திருத்தியும் கிழித்தெறிந்தும் பாழாக்கியபின், கீழ்வருங் கடிதம் ஒப்பேறியது. அதன் விந்தையையும், ஐயர் தமிழ்ப் புலமையையும் நமது நண்பர்கள் அறியுமாறு, அதை உள்ளபடி வரைந்திருக்கிறோம்.

உ

குமரக்கடவுள் துணை.

புலிமலை,
10-1-18...

திருமுருகன் திருவருள் செழித்து, எல்லா நற் குணங்களுக்கும் எல்லையாய்; கரை கடந்த கல்விக்கோர் களஞ்சியமாய்; வலப்புயத்து வீர லக்ஷ்மியும் இடப் புயத்துத் தனலக்ஷ்மியும் வதிந்து வயங்கப் பெற்ற வராய்; வரையாது கொடுக்கும் வள்ளலாய்; தேவர் குல திலகராய்; சிறியோர் செய்த சிறு பிழைகளை யெல்லாம் பொறுத்தருளும் புகழாளராய்; மதவேளும் பெண்மையவாவும் வடிவழகினராய்; புலிமலையின் தவப்பயனாக வந்தவதரித்துள்ள மஹாராஜ ராஜ மான்ய ராஜ ஸ்ரீ மஹாகனம் பொருந்திய கருணாசாகர மாகிய மஹாராஜா அவர்கள் திவ்ய சந்நிதானத்துக்கு, ஏழையினும் ஏழைக்குடியாகிய போஸ்ட் மாஸ்டர் சுப்பையர், சர்வாபீஷ்டமும் சகல சௌபாக்கியங்க ளும் உண்டாகவேண்டு மென்று அநந்த கோடி ஆசீர் வாதம். திருமுருகன் அருளினாலும் மஹாராஜா அவர்கள் கருணைகடாக்ஷத்தினாலும், இவ்விடத்தில் சந்நிதானத்துக் கோடாநு கோடிகுடிகள் அனை வரும் க்ஷேமம். அவ்விடத்தில் மஹாராஜா அவர்களும் பல்லாயிரம் பரிவாரங்களும் க்ஷேம மாயிருக்கிற திவ்ய மங்கள சமாசாரத்தை ஏழைப் பிரஜைகள் கர்ணாமிர்தமாய்ப் பருகிக் களிக்குமாறு திருவாய்மலர்ந்து உத்திரவருளப் பிரார்த்திக்கின்

றேன். எங்கள் அந்தரங்கப் பிரார்த்தனைக் கிரங்கி, தீன தயாளுவாகிய மஹாராஜா அவர்களுக்குக் குமரக்கடவுள் பட்டத்தை யளித்ததைச் செவியுற்று, எல்லோரும் களிபேருவகையில் ஆழ்ந்தனம். தருமமே ஜயம் என்பது இப்பொழுதுதான் வெளியாயிற்று; ஏழைக் குடிகள் மனவேக்கமும் இப்பொழுதுதான் தீர்ந்தது. அந்தரங்க அபிப்பிராயமும் அபிலாசையும் ஒருவிதமாயிருப்பினும், ஜீவனார்த்த நிமித்தமாக, ஏழைகள் வேறு விதமாக நடித்து, வெளிப் பார்வைக்கு வேஷம் போட்டு நடந்துகொள்ள நேரிடுதல் உலக வழக்கமென்பது, சந்நிதானம் அறிந்த விஷயமே. ஆகவே, அதி புத்திசாலிகள், உண்மையைத் தெரிந்து, ஏழைமைக் கிரங்கி, சாண் வயிறு வளர்க்கப் பிறரியற்ற நேரிடும் சாலங்களை யுணர்ந்து, பொறுத்தருள்வாரென்பது ஐயுறற் பாலதன்று. இன்றுத் தபாலில், விஜய மார்த்தாண்டத் தேவரிடமிருந்து வேலாயுதத் தேவரவர்களுக்கு ஒரு கடிதம் வந்தது. மஹாராசா அவர்கள் இங்கு விஜயம் செய்யுமுன்னமேயே, ஸ்திரீரத்நமாகிய சிவகாம சௌந்தரியை எப்படியாவது வெளிக் கடத்தி, தாம் கலியாணஞ் செய்துகொண்டு விடும் நோக்கத்தோடு, வெகு ஆவலாக எழுதியிருக்கிறார். ஜமீனுக்குப் பரம்பரைத் தொழும்பராகிய வேலாயுதத் தேவரவர்கள், என்னை யோசனை கேட்டார்கள். மஹாராஜா அவர்கள் சித்தமிவ்வாறென்று உத்திரவாகும் வரை, ஒன்றும் நடவாதபடி யேற்பாடு செய்திருக்கிறேன். கடிதத்தின் அவசரத்தைப் பார்த்தால், அவரே விரைவில் இங்கு வந்துவிடுவாரென்று

தோன்றுகின்றது. தாங்கள் விஜயம் செய்து ஜமீனைக் கைக்கொள்ளும் பொழுது, பிரத்தியக்ஷ லக்ஷ்மி போல் இவ்வூருக்கோர் ஆபரணமாக விளங்கும் பெண்கள் நாயகத்தையும் தாங்கள் கைப்பிடித்தால்தான் பிரஜைகளுக் கெல்லாம் சந்தோஷமுண்டாகும். தங்கள் ஜயமும் சம்பூரணமாகும். இவ்விஷயத்தில், சந்நிதானத்து ஆஜ்ஞையை, ஊழியனும், வேலாயுதத்தேவரவர்களும், மற்றும் பிரஜைகள் எல்லோரும் மிக்க ஆவலுடன் எதிர் பார்த்திருக்கின்றோம். தேவரவர்கள் வமிசம் சிறந்த சந்தான விருத்தியுடைய தென்பது சந்நிதானத்துக்குத் தெரியுமே. சங்கதி அவசரமென்று தாழ்மையுடன் தெரியப்படுத்திக்கொள்ள விரும்புகிறேன்.

பூசுரரும் பூவையரும் மனமகிழ மங்கள சமாசாரங் கிடைத்த மறுநாள், குமரக்கடவுளுக்கு விசேஷ அபிஷேகாதிகள் சிறப்பாகச் செய்வித்தேன். எப்பொழுதும் சந்நிதானத்தின் க்ஷேமத்தையே பிரார்த்தித்துக் கொண்டு, இங்கு விஜயஞ் செய்யும் சுபதினத்தை யாவலுடன் எதிர்பார்த்திருக்கின்றேன்.

வயவீர மறவர் குழாந்திசைநோக்கி
வணங்குபுலி மலையில் வாழுஞ்
சுயவீரத் தொன்மரபுத் தொழும்பர்களை
யொருகுடைக்கீழ்த் தொடக்கி யாளப்
புயவீர பூபாலன் பூசுரர்க்குப்
பொன்பொழியும் புயலே போல்வான்.

சயவீர சங்கிலியைத் தவிர்த்தொருவர்
தகவுளரோ தரணிமீதே.

அளவில் கோடியாசீர்வாதம்.

இங்ஙனம் சந்நிதானத்து உண்மை யூழியன்

போ. சுப்பையர்.

P. S. முத்துக்குடியில் அதி சிரேஷ்டமான இரண்டு போர்ச் சேவல்களிருப்பதாக, இன்று காலை கேள்வி யானேன். தங்கள் விஜயத்துக்கு முன்னமே தருவித்து வைத்திருக்கிறேன்.

போ. சு.

திருபத்திற்கும் மேற்பைக்கும் நாலு மூலையிலும் மஞ்சளிட்டு, குமரன் கோயில் திருநீற்றுப் பிரசாதமும் சிறிது உள்ளடக்கமாக வைத்து, கடிதத்தை அன்றைத் தபாலிலேயே சுப்பையர் அனுப்பிவிட்டார். புது ஜமீன்தாரின் மனப்போக்குகளையும் குணகுணங்களையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோ லுணர்ந்தவராதலின், தம்முபாயம் சித்திபெறு மென்பதில் அவருக்குச் சிறிதும் சந்தேகமில்லை. ஜமீன்தாருக்கு நன்கு தெரிய வேண்டிய இரண்டு சங்கதிகளும், அவர் புத்திக் கெட்டக்கூடிய எளிய நடையிலிருக்கின்றனவா வென்பதை மட்டும், கடைசியா யொருதடவை வாசித்துப் பார்த்துக் கொண்டார். பின்பு, வேலாயுதத்தேவர் மனந்திருகி விடாத வண்ணம், தினமிருமுறை அவ

ரைக்கண்டு பேசிக் கொண்டு, உத்தமமான வித்தை விதைத்தவன் ஒரு கவலையுமின்றி முளையை எதிர் பார்த்திருப்பது போற் காத்திருந்தார்.

---

## மூன்றாவது அதிகாரம்.

---

### இலவுகாத்த கிளி.

---



சுப்பையர் கடிதமனுப்பியதற்கு எட்டாவது நாள் புது மஹாராஜாவின் முக்கிய காரியஸ்தர்களில் ஒருவரும், முறையில் அவருக்கு அம்மான் ஸ்தானத்துக் குரியவருமாகிய சப்பாணித்தேவர், சென்னையிலிருந்து, மாலை ஐந்து மணிக்குப் புலிமலை வந்து சேர்ந்தார். வீட்டில் வந்திறங்கியவுடன், போ. சுப்பையருக்கு ஆளனுப்ப, இவரும் அவசரமாய் போய்ச்சேர்ந்தார். பின்பு இருவருமாகச் சிறிது நேரம் தனித்துப் பேசிக்கொண்டிருந்தனர். இதற்குள் அஸ்தமனமாயிற்று. உடனே சப்பாணித்தேவர், தாம் கொண்டு வந்த புதிய உருக்குப்பெட்டியைத்திறந்து, ஒரு பெரிய வெள்ளித் தாம்பாளத்தை யெடுத்து, அதில், விலையுயர்ந்த புடவையொன்றையும், ஒரு பவுன் முடிப் பையும், வீட்டிலிருந்து தாம்பூலம், தேங்காய், மஞ்சள்

முதலிய மங்கலப்பொருள்களையும் எடுத்து வைத்துக் கொண்டு, சுப்பையருடன் புறப்பட்டார். குமர கோயில் மேளகாரரும் இதற்குள் வந்துசேர்ந்து தங் கள் வாத்தியங்களை முழக்கிக்கொண்டு முன்சென்ற னர்; இரண்டு வேலைக்காரர் தீப்பந்தங்களை யெடுத்துச் சென்றனர்; ஒரு சங்கதியுமே தெரியாத ஊராரிற் சிலர் கிசு கிசென்று பேசிக்கொண்டு உடன் சென்ற னர்; பவனி செல்லச் செல்லக் கூட்டம் அதிகரித்தது. வேலாயுதத்தேவர் வீட்டுவாயிலில் பவனி நின்று மேளம் முழங்கவே, அவர் என்னவென்றறிய வெளி யேவந்தார். உடனே சப்பாணித்தேவர், "அம்மான் நமக்காரம்" என்று அவர் கையைப் போய்ப்பிடிக்க, அவர் பிரதி "நமக்காரம்" சொல்லி யிவர் கைகளைப் பிடிக்க, திகைப்புற்ற வேலாயுதத்தேவர், "என்ன சங்கதி? அம்மான், ஒன்றுந் தெரியவில்லையே. நீங்கள் எப்பொழுது வந்தீர்கள்?" என்றார். இதற்குள் சுப் பையர், "எல்லாம் சோபனம் தான், உள்ளே போவோம்" என்று சொல்ல, இரண்டு மறத் தேவர்களும் ஒரு மறைத்தேவரும் வேலைக்காரர் களும் வீட்டினுள் நுழைந்தார்கள். மேளமும் கூட்ட மும் வெளியே ஆரவாரித்துக் கொண்டிருந்தன. பனங் குருத்தோலையில் விசித்திரமான சாயங்களேற்றி முடையப்பட்ட ஒரு பாயை யெடுத்து வேலாயுதத் தேவர் விரிக்க, மூவரும் உட்கார்ந்தார்கள்; வேலைக் காரனும் வெள்ளித் தட்டை நடுவே வைத்தான்.

வே. தே.: அம்மான், என்ன? ஒரு சங்கதியும் தெரிய வில்லையே, இதெல்லாம் என்ன?

ச. தே.: ஐயாரவர்கள் சொன்னாற்போல, எல்லாம் 'சோகம்' தான். நம்ம சிவகாமியை நம்ம மகாராசாவுக்குக் கட்டிக் கொள்ள வேணும்; அதற்கு, நித்திய சாம்பலா, அதென்னையா, எளவு! பார்ப்பான் பேச்சு வாயிலே நுழையவில்லையே; அது தான் கொடுக்கவந்தேன்.

சுப்பை: தங்கள் ஜேஷ்ட புத்திரி சௌபாக்கியவதி சிவகாம சுந்தரியம்மாளை நம்முடைய மஹாராஜா சிரஞ்சீவி ஸ்ரீமான் விஜயபாண்டிய வீரசங்கிலித்தேவரவர்களுக்கு விவாஹஞ் செய்து கொள்ள உத்தேசித்து, நிச்சய தாம்பூலம் கொடுக்க வந்திருக்கிறார்கள். மஹாராஜா அவர்கள் வெகு அவசரமாய் அனுப்பியிருக்கிறார்கள். குல முறைப்படி செய்யவேண்டிய மரியாதைகளுக்குக் காலதாமத மாகுமென்று நினைத்து, மங்கள தாம்பூலத்தோடு மட்டும் வந்திருக்கிறார்கள். இந்த ஜனவரி மாதம் 31-ம் தேதி சுக்கிரவாரத்தன்று காலை ஏழு மணிக்கு மஹாராஜா அவர்கள் விஜயமாகி ஜமீனை யொப்புக்கொள்வார்கள்; அன்று காலை ஒன்பது மணிக்கு திவ்யமான விவாக முகூர்த்தமிருக்கிறது. பூதேவியையும் ஸ்ரீ தேவியையும் ஒருங்கு மணம் புரிய விரும்புகிறார்கள். தாங்கள் அங்கீகரித்துத் தாம்பூலங் கொடுக்கவேண்டும். வெறுங்கையாக அனுப்பக்கூடாதென்று, மஹாராஜா அவர்கள், இந்த பகாரிஸ் பட்டையும், இந்தப்பவுன் முடிப்பையும் அனுப்பியிருக்கிறார்கள். எத்தனை, நூறு பவுனு?

ச. தே.: இருநூறுபவுன், ஐயா, இருநூறு பவுன். அங்கே பட்டணம் கசாப்புகடையிலே (shop) முப்பதினாயிர ரூபாவுக்கு நகைகள் செய்தாகுது. பேர் கூட வாயிலே நுழையுதில்லே, எளவு; என்ன, காப்புக்கொலுசாம், கண்டமாலையாம், சவச்சரமாம், ஒலெடிமிக்கியாம், பத்திர மோதிரங்களாம், அரைப்பட்டையாம், என்னென்னமோ சொல்லுகிறார்கள்; கிளவனுக்கு என்ன தெரிகுது?

வே. தே.: எட்டி! உன்னைத்தானே!

அவர் மனைவி மருதி யென்பாள் தலையை நீட்டினாள்.

வே. தே.: உள்ளே கொள்ளுப் பானையிலே கொஞ்சம் சாத்துப்பிடி (சந்தனம்) யுருண்டை கிடந்தது, எடுத்துக் கொண்டுவா; ஒருகுவளையிலே கொஞ்சம் தண்ணீரும் கொண்டுவா. புகையிலைப் பையும் எடுத்துக்கொண்டுவா.

கேட்ட சாமான்கள் வந்து சேர்ந்தன. தண்ணீரில் சந்தன வுருண்டையைப் போட்டால் கெட்டியைப் போல் மிதப்பதைத் தவிர நனைந்தபாடில்லை. ஒரு கல்லின் உதவியினால் எப்படியோ கொஞ்சம் மணல் போல் மெதுவான சந்தனம் கரைக்கப்பட்டது. இதற்குள் வெளியே இருந்த சில 'தேவர்மார்களும்' 'ஐயர் மார்களும்' உள்ளே அழைக்கப்பட்டார்கள். எல்லாருக்கும் சுப்பையர் மேற்பார்வையில் சந்தன

மும் தாம்பூலமும் வழங்கப்பட்டன. பநாரிஸ் பட்டும் பவுன் முடிப்பும் மருதி மூலமாக வீட்டுட்போய்ச் சேர்ந்தன. தாம்பூலம் கொடுத்து முடிந்தவுடன் ஒரு வேலைக்காரன் வந்து வெள்ளித்தட்டை யெடுத்தான். "இன்னும் யாராவது வந்தால் வெற்றிலை கொடுக்கவேண்டும்; இங்கேதானே இருக்கட்டும்" என்றார் வேலாயுதத்தேவர்; வெள்ளித் தாம்பாளமும் வீட்டுட்போய்ச் சேர்ந்தது. புது 'மகராசா' அவர்களையும், வியாச்சியத்தையும், பட்டணம் சங்கதிகளையும், புலிமலைக்கு விஜயமாகப் போவதையும், கலியாணத்தையும் பற்றி வம்பளந்தபின், ஒருவரொருவராய் வீடுகளுக்கெழுந்து சென்றார்கள். அன்றிரவே சென்னையை நோக்கித் திரும்பி விடவேண்டுமென்று சப்பாணித்தேவரும் புறப்பட்டார். 'மஹாராஜா'வின் விஜயத்தையும், விவாக மகோற்சவத்தையும் பற்றி வேண்டிய ஏற்பாடுகள் செய்ய, பேர. சுப்பையர், காரியஸ்தராக நியமிக்கப்பட்டார். வேலாயுதத்தேவரும் அவர் மனைவி மருதியும், பநாரிஸ் பட்டை மூன்று தரம் பிரித்துப் பார்த்தும், பவுன்களை நான்கு முறை கீழே கொட்டி யெண்ணிக் கணக்கிட்டும், வெள்ளித் தாம்பாளத்தில் அடிக்கடி முகம் பார்த்தும், முப்பதினாயிரம் ரூபாக்களுக்கு என்னென்ன நகைகள் எவ்வாறு செய்யக்கூடு மென்று யோசித்துப் பார்த்தும், மகக்களத்தில் வீட்டை யிடித்துக் கட்டியும், நிலங்கள் வாங்கியும், பூரித்து மகிழ்ந்தார்கள். அவர் மனைவி மருதிக்குக் 'கலியாண சங்கதியைப்பற்றி நன்றாய் அறுத்துப் பேசவில்லை' என்று சிறிது மனவருத்தம்.

ஆனால் அவள் புருஷர் அப்படிப் பேசாததே நலமென்ருர். அவர்கள் எவ்வளவு நயமாகவும் பயமாகவும் கோபமாகவும் கெஞ்சியும் சமாதானப்படுத்தியும், அவர்கள் மகள் மட்டும் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாகவே யிருந்தாள்.

மேல் மாடியிலிருந்தபடியே மணியை யடித்தார் விஜயமார்த்தாண்டத் தேவர். சுந்தரம் ஓடி வந்ததுடன், "இன்றைத் தபாலில் பதில் வரவேண்டும்; தபாலாபிசில் விசாரித்து வா" என்ருர். அவன் திரும்பி வருமுன் அவர் மநமடைந்த பதைபதைப்பு, அநுபவித்தார்க்குத் தான் தெரியும். நீண்டதோர் 'சர்க்கார்'க் கடிதத்தையும், சிறியதோர் சொந்தக் கடிதத்தையும் சுந்தரம் கொணர்ந்து கொடுத்தான். அவன் வரும்பொழுதே, "சிவகாமித் தாய் கடிதமில்லை," என்று சொல்லிக்கொண்டே வந்தான். சிறிய கடிதத்தின் விலாசம் சுப்பையர் கையெழுத்திலிருப்பதைக்கண்டு, ஜமீன் தவறிப் போனதைப் பற்றித் துக்கம் விசாரிப்பதா யிருக்கு மென்று நினைந்து, முதலில் 'சர்க்கார்'க் கடிதத்தைத் திறந்து பார்த்தார். தம்மை கிருஷ்ண ஜில்லாவில் 'டிப்டிகலெக்டர்'ராக நியமித்து உத்திரவு வந்திருந்தது. அதைச் சுந்தரத்துக்குச் சொல்லி, இருவரும் சந்தோஷமாகக் கொஞ்சநேரம் மநக்கோட்டையில் ஆகாச மாளிகை கட்டினர்கள். வேலாயுதத்தேவரிடமிருந்து பதில் வராதது மநத்துக்கு வெகு ஆத்திரமாயும் கசப்பாயு மிருந்தது. பின்பு சொந்தக் கடிதத்தைத் திறந்து வாசித்தார்

ஆகா! இதென்ன புதுமை! இவரிடத்தில் இவ்வளவு கோபமும் படபடப்பும் உளவோ? கற்றாணைப்பிளந்து கொண்டு நரசிம்மம் வெளிப்பட்டாற்போ லிருக்கின்றதே ! ஒரு நிமிஷத்தில் கண்ணிணைகள் எட்டிப்பழம் போற் சிவந்து விட்டனவே! மீசையும் உதடுகளும் மோவாயும் துடிதுடிக்கின்றனவே! பற்கள் நறுநறுக்க, கைகால்களும் நடுங்குகின்றனவே! மற்றொன்றால் தாக்கப்பட்டவுடன், குளிர்ந்த கருங்கல்லினின்றும் கிளம்பும் தீப்பொறியைப் போலன்றோ, இவர் கோபாவேசம் சொலிக்கின்றது ! "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயுங் காப்பதரிது" எனக் குறளார் கூறிய கூற்று முற்றிலும் மெய்யே. தம் கண்களையே சந்தேகித்தாற்போல, அச்சிறிய கடிதத்தை வார்த்தை வார்த்தையாக மும்முறை வாசித்தார். கடுஞ்சினத்திற் பிறக்கும் குறுஞ் சிரிப்போடு, "இம் ! குண்டுணிப் பார்ப்பான் குறும்பா இது ! நல்லது" என்று சொல்லிக்கொண்டார். இதனிடையில், கம்பம் போற் றிகைத்து எதிரே சுந்தரம் நிற்பதை முற்றிலும் மறந்துவிட்டார். பின்பு திடீரென்று அவனை நோக்கி, "சுந்தரம்! நாளை 'ரயிலில்' புலிமலைக்குப் பிரயாணம். சாமான்களைத் தயார்செய்து விடு. இந்தவூர்க் கணக்குக்களையெல்லாம் தீர்த்துவிடு" என்று சொல்லிக்கொண்டே 'மேஜை'மேலிருந்த கைப்பெட்டியைத் திறந்து, இருபது ரூபா நோட்டு ஒன்றை யெடுத்து அவன் கையில் கொடுத்தார். அவன், அதை வாங்கிக்கொண்டு, சங்கதியின்னதென்று அறிய விரும்பிய

வனாய், திகைத்துத் திகைத்து, கேட்கவும் அஞ்சி யொதுங்கி நின்றான். "எல்லாம் பின்னாற் சொல்லு கிறேன்; போ" என்று சொல்லவே, அவன் கீழே போய் விட்டான். மறுபடியும் கடிதத்தை யொரு தரம் வாசித்து, அப்படியே ஆலோசனையில் ஆழ்ந்து விட்டார்.

சப்பாணித் தேவர் வந்து 'நித்திய சாம்பல்' செய்து விட்டுச் சென்னைக்குத் திரும்பியதற்கு அடுத்தநாள் மாலை ஆறுமணி சுமாருக்குப் புலிமலையை நோக்கி யொரு 'வில் வண்டி' வந்தது. காட்டுப்பிரதேசங் களில் இருட்டுக்கு முன் ஊர்போய்ச் சேரும்படி வண்டிகளை விரட்டியோட்டுவது வழக்கமாயிருக்க, இவ்வண்டிக்காரன் தலைக்கயிறுகளை வலுவாயிழுத்து மாடுகளின் சுபாவ கதியையும் குறைத்து நடத்து வதும், வண்டியை நிறுத்திக்கொண்டு உள்ளிருப்பவர் சிற்றுண்டிகள் தின்பதும், வேண்டுமென்றே ஆலசி யஞ் செய்தாற்போலிருந்தது. இரவு எட்டு எட்டரை மணிக்கு, ஊர் சிறிதடங்கியபின், இவ்வண்டி புலிமலை யூர்க்குட் பிரவேசித்து வேலாயுதத்தேவர் வீட்டு வாசல் முன்னிலையில் நின்றது.

முன் பெட்டிமேலிருந்த சுந்தரமும், வண்டிக்குள் ளிருந்து நம் கதாநாயகரும் கீழிறங்கினார்கள். வீட்டு வாசல் மூடப்பட்டிருந்தமையால், சுந்தரம் கதவைத் தட்டினான். தேவர் உள்ளிருந்து "அதாரது?" என்று உசாவினார். "மஹாராசா வந்திருக்கிறார்கள்; கதவைத் திறவுங்கள்", என்றான் சுந்தரம். உடனே

தேவர் தேவலோக இன்பத்தில் ஆழ்ந்துவிட்டார். என்ன! முதல் நாள் ஓட்டம் ஓட்டமாய் வந்து சப்பாணித்தேவர் நிச்சயதாம்பூலஞ் செய்கிறதும், மறுநாள் மஹாராஜா அவர்களே யாரும் எதிர்பாராதவண்ணம் நேராக வீட்டுக்கு வந்துவிடுகிறதுமா! இவ்வதிர்ஷ்டம் யாருக்குக் கிடைக்கும் ? கண் மூடித் திறக்கு முன் துடைப்பத்தை யெடுத்துக் கூடத்தை விளக்கிச் சாயப்பாயை விரித்தாள் மருதி; வெள்ளித் தட்டில் வெற்றிலை பாக்கையும் முதல்நாள் கரைத்த பரிமள சந்தனத்தின் மிகுதியையும் வைத்துப் பாயின்மேல் தட்டைவைத்தாள். தேவர் விளக்கைப் பிரகாசமாய்த் தூண்டிவிட்டு, அவசரத்தில் அந்தக் கையிலேயே தலைப்பாகையை எடுத்துத் தலையில் வைத்துக்கொண்டு எழுந்தார். இருவரும், இதனிடையில், "ஏட்டி ! சிவகாமி ! ஏட்டி, மூதி ! உன்னைத்தானே ! ஏ, கழுதை ! மகாராசா அவர்கள் வந்திருக்கிறார்கள், முகத்தைத் துடைத்துக்கொண்டு அந்தக் கண்டாங்கிச் சேலையை யெடுத்துக் கட்டிக்கொள்" என்று அவசரமாய்ச் சொன்னார்கள். சுந்தரம் கதவைப் பிளக்கத் தொடங்கிவிட்டான்; தேவர் ஓடிப்போய்க் கதவைத் திறந்தார்; தேவியும் ஒரு கையில் விளக்குடன் கூடச்சென்றாள். கதவு திறக்கப்பட்டவுடன், "அம்மான் ! தெண்டனிடுகிறேன்" என்று கைகூப்பி வணங்கிக்கொண்டு, நம் கதாநாயகர் உள்ளே சென்றார். தேவர் பிரமித்துச் சுவரோடு சாய்ந்துவிட்டார்; தேவி கைநழுவி, விளக்குக் கீழே விழுந்துவிட்டது; அசோகவனத்திடையே திடீரென்று இராம

நாமத்தைச் செவியுற்ற பிராட்டியாரைப் போல, சிவகாமி யெழுந்து வந்து எட்டிப்பார்த்தாள். ஒரு வாறு திகைப்புமாறி நம் கதாநாயகரும் வேலாயுதத் தேவரும் கூடத்துப் பாயிலுட்கார்ந்தார்கள்; மருதி வீட்டுக்குட் போய்விட்டாள்; சுந்தரம் மெதுவாய்க் கதவை மூடிவிட்டு ஒருபுறமாக ஒதுங்கி யுட்கார்ந்து கொண்டான். ஆயத்தமாகப் பாய்விரித்திருப்பதை யும், வெகு பிரகாசமாய் விளக்கெரிவதையும், சந்த னம் தாம்பூலங்களுடன் வெள்ளித்தாம்பாளம் வைத் திருப்பதையும் பார்த்தவுடன், நம் கதாநாயகருக்கு இன்னதென்று தெரியவில்லை. வேலாயுதத் தேவருக் கும் அவர் பத்தினியார்க்கும் யௌவனகாலம் திரும்ப வும் நேர்ந்து, இருவரும் தனித்து உல்லாசமாக விருக் கும் மத்தியில், தம் வரவு நிகழ்ந்ததோ "என்றுகூட நினைத்தார்; முதலில், இவ்வளவு பெரிய வெள்ளித் தாம்பாளம் எங்கிருந்து வந்தது? ஒன்றும் செவ்வை யாகப் புலப்படவில்லை. வேலாயுதத் தேவரோ, மணப்பெண்ணைப்போல் தலையைக் குனிந்து கொண்டு மௌனமாயிருந்தார். கடைசியில் பின்வரும் சம்பா ஷணை தொடங்கியது:—

விஜயமா: அம்மான்! இதெல்லாம் என்ன? வீட் டில் ஏதாவது விசேஷமுண்டா?

பதில் கிடையாது; 'அம்மான்' தலை நிமிர்க்கவே யில்லை.

விஜயமா: என்ன, அம்மான்! என்னுடன் பேசக்

கூடாதா? ஒருநாளும் இப்படி யிருக்கமாட்டீர்களே. ஒருவேளை, பார்ப்பான் புத்தியைக்கேட்டு இப்படிப் பதிலெழுதினோமே என்ற மநஸ்தாபமா? அதனு லென்ன, பாதகமில்லை. வீட்டில் எல்லாரும் க்ஷேமம் தானு?

வே. தே.: சேமந்தான். நீங்களிப்பொழுது தான் வருகிறீர்களோ?

விஜயமா: ஆம்; இதுதான் வழி; நேராக இங்கே தான் வந்தேன். உங்கள் கடிதம் கிடைத்த மறுநாள் புறப்பட்டேன். அதென்ன அப்படிப் பதிலனுப்பினீர் கள்? இதெல்லாம் ஏது? சந்தனம்? வெற்றிலை பாக்கு?

வே. தே.: நேற்றுச் சிவகாமிக்கு நித்திய சாம் பல் நடந்தது.

விஜயமா: அதென்ன நித்திய சாம்பலென்றால் தெரியவில்லையே? ஏதாவது திருநீற்றுக்காப்பு நடந் ததா? என்ன விசேஷம்?

வே. தே:—இல்லை என்கிறேன். சப்பாணித் தேவர் வந்திருந்தார்கள். சிவகாமிக்குக் கலியாணம் நிச்சயமாச்சுது.

விஜய:—யார், நம்ம சிவகாமிக்கா? உங்கள் மகள் சிவகாமிக்கா?

வே. தே:—ஆமாம்; விரசங்கிலி மகாராசா அவர்கள் கேட்டனுப்பினார்கள். மகாராசா அவர்கள் உத்திரவுக்கு நாய்க் குட்டி இரண்டு சொல்லலாமா? இந்த சனவரிமீ 31உ யன்று கலியாணமென்று நிச்சயமாச்சுது.

இதைக் கேட்டவுடன் நம் கதாநாயகர் இடியுற்ற அரவம்போற் சோர்ந்து விட்டார். தாம் ஜமீனை யிழந்து கடிதம் எழுதும்பொழுதும், பதிற் கிடைத்த பொழுதும், எவ்வாறு பயந்திருப்பினும், இவ்வளவு சீக்கிரத்தில் இவ்வாறு முடிந்து விடுமென்று அவர் சொப்பனத்திலும் பயந்திலர். ஆழ்ந்தகன்ற உலகாநுபவமில்லாத எவர் தாம், ஒரு மனிதன் இவ்வளவு சின்னத்தனமாக நடந்து கொள்வானென்று நினைப்பார்கள்? 'பணமென்றாற் பிணமும் கண்ணை விழிக்கும்' என்று பழமொழியாயினும், சாதாரண நடவடிக்கைகளில், அதன் அபாரசக்தி யிவ்வளவு வெள்ளையாக விளங்குகிறதில்லை. பணவாசை பிடித்தவரும், உலகவாய்க்குச் சிறிதஞ்சி, பெருந்தன்மையினர் போல அதிக நஷ்டமில்லாத விஷயங்களிற் போலியுதாரங் காட்டி, எப்பொழுதும் வாயினாற் பொன் மழையும் சருக்கரை மழையும் பொழிந்து, சிறிது இலைமறைவு காய் மறைவாக நடந்து கொள்வார்கள்; விசேஷ புத்தி சாதுரியமுள்ள சிலர், வறண்டு சாகும் நாவுக்கு வெறுந் தண்ணீரும் உதவ இணங்காத வன்னெஞ்சத்தினரேனும், தங்கள் சாதுரிய நடக்கையால், தயாள குணத்தினராகவே மதிக்கப்பட்டுலாவுவார்கள். ஆனால், சாதா

ரண புத்தியுள்ள எவனும், இம்மட்டும் மானக்கேடாக ஒழுகமாட்டான். நாகரிகம், மான அவமானங்களிற் கூரிய வுணர்ச்சி, உலகுடன் ஒத்து நடிக்குந்திறம், முதலியவைகளில் மிகக் குறைந்த மரபில் பிறந்து, அகூர ஞானமேயின்றி வளர்ந்து, பணத்தையே தெய்வமாகக் கொண்டாடும் கீழ்மையரது பழக்கமே மலிந்து, வயிறு வளர்க்க ஓய்வின்றிச் சரீரப்பாடுபட்டு வரும் ஏழை மௌட்டியராதலின், வேலாயுதத்தேவர் இவ்வளவு ஏளனமாய் நடந்து விட்டார். உலகத்திற் பெரும்பாலார், முடிவில் அவரைப்போன்றே யொழுகி யிருப்பார்களென்பது திண்ணம்; ஆனால், தங்கள் நடிப்புத் திறமைக்குத் தக்கபடி நடக்கையின் அயோக்கியத்தனத்தை யொருவாறு மறைத்து, வெளிப்படையாக மட்டும் நோக்குபவர்களை மயக்கி ஏமாற்றி யிருப்பார்கள்; அதாவது, சுருக்கிக்கூறின், கூடக் கொஞ்சம் அயோக்கியத்தனமாக நடந்திருப்பார்கள். ஒருவாறு திகைப்பு நீங்கி, நம் கதாநாயகர் மறுபடியும் பேசத் தொடங்கினார்.

விஜயமா:—அம்மான்! இது மெய்தானா? உங்களுக்கு அழகா இது? இது தகுமா?

வே. தே:—ஆமாம், உங்களுக்கென்ன, சொல்வீர்கள். ஏழைக் குடும்பம் பிழைக்கிற வழியை யன்றோ தேடவேண்டும். சருக்கரை யென்று சொன்னால் வாய் இனிக்குமா? நான் அப்பொழுதே உங்களைக் கலியாணம் பண்ணிக் கொள்ளுங்களென்று சொன்னேன். நீங்கள் தான் கேசு முடிவாகட்டும் என்றீர்கள்; அதுவும்

அவள் அதிட்டந்தான். கொடுத்து வைத்தாலன்றோ கிடைக்கும்;நம்மாலேயென்ன இருக்குது? எல்லாம் திருவுளச்செயல். நேற்று இருநூறு பவுனும், இந்தத் தாம்பாளமும், ஒரு பனாரிசுச் சீலையும் கொண்டுவந்து கொடுத்துவிட்டுப் போனார்; முப்பதினாயிர ரூபாவுக்குக் 'கசாப்பு'க் கடையிலே நகைகள் பண்ணியாகுதாம். மூத்தபெண்சாதிகள் இரண்டு பேருமோ மலடு; இனிச் சமீன் இவளுக்குத்தான்; அதிட்டம் வரும்போது மோட்டைத் தொளைத்துக்கொண்டு வருமென்று சும்மாவா சொல்லுகிறார்கள்? இம்! பேச்சைவிடுங்கள்: நம்மாலே யென்னவிருக்குது?

விஜயமா:—அம்மான்! அப்படிச் சொல்லாதேயுங்கள்; நம்மாலின்றித் தெய்வமாவந்து இப்படியெல்லாம் செய்யச் சொல்லுகிறது? நீங்களாக ஒருபொழுதும் இப்படி நடக்கமாட்டீர்களென்பது எனக்கு நிச்சயமாய்த் தெரியும்; எல்லாம் அந்தப்பாவிப் பார்ப்பான் துர்ப்போதனை யென்றெண்ணுகிறேன். தயைசெய்து நான் சொல்வதைக் கவனமாய்க் கேளுங்கள்; உங்களுக்குத் தெரியாத சங்கதியில்லை. மாமியையும் கூப்பிடுங்கள்; அவர்களும் கேட்கட்டும்; பிறகு நீங்களே யோசித்துச் சொல்லுங்கள். நானும் உங்களைப்போல் ஏழைக்குடும்பத்திற் பிறந்தவனே; அன்றியும் பாலியத்திலேயே அனாதையாகி விட்டேன். உங்கள் மூத்த மகனுடன் ஒருநாள் விளையாடிக்கொண் டிருக்கையில் தான், மஹாராஜா அவர்கள் கண்டு இரங்கிப் பிரியப்பட்டு, அரண்மனைக்கு என்னைக் கொண்டுபோனார்கள்.

“பிறகு அவர்கள் மகனைப்போலவே வளர்ந்துவந்தேன்; உங்கள் மக்கள் எல்லாரும் எனக்குத் தோழர்களாக, அரமனையில் என் கூடவே பெரும்பாலு மிருந்து வந்தார்கள்; ஆனால், சிவகாமியும் நானும்மட்டும் இணை பிரியாத அந்தரங்கத் தோழர்களாகவிருந்து வந்தோம். இதைக்கண்ட மஹாராஜா அவர்கள் சந்தோஷப்பட்டு, அவளை யெப்பொழுதாவது காணவிட்டால், “விஜயம்! உன் பெண்சாதி யெங்கே?” என்று பரிகாசமாய்க் கேட்பார்கள். இது தங்களுக்கும் தெரியும்; ஆனால் அவ்வாறு மெய்யாகவே நடக்கக்கூடுமென்று, அக் காலத்தில் நீங்கள் சிறிதும நம்பியிருக்க மாட்டீர்க ளென் றெண்ணுகிறேன். உங்கள் மக்கள் என்னுடன் அரமனையிலிருப்பதையே மிக்க பெருமையாகக் கொண் டிருந்தீர்கள். பத்துப் பதினொரு வயதாகும் வரை அவளும் என்னுடனேயே படித்துவந்தாள். நீங்களும் உடம்பட்டிருந்தீர்கள். அவள் பெரிய மனுஷியாகித் தங்கள் வீட்டுக்குவந்த பின்னும், அதற்குள் விவரந் தெரிந்து அவளையே கலியாணஞ் செய்துகொள்ள வேண்டுமென்று தீர்மானித்திருந்த என் நிர்ப்பந்தத் தால், அவள் படிப்புத் தடைப்படாமல் விருத்தி யடைந்துவந்தது; எங்கள் அந்தரங்க சிநேகத்தையும், பிராயப் பொருத்தத்தையும், இசைந்த குணங்களையும், ரூபலாவணியத்தையும் கண்ட மஹாராஜா அவர்கள் கூட, நான் ஒருவேளை பின்பு பட்டத்துக்குவரக் கூடு மென்ற உணர்ச்சி யுடையவர்களாயிருந்தும், தங்கள் குடும்ப நிலையைச் சிறிதும் கவனியாது, எங்கள் காத லுக்கு இணங்கியிருந்தார்கள். தன்னைப்போன்ற மற்ற

மறப் பெண்களைப்போல், சிவகாமி, கூலிவேலைக்கே னும் சொந்தமான குடும்பவேலைக்கேனும் போனதே யில்லை; நெல்லறுக்கவும், புல்லறுக்கவும், களைபிடுங்க வும் அவளுக்குத் தெரியவே தெரியாது; இதற்குப்பதி லாக, இப்பொழுது நம்குலத்தில் அவள்அளவு கல்வித் தேர்ச்சியும் விவேகமுமுள்ள புருஷரே மிகச்சிலர்; பெண்கள் இல்லவேயில்லை; இதற்கெல்லாம் எங்கள் காதலே காரணம்; என் படிப்பின் நிமித்தமே மஹா ராஜா அவர்கள் காலத்திலேயே கலியாணம் நடவா திருந்தது. பின்பு திடீரென்று அவர்கள் இறந்து போகவே, ஒன்றுங்கூடாமல் நடைப்பட்டு நின்றது; பின்பு நாச்சியாரும் இறந்து போக, வியாச்சியம் தொடங்கிற்று; இப்பொழுது இந்த இரண்டு வருஷ காலமாகக் கலியாணம் நடவாததெல்லாம் என் பிடி வாதத்தினாலேயே; இதனிடையில், நிலமிலாக்கோ ட்டை, பஞ்சைப்பட்டி, சிவன் தாண்டவபுரம் முதலிய ஜமீன்களிலிருந்து வந்த பெண்வரன்களையெல்லாம் நான் மறுதலித்ததும் உங்களுக்குத் தெரிந்தவிஷ யமே. அந்த ஜமீன்களில் நான் கல்யாணஞ் செய்து கொண்டிருந்தால், உங்களுக்கு எவ்வளவு வருத்தமா யிருந்திருக்கும்? அப்படி யேதாவது நடந்து விடு மோவென்று பயந்தே நீங்கள் கல்யாணத்தின் பொருட்டு நெருக்கினீர்கள். உங்கள் மனப்படியே நான் முன்னமே கல்யாணஞ் செய்து கொண்டிருந் தால், இப்பொழுது வீரசங்கிலி மஹாராஜா வில்லை, விக்கிரமாதித்த மஹாராஜாவே வந்தாலும் என்ன செய்யமுடியும்? இதையெல்லாம் நன்கு யோசியுங்கள்.

"கல்யாண மாகாவிட்டாலும், ஊரார் மதிப்பிலும் எங்கள் மதிப்பிலும் சிவகாமியென்மனைவியே; மற்றொருவனுக்கு, இந்திரனா யிருக்கட்டும், சந்திரனா யிருக்கட்டும், உரியவளல்ல. பணத்தைப்பற்றியும் தாங்கள் விசாரப்படவேண்டாம். என்றால் இப்பொழுது இருநூறுவென் கொடுக்கவா வந்து,முப்பதினாயிரம்ரூபாவுக்கு நகை செய்து போடவாவது முடியாதென்பது உண்மையே, ஆனால் சில மாதங்களுக்கு முன் எனனைக் கலியாணஞ்செய்து கொள்ளச் சொல்லி நெருக்கியபொழுது, பணத்தைப்பற்றி யொரு பேச்சேனும் நடந்ததா? அல்லது எனக்கே ஜமீன் கிடைத்திருந்து, நானிப்பொழுது கலியாணஞ்செய்து கொண்டால், இவ்வளவு பணம் செலவிட்டிருப்பேனா? இந்தப் பணத்தினால் மட்டும் உங்களுக்கேனும் உங்கள் மகளுக்கேனும் மனச்சமாதானமும் சுகவாழ்க்கையும் ஏற்பட்டு விடுமா? சாதாரணமாய்ச் செலவுக்கு முட்டின்றி மரியாதையாக வாழ்தலுக்கு வேண்டிய திரவிய சகாயத்தை நீங்கள் எதிர்பார்த்தலே கிரமம், அதற்குக் குறைவேயில்லை. உங்களுக்கு எழுதியிருந்தபடி, உங்கள் பதிற்கடிதம் கிடைத்த தபாலிலேயே என்னை கிருஷ்ணா ஜில்லாவில் 'டிப்டிகலெக்டர்'ராக நியமித்து உத்திரவும் கிடைத்திருக்கிறது. நான் போய் வேலையை ஒப்புக்கொள்ள வேண்டியது தான் தாமசம்; ஒப்புக்கொண்டநாள் முதல் மாதம் இருநூற்றைம்பது ரூபா சம்பளம் கிடைக்கும். இதை விடத் தங்கள் குடும்பத்துக்கு அதிகம் செல்லுமா? மாதம் 250 ரூபா கிடைக்க

"வேண்டுமாயின், அறை வட்டியாகப் பார்த்தாலும், ஐம்பதினாயிர ரூபா முதலிருக்க வேண்டுமே. இன்னும் சம்பளம் ஐந்நூறு, அறுநூறென்று உயரக்கூடும். தவிரவும் தக்க அந்தஸ்துள்ள உத்தியோகம். நீங்களிங்கிருப்பின் எங்ஙனமாயினும் கும்பிடு சேவகமே. வேண்டுமாயின் ஆறுமுகத்தை வைத்து விட்டு அல்லது இருக்கிற உழக்கு ஆழாக்கை வாரத்துக் கடைத்து விட்டு, குடும்பத்துடன் புறப்பட்டு விடுங்கள். பெரிய மஹாராஜா அவர்களை நினைந்தாவது, நேற்றுவரையும் என்னை மஹாராஜாவென்று கொண்டாடியதை நினைந்தாவது, இஃதொன்றுமேயின்றி, உங்கள் மகள் நல்வாழ்க்கையை நினைந்தாவது, ஊர்க்கேலி நாட்டுக் கேலியாக முடியத்தக்க இந்த அவமானமான சங்கதியை நிறுத்தி, பஞன்கள் முதலியவற்றைத் திருப்பி யனுப்பிவிட்டு, உங்கள் பழையவாக்கை நிறைவேற்றுங்கள். மாமி! நீங்களும் அம்மாளுக்குச் சொல்லுங்கள். இந்த மானக்கேடு குலத்தையே கூறிக்கொள்ளும். தயை செய்து நன்றாக எல்லாவற்றையும் ஆலோசியுங்கள்" என்று கூறிச் சிறிது நிறுத்தினர். குயுக்தி ராக்கையறுத்தாலும் குண்டுசெட்டி முன்னழியரிசியே. நம் கதாநாயகர் பிரசங்கமெல்லாம் செவிடன் காதிற் சங்கூதியது போலாயிற்று.

வே. தே.: இதெல்லாம் ஏன் என்கிறேன்; இந்தச் சமீன் தோன்றியநாள் முதல் இந்த ஊரிலேயே உள்ள பழைய குடும்பமிது; எப்பொழுதும் மகாராசா காலைக்கழுவி யந்தத் தண்ணீரைக் குடித்துப் பிழைக்

கிறது. யார் மகாராசாவோ, அவர்கள்தான் எங்கள் குலதெய்வம்; அவர்கள் சொல்லுக்கு இரண்டில்லே; அதிலேயும் இந்த அதிட்டம் யாருக்குக் கிடைக்கும்? இதுவரையும் இந்தக் குடும்பத்திலேயில்லே; இப்பொழு தென்னமோ சுப்பிரமணியசாமி புண்ணியத்திலே வந்திருக்குது; இதை விட்டுப்போட்டு, தன்னாத வய திலே கிட்டுணு சில்லாவெங்கே, பட்டணம் சில்லா வெங்கேயென்று தேடிக்கொண்டு போகவா? வாழ்ந்து போச்சு! இதுவரையும் புலிமலே மறக்குஞ்சு, மகாராசா சந்நிதானத்தைத் தவிர வேறு சேவகத்திலே அமர்ந்த தில்லே; நீங்கள் என்னமோ சருக்காரிலே வேலேக்குப் போகிறீர்கள்; அது உங்களிட்டம்; நாமேன் சொல்ல வேணும்; உங்களுக்கில்லாத மான அவமானமா?"

பார்த்தார் நம் கதாநாயகர், முன் சென்ற வழியில் ஒரு பயலேயுமே காணவில்லே; குதிரை தூக்கியெறிந் தது மன்றிக் குழிபறிக்கவும் ஆரம்பித்துவிட்டது. வேறு வழியில் திரும்பினர்.

விஜயமா:—நான் என்ன சொல்லியும் ஒரே பிடி வாதமாகப் பேசுகிறீர்களே, அம்மான்! என் வார்த்தை யைத்தான் மதியாவிட்டாலும், உங்கள் மகள் பேரி லாவது உங்களுக்கு இரக்கமில்லேயா? நீங்கள் பெற்று வளர்த்த அருமையை முழுதும் துறந்துவிட்டீர்களா? அவளுக்கு என்னேயே கல்யாணம் பண்ணிக்கொள்ள விருப்பமென்பதை நீங்கள்கூட மறுக்கமுடியாது. இருக்கட்டும்; அவள் விருப்பப்படியே செய்யாவிட்டா

லும், அவள் துக்கப்படாமலாவதிருக்கும்படி. தேட வேண்டியது உங்கள் கடமையில்லையா? வீரசங்கிலித் தேவருக்குக் கல்யாணஞ் செய்துகொடுத்தால் எவ் வாறுகுமென்று சற்று யோசித்துப் பாருங்கள்: அவ ளுக்கு இன்னும் வயது பதினாறு நிறையவில்லை, அவ ருக்கோ நாற்பத்தைந்தாகிவிட்டது; அவள் ஒன்று மறியாத இளங்கந்நிகை, அவருக்கோ பெண்சாதி கள் இரண்டு பேரிருக்கிறார்கள். அது தவிர ஊருக்கூர் வைப்புக்களுக்குக் கணக்கில்லை; அவ ளோ, அதிரூபவதியான பெண், அவரோ சாதா ரண மறவர்களுக்குள்ளேயே வெகு விகாரரூப முடையவர்; அவர் ஒழுக்கத்தையும், முதல் தாரம் இருவரையும் நடத்தி வந்திருக்கும் விதத்தையும் கவனித்தால், இப்பொழுது அவர் என்ன சத்தியமே செய்துகொடுத்தாலும், சிவகாமியை அவர் சரியானபடி நடத்துவாரென்றெண்ண இடமேயில்லை; இத்தனை குணக்கேடுகளிருக்க, சிவகாமி அவருடன் எவ்வாறு சுகமாக வாழக்கூடும்? அவள் துயரப்பட்டால், அந்தப் பாவம் உங்களையே வந்து சுற்றிக் கொள்ளுமல்லவா? மனமறியத் தங்கள் மகளையே தாங்களிவ்வாறு கெடுப் பது தருமமா? உங்களுக்கே இரக்கமில்லையா? நீங்கள் தற்கால சம்பத்தைப் பார்க்கிறீர்கள்: ஆனல், நான் சொல்லுவதை மட்டும் திடமாய்க் கொள்ளுங்கள்: வியாச்சியக் கடன்களுக்கு ஜமீன் அடைமானம்; இப் பொழுது வீரசங்கிலித்தேவர் பட்டணத்தில் நடக்கிற தைக் கவனித்தால், வெகு சீக்கிரத்தில் அவர் என்

னிலும் பதின் மடங்கு ஏழையாகி விடுவாரென்பதிற் சந்தேகமேயில்லை. உங்கள் அருமை மகள் நன்மையையே நான் கவனிக்கச் சொல்கிறேன். அவளிதற்கு இசைந்திருந்தால், இந்த நிமிஷமே நான் வெளியேறி விடுகிறேன்; அப்புறமெனக்கு நாவில்லை.

வே. தே:—அவளெல்லாம் சம்மதித்து விட்டாள், ஐயா; அவளெல்லாம் சம்மதித்து விட்டாள்; அவளுக்கு உள்ளுக்குள்ளே இஷ்டந்தான்.

விஜய:—என்ன? வீரசங்கிலித்தேவரைக் கல்யாணஞ் செய்து கொள்வதற்கா?

வே. தே:—ஆமாம், ஆமாம்; இஷ்டந்தான்.

அவர் வாய் மூடு முன், மின்னற் கொடி போல் ஒரு பெண் வீட்டிற்குள்ளிருநது வந்து, அவர் முன்பு விழுந்து, இரண்டு கால்களையும் கெட்டியாகப் பிடிதது க் கொண்டு, "என்னை வேண்டுமானாற் கொன்று விடுங்கள்; கடலை மாடனுக்குப் பலி கொடுத்து விடுங்கள்; நான் ஒரு பொழுதும் அவருக்கு வாழ்க்கைப்பட மாட்டேன்; அதற்குள் நான்று கொண்டேனும் கிணற்றில் விழுந்தேனும் உயிரை மாய்த்துக் கொண்டு விடுவேன்" என்று, மரமும் கல்லு முருகத்தக்க குரலில் முறையிட்டு அழுதாள். அவளைக் கண்டதும், நம் கதாநாயகருக்கு அளப்பரிய ஆனந்தமும், ஒரு பாற் கடுஞ்சினமும் உண்டாயிற்று. "அம்மாளு! நல்லது; நல்லது; வெகு அழகாயிருக்குது: படித்த லட்சணமாயிது! ஏட்டி! இந்த மூதியை உள்ளே யிழுத்துக் கொண்டு

போ" என்றார் வேலாயுதத் தேவர். உடனே, சூர்ப்ப நகை ஜானகியை எடுக்க வந்தாற் போல, மருதியோடி வந்து கால்களையும் கைகளையும் பிடித்துக் கறகறவென் றிழுக்கத் தொடங்கினாள். "அத்தான்! நான் உங்கள் அடைக்கலம், உங்கள் அடைக்கலம்; நீங்களே கதி" என்று அபயக்குரலிட்டாள் சிவகாமி. அதிக ஆலோசனைக்குச் சாவகாசமில்லை. "சுந்தரம்! வண்டி, தயார்!" என்று சொல்லி, திடீரென்றாதி விளக்கை யவித்து விட்டு, ஒரே தூக்காகத் தம்மின்னுயிர் நிலையன்னாளை வாரியெடுத்துக் கொண்டு நம் கதா நாயகர் வாசலில் பாய்ந்தார். இதற்குள் வேலாயுதத்தேவரும் அவர் மனைவியாரும் "கூவேகூ! கொள்ளையோ கொள்ளை!" என்று, மாண்டவரையும் எழுப்பவல்ல குரலில், ஓலமிட் டார்கள். அவிழ்த்து விட்டிருந்த மாடுகளைப் பூட்டி, வண்டியில்நம்கதாநாயகரும் சிவகாமியும்ஏறிக்கொண்டு, தெருவைக் கடக்குமுன், கொள்ளைக்குரல்கேட்ட அவ் வூர் மறவர்களும் மற்றவர்களும், சுமார் முப்பதுபேர் கள், வாளும் தடியுமாக வந்து வண்டியை வளைந்து கொண்டார்கள். பின்பு தம்மெண்ணம் பலியா தென்று நம் கதா நாயகருக்குத் தெரிந்து விட்டது. அந்தக் குழப்பத்தினிடையே, எவ்விதமாயினும் தாம் வந்து காப்பாற்றுவதாயும், கலியாணம் நிறைவேறி விடினும்கூட, அவள் கற்புக்குப் பங்கம் வரும்வரையும் முரட்டுத்தனமாக வொன்றும் செய்து விட வேண்டா மென்றும், தம் காதலிக்குப் புத்திகூறி வாக்களித்தார். பின்பு சிவகாமி வீட்டுக்குள் இழுத்துக்கொண்டு போக

ப்பட்டாள். அவர் நற்குணத்தையும் முந்திய நிலைமையையும் நினைந்து, நம் கதாநாயகரை யொருவரும் தொந்திரவு செய்ய அணுகாது, எல்லாரும் கும்பிட்ட கையும், விசனந் தேக்கிய முகமுமாகத் தூரத்தில் மௌனமாய் நின்றனர்; அவரும், அவர்களைத் தலையெடுத்து நோக்க வெள்கிச் சிறிதுநேரம் வாளாவருந்தியிருந்து, பின்பு, "சரி; எல்லாரும் போய் வாருங்கள்; இம் மூலமாகவாவது உங்களையெல்லாம் கண்டதே சந்தோஷமாயிற்று. சுந்தரம்! வண்டிபோகட்டும்" என்றார். கழுதும் கண்படுக்கும் அந்நடுநிசிவேளையில், அவ் வண்டி, இவ்விடத்துக்கென்று நிச்சயமாகவின்றி, இருட்டிட் சென்றது. துணையாகப் பின்தொடர்ந்த சில மறவர்களும், அவர் "நில்லுங்கள்" என்று கடுமையாய்ச் சொல்லிவிட்டதால், திரும்பிவிட்டார்கள்.

## நான்காவது அதிகாரம்

### சுண்டெலியும் சிங்கமும்

தன் நடக்கையின் நியாயத்தைப்பற்றிச் சிந்திப்பதற்கு, நம் கதாநாயகருக்குப் போதுமான அவகாசமிருந்தது. வண்டி புறப்பட்டுச் சிறிதுநேரமானபின், சுந்தரம், "மகராசா உத்திரவென்ன?" என்று கேட்டதற்கு, சங்கரசமுத்திரம் என்ற ஊருக்குச் செலுத்

தும்படி சொன்னார். பின்பு, அவனாயினும் வண்டிக் காரனாயினும் அவருடன் பேசத் துணியவில்லை. கிருஷ்ணபக்ஷ துவாதசியும் மேகசஞ்சாரமுமாக, பாதை யொரே யிருட்டாயிருந்தது. நெருப்புக் குச்சி யைக் கிறிக் கடியாரத்தைப் பார்க்க, மணி பன்னிரண் டை நெருங்கிக் கொண்டிருந்தது. பித்தர் மனத்தில் திடீரெனத் தோன்றி மறையும் சுவபோதத்தைப் போல் அவ்வொளி தோன்றி யவிந்தவுடன், பழைய அந்தகாரம் வந்து மூடிக்கொள்ளவே, விஜயமார்த் தாண்டத் தேவர் ஆலோசனையி லாழ்ந்தார்.

முன்னிரவிலே, நடுவூரினின்றும், தாம், தங்காத லியை பலாத்காரமாய்த் தூக்கிச் செல்ல முயன்றது முழு மூடத்தனமே; தம் காதற் பெருக்கையும், அதனி மித்தம் தாம் எத்துணை துணியவல்லவ ரென்பதையும் அது வெளிப்படுத்திப் பிறரை யெச்சரித்துத் தமக்கு விகாதத்தை விளைத்ததன்றி, யாதானும் குணங்கண்ட பாடில்லை. ஆயினும், தம் காதலியிடத்துத் தம் காதற் பெருக்கை வெளியிட்டு, அவள் மனப்பயத்தைத் தீர்க்க இடந்தந்ததன்றோ? அது எவ்வளவோர் பெருநன்மை? இது நிற்க: இனி யென் செய்வது? தாம் வாளாவிருந் தால், சில தினங்களில் விவாகம் நிறைவேறிவிடும்; வருமுன் காப்பதன்றி வந்தபின் காத்தற்கேற்ற விஷய மன்றிது. தாம் புலிமலைசென்று நடந்துகொண்ட விதம் மறுநாளே வீரசங்கிலித் தேவருக்குத் தந்தி மூலமாய்த் தெரிவிக்கப்படுமென்பதிற் சந்தேகமில்லை; அதையறிந்து, அவர், முன்னுத்தேசத்தை மாற்றி,

உடனே புறப்பட்டு வந்து மணம்புரிந்து கொள்ளக் கூடும்? ஒருவேளை, தம்மேல் வியாச்சியஞ் செய்யக் கூடும்; அன்றேல், நன்னடக்கைக்கு ஈடளிக்கும்படி யேனும், வேலாயுதத்தேவர் மூலமாக வழக்கிட்டு அவமானப் படுத்தக்கூடும்; எங்ஙனம் ஆலோசிக்கினும், தாம் இவ்வாறு நடந்துகொண்ட பின்னர், முன்போல் வெளியில் தலையெடுத்துப் பல நண்பர்களும் உலகமும் காணவுலாவி, பொதுமதிப்புக் குரியதோர் உத்தியோகமும் வகிப்பது அசாத்தியமே. 'குன்றுவ குன்றியனையவே செய்யினும், குன்றினனை யாருங் குன்றுவரன்றோ? மயிர் நீத்தபின் கவரிமா வாழ்வதெங்ஙனம்? ஊனமேயான வூனிடையிருக்கும் உயிரினைத் துறந்தேனும், ஒண்பூணுக மானமேபுரப்பதன்றோ அவனிமேல் எவர்க்கும் வரிசையும் தோற்றமும் மரபும்? தலையினிழிந்த மயிரனைய வாழ்க்கையால் இனி யென் பயன்'? ஆகவே, உயிரைத் துறப்பதே யுத்தமம்......சரி: அங்ஙனம் உயிர் துறக்கிலென்னும்? தாம் மடிந்ததையன்றித் தம் மின்னுயிர்க்காதலியும் தற்கொலை செய்து கொள்ள நேருமே? அன்றேல், அவள் தன் வாழ்நாளை வீரசங்கிலித்தேவர் மனைவிகளில் ஒருத்தியாகக் கழிப்பாளோ? ஆகா! அது எவ்வளவோர் விசனகரமும், அருவருப்புமான எண்ணம் ? ஆதி முதற் 'பெண்டாட்டி' 'பெண்டாட்டி' யென்று தாம் கொஞ்சியதும்; நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக அவள் அழகு முதிர்ந்ததைக்கண்டு, தாம் களி கூர்ந்து பூரித்ததும்; இது நல்ல புஸ்தகம், அது நல்ல பாகமென்று தெரிந்தெடுத்துக்கொடுத்து

அவளைக் கல்வியில் தேற்றியதும்; சூரியப்பட்டி ஜமீன் தார் மகனை மறுத்ததும்; எத்தனையோ மயக்குக்களை யெல்லாம் வென்று தம் கந்நிக்காதலைக் காப்பாற்றி வந்ததும்; தாம் தற்கொலைசெய்து கொண்டு அகால மரணத்தை யடையவும், தம் ஜந்ம விரோதியாகிய விகாரரூப வீரசங்கிலி, தம் பிரியநாயகியைப்பெற்று, அவளது அருமை பெருமை யறியவல்லாத தன் மௌட்டியத்தால் அவளையும் ஒரு கூத்தியை நடத்துவதைப் போல் நடத்துதற்குமோ? ஈசா! இதுவோ உன் திருவுளமிருந்தவாறும்? அந்தோ! பணவாசையினும் தீயதோர் தீமையும் உலகின்கணுளதோ? இப்பாவி வேலாயுதத்தேவன் மதியிருந்தபாடென்னே! தன் அருமை மகளின் நல்வாழ்க்கையைச் சிறிதும் கருதிலனே! 'சிங்கக்குருளைக் கிடுதீஞ்சுவையூனை, நாயின் வெங்கட்கடுங்குட்டியை ஊட்ட விரும்பினனே!'......ஆகா! தாம் கடைசியாகப்பார்த்து இன்னும் இரண்டு மாதங்கள் கூடவாகாதிருந்தும், அதற்குள், சிவகாமியின் பேரழகு எவ்வளவு திரட்சியையும் சம்பூரணத்தையு மடைந்திருக்கின்றது! வண்டிக்குள் தம்முடனிருந்த சில நிமிஷங்களில், அச்சத்தாலும், ஆசையாலும், தம் மைப்புல்ல விரும்பினள்போல் தம்மேல்நெருங்கிப்பதுங்க, தாமொருகையால் முதுகைத்தடவித் தம்மோடு அணைத்தவுடன், நாணத்தால் முகங்கோட்டி முறுவலித்து அவள் சிறிது பின்வாங்கிக்கொண்ட விநயத்தையும்; நாலைந்துபேர் சேர்ந்து முரட்டுத்தனமாக அவளை வண்டியினின்றும் இழுத்துச் செல்கையில்,

தாயை அகன்று செல்லும் கன்றைப்போல, அவள் திரும்பித் திரும்பி நோக்கிய காதற் பார்வைகளையும் ஒருகால் மறப்பினும், வீட்டின் கண், "அத்தான்! நான் உங்கள் அடைக்கலம்; நீங்களே கதி" என்று ஓலமிட்ட அபயக்குரல் மறக்கற்பாலதோ? அவ்வபயக் குரலுக்குதவாத ஆண்மையும் ஓராண்மையோ? மமகாரத்தாலெழும் தன்மானமோ பெரிது? உலக மதிப்போ பெரிது? கடமை, மானம், என்பனவெல்லாம் இனநோக்கத்தால் வருபனவே யன்றிக் கேவல சுபாவத்தினவன்றே? தனக்குத்தான் செய்தற்குரிய கடமைகளும் உளவன்றோ? எந்நியாயம் பற்றி இத்தகை யிடுக்கண் வாய்ப்பட்டுழலும் ஓர் கந்நிகையைக் கைவிட்டகல்வது? அவள் விஷயத்தில் நேரிடக்கூடும் தன்மானக் கேடும் அநீதியும் உலகத்தால் வசைகளாகக் கொள்ளப்படினும், ஆழ்ந்து ஆராயின், இசைகளாகவன்றோ ஒருவாறு தோன்றுப? இப்பெருங் கடமையைத் துறந்து பேடித்தனமாக வொழுகுவது எத்துணையோர் பேதைமை! உலகத்தால் அவமதிக்கப்படும் எக்கருமமியற்ற நேரினும் நேர்க, அதிபாதகங்களே செய்ய நேரினும் நேர்க, நல்வழியினுதல் தீவழியினுதல், அவளை இவ்விபத்தினின்றும் விடுவித்து, இருவர் மநோபீஷ்டத்தையும் நிறைவேற்றிக்கோடலே தம் முதற்கடமை. இவ்வாறு,

"கோபமுமறனும் மானக்கொதிப்பு மென்றினைய வெல்லாம், பாபநின்றிடத்து நில்லாப்பெற்றிபோற் பற்றுவிட்ட; தீபமொன்றொன்றை யுற்றுலென்னலாஞ்

செயலிற்புக்க, தாபமுங்காம நோயுமாருயிர் கலந்த வன்றே.''

கண்ணிலாக் காமவயப்பட்ட நம் கதாநாயகர் மேல் ஆலோசனையிற் புகும் தறுவாயில், "அப்பாடே! நான் செத்தேன்'' என்றலறிக்கொண்டு, வண்டிக்கா ரன் முன்னிருப்பினின்றும் கீழே விழுந்தான்; கல் மழை பொழிவதுபோல், வண்டிக்கூண்டின் மேல் தட படவென்ற தடிக்கம்புச் சத்தம் கேட்டது; இமைப் பொழுதில், வண்டிமாடுகள் அவிழ்த்துவிடப்பட்டு, வண்டியும் தலைகீழாகச் சாய்க்கப்பட்டது; முதலில் நம் கதாநாயகரும், அவர்மேல் படுக்கை சாமான்களும், பின்பு உடுப்புப் பெட்டியும் கூசாவும், கடைசியில் முன்பெட்டியில் அரை நித்திரையாக விருந்த சுந்தர மும், தாம் நினையாவண்ணம் கீழே யுருண்டுவந்து சேர்ந்தார்கள். சாமான்களினின்றும் தங்களை விடு வித்துக்கொண்டு ஒருவாறு இருவரும் எழுந்து நின்ற வுடன், சுமார் முப்பது திருடர்கள் ஆயுதபாணிகளா கச் சூழ்ந்து நிற்பதைக் கண்டார்கள்; இதற்குள், சிலர் வந்து இவர்கள் வாய்திறக்க முடியாவண்ணம் துணியினல் வாயைக்கட்டி விட்டார்கள்; சிலர் சாமான் களைத் தலைமேலெடுத்தார்கள்; இரண்டு மூன்று நிமிஷங்களுக்குள், சிறிது தூரத்திலிருந்த ஒரு பாழ் மண்டபத்தை யெல்லோரும் அடைந்தார்கள்; அங் குச் சிலதிருடர்கள் உட்கார்ந்திருந்தார்கள்; நம் கதா நாயகர் கையைப் பிடித்துச் சென்ற ஒருவன், "வேட்டை, அண்ணே, வேட்டை; வில்வண்டி எச

மான்கள்'' என்றான். மண்டபத்திருந்த ஒருவன், நெருப்புக் குச்சியால் ஒரு மெழுக்குவர்த்தியைப் பொருத்தினன். அவர்களுள் தலைவனாகக் காணப் பட்ட ஒருவன், "ஏலே! அந்த வெளிச்சத்தை யிங்கே கொடு, பார்ப்போம்'' என்று அந்தவர்த்தியைத் தன் கையில் வாங்கிக்கொண்டு, வாய்க்கட்டை யவிழ்க்கச் சொல்லி, நம் கதாநாயகர் முகத்தருகே விளக்கைப் பிடித்துக்கொண்டு, ஒரிமைப்பொழுது உற்றுப்பார்ந் தான்; உடனே, வர்த்தியையும் நழுவவிட்டு, உடம் பெல்லாம் நடுநடுங்கி வியர்க்க, அடியற்றமரம் போல அவர்கால்மேல், "மகராசா! அறியாப்புத்தி'' என்று வாய்குழறிக்கொண்டு விழுந்து விட்டான். கீழே விழுந்தவர்த்தி தன் தலைமயிரைப் பொசுக்குவதையுங் கூட அவன் உணரவில்லை; மற்றொருவன் அதை யெடுத்துச் சரியாகப் பிடித்தான். சிறிது பிரமை நீங்கியவுடன், நம் கதாநாயகர், சிரித்துக்கொண்டு, "பாதகமில்லை, வீரமாகாளி, பாதகமில்லை; சும்மா எழுந்திரு'' என்றார். அவனோ, எழுந்திராது, "என் குலதெய்வமன்றோ? எனக்கு உயிர்ப்பிச்சை தந்த சாமியன்றோ? நாய்க்குட்டி, இனியென்னசெய்வேன்?'' என்று புலம்பிக்கொண்டிருந்தான். பின்பு நம் கதா நாயகர் குனிந்து அவனைத் தம் கைகளால் தூக்கி நிறுத்தி, "ஒன்றும் பாதகமில்லை; நீ சிறிதும் வருந் தாதே; வேண்டுமென்று செய்த சங்கதியன்றேயிது. உன்னைக்கண்டுபிடிப்பது எப்படி யென்று நான் ஆலோ சித்துக்கொண்டிருக்கையிலேயே, இது நேர்ந்தது.

ஆகவே மிகச் சந்தோஷமாயிற்று. தேடிப்போன மூலிகை காலில் தடுக்கியது போலாயிற்று. உண்மையில், எனக்கு மிகச் சந்தோஷமே" என்று பல கூறி, அவனைச் சமாதானப்படுத்தினர். வெட்டுண்ட பனை மரங்கள்போல் கீழே சாஷ்டாங்க நமஸ்காரமாகக் கிடந்த மற்றவர்களும், அவர் உத்திரவுப்படியெழுந்து, கைகட்டி வாய் புதைத்து நின்றனர். பின்பு சிறிது நேரம் ஆலோசித்திருந்து, வீரமாகாளியை நோக்கி, "இவர்களை யெல்லாம் விலகிப்போகச்சொல்" என்று நம் கதாநாயகர் கூற, அவனுத்திரவுப்படி திருடர்களெல்லாம் மண்டபத்துக்கு வெளியே சென்று, சில மரங்களினிடையே பதுங்கியிருந்தனர். விஜயமார்த்தாண்டத்தேவர் மண்டபத்தில் தம் படுக்கைச் சுமையின் மேலுட்கார்ந்து கொண்டார்; சுந்தரம் திருவிளக்குத்தண்டாக மெழுக்கு வர்த்தியைப் பிடித்துக் கொண்டு நின்றான்; திருடர் தலைவன், கைகட்டி வாய் புதைத்து இராமரைக்கண்ணுற்ற குகனைப்போல் நின்றான்; பின்வரும் சம்பாஷணை நேர்ந்தது:—

விஜயமா: என்ன, வீரமாகாளி! நீதானிப்பொழுது கொள்ளைத்தலைவனோ?

வீரமா: மகராசா புண்ணியத்தினலே, நாய்க்குட்டி தலைமைக்கு வந்து இரண்டுமொச மாகுது.

விஜயமா: கூட்டத்தில் இப்பொழுது எத்தனை பேரிருக் கிறார்கள்?

வீரமா: மொத்தம் நாலுகுறைய நூறுபேர்;

அங்கே அங்கே, போயிருக்கிறார்கள்; என்னமோ வயிற்றுப்பிழைப்பு.

விஜயமா: உன் மகன் சங்கரலிங்கம் சுகமா?

வீரமா: மகராசா கொடுத்த உயிர்ப்பிச்சை; நாங்கள் குடும்பத்தோடே காலரு வந்துகிடக்கையிலே மகராசா தந்த மருந்தினாலே தப்பினோம்; மகராசாவே எங்கள் குடிசைக்கு விசயமாச்சுது. எப்பொழுதும் அடியேங்கள் அரமனை நாய்க்குட்டிகளே; அதிலேயும் நானும் என் குடும்பமும் மகாராசா காலைக் கழுவிக் குடித்துக் கொண்டிருக்கிறோம.

சுந்தரம்: வீரமாகாளித்தேவர், தம்மகன் பேரை மாற்றி, 'மார்த்தாண்டம்' என்று மகராசா பேரை வைத்திருக்கிறார்.

விஜயமா: அப்படியா? சந்தோஷம்.—ஆனால் இனிமேல் மஹாராஜா வீரசங்கிலித்தேவரே.

இதைக் கேட்டவுடன் வீரமாகாளி மறுபடியும் இவர் கால்களில்விழுந்து, "மகராசா வாயிலிருந்து அப்படி யுத்தரவாகக் கூடாது; எப்பொழுதும் எசமான்களே எங்கள் மகாராசா எசமான்மட்டும் ஒருவார்த்தை சொன்னால், நாளையே சமீனுக்கு மகராசா ஆக்கிவிடுவோம்; எங்கள் பெரிய துரைப் பாண்டியனிருந்த இடத்திலே, ஒரு அழுகப் பூனைக் குட்டியிருந்து அதிகாரஞ் செலுத்துகிறதா? மகராசா நலை யசைத்தால் போதும்" என்றான்.

விஜயமா; எழுந்திரு, காளி! எழுந்திரு; எனக்கு ரொம்பவும் சந்தோஷமே. ஜமீனென்றும் வேண்டாம் நான் சொல்வதை மட்டும் செய்தால் போதும். உன் வீரத்தனமெல்லாம் புலிமலை யூரில் செல்லுமோ?

வீரமா: மகராசா வெளியேறி விட்டால், புலிமலை யெல்லாம் எலிமலைதான். பொக்கிசத்தை வேண்டு மானாலும் கொள்ளையாடி விடுகிறேன். மகராசா தயைமட்டுமிருந்தால், சந்திரனைக் கொண்டு வந்துவிட மாட்டோமா?

விஜயமா: சரி; உன்னோடு சாவகாசமாய்ப் பேச வேண்டும்! இது தருணமுமல்ல, இடமுமல்ல; வண் டிக்காரனை முற்றும் மறந்துவிட்டேனே; அவன் என்ன மாயிருக்கிறான் பார்க்கச்சொல்.

ஒருவன் பாட்டைக்குச் சென்று வந்து, வண்டி யைக் காணவில்லை யென்றும், வண்டிக்காரன் ஓட்டிக் கொண்டு போயிருக்க வேண்டு மென்றும் தெரிவித் தான்.

வீரமா: நாய்க்குட்டி ஒரு விண்ணப்பம்: இனியிங் கிருக்கலாகாது. நாங்களானால் ஒன்றுமில்லை; போலீசுச் சென்னலைப் புலிகள் வந்தால், மகராசா எங்களோடிருப் பது நல்லதல்ல. வேறு தனியிடத்துக்குப் போய் விடுவோம். மகராசா உத்திரவானால், அலுங்காமே குலுங்காமே பூப்போல தூக்கிக் கொண்டு போய் விடு கிறோம்.

விஜயமா: "அதொன்றும் வேண்டாம்; நான் நடந்தே வருகிறேன். சற்று நில்" என்று சொல்லித், தம் பெட்டியைத் திறந்து ஒரு காகிதத்தை யெடுத்துத் தமக்கு 'டிப்டி கலெக்டர்' உத்தியோகம் தேவையில்லை யென்றும், தொந்திரவை மன்னிக்கும்படிக்கும் 'கவர்நரு'க்கு ஒரு தந்தி யெழுதி, அடுத்த வூர்த் தந்தியாபீசிலன்றி, 'ரயிலே'யிச் சென்று தூத்துக்குடித் தந்தியாபீசிலிருந்து அதை யனுப்பும்படி வீரமாகாளியின் பரிவாரங்களில் ஒருவனைப் போதுமான பணத்துடன் அனுப்பிவிட்டு, தாம் ஆயத்தமா யிருப்பதாகச் சொன்னார். உடனே வீரமாகாளி, தன் பரிவாரங்களுக்கு, மற்றவருக்குத் தெரியாததோர் பரி பாஷையில் சில மொழிகள் கூறி, 'பருந்துக்கூடு' என்றான். நம் கதா நாயகர் சாமான்களைச் சிலர் தலை மேலெடுத்துக் கொள்ள, எல்லோரும் ஒருவர் பின் னொருவராக, எறும்பொழுக்குப் போல், அந்த மையிருட்டினூடே மலைக்காட்டுட் சென்றனர்.

## ஐந்தாவது அதிகாரம்



மூர்க்கராஜா துர்மந்திரி.

உலக வாழ்க்கையிற் காணப்படும் ஏற்றத் தாழ்ச்சிகளைப்போல, விண்ணளாவு குன்றங்களும், தம்மிடைத் தியங்கி நிற்கும் நீரில் தோன்றும் விண்மீன்கள் சேடனதுசிரோமணிகளோவென ஐயுறும் அளவு கீழ்போன பள்ளத் தாக்குக்களும் வயின்வயின் கலந்து

திகழப்பெற்றதும், அவ்வாழ்க்கையுட் சிக்கி மனை மக்களாதிய வன்தளைகளாற் கருமசக்கரத்திற் கட்டுண்டுழலும் ஆன்மா கடைத்தேறி வெளிப்படுதலினும், தன்னுட் புகுந்தார் வெளியுற்று நெறிகாணல் மிகவருமையாக, பல்வேறு புற்பூண்டுகளும் மரங்களும் செடிகளும் கொடிவருக்கங்களும் செழித்து வளர்ந்தடரப் பெற்றதுமான தோர் மலைப்பிரதேசத்திலே, அவ்வான்மாவை வந்துமூடும் மும்மலமாய இருளைப் போன்றதோர் கள்ளிருள் எங்கினும் பரவியிருந்தது; பிரபஞ்ச விருத்தி மும்முரம் ஒய்ந்தடங்கியுள்ள அபூர்வ காலங்களில் அவ்வான்மாவின் கட்டோன்றும் தன்னறிவொளியைப்போல, கருமேகங்களினூடு சில வெள்ளுடுக்கள் கண்சிமிட்டின; பகற்பொழுதில் வாயுதேவனோடு போர்புரிந்த களைப்புத்திர உறங்குவன போன்று, தாவரவருக்கங்கள் தலைசாய்த்து அசைவற்று நின்றன; அமுதகதிரோன் மண்டலத்தை மிக வண்ணியதாற் குளிர்ச்சிபொறாது கருங்கம்பளம்போர்த்து நின்றார்போல, பொருப்புக்கள் புயற்போர்வை போர்த்து நின்றன; தன்னிழலைத் தாவமுயல்வான் முயற்சியைப்போல இடையறாச் செலவினவாகிய மலையருவிகள், இரவு பகலென யாவற்றிற்குமுள்ள நிவர்த்திப் பிரவர்த்தி காலங்கள் எமக்கிலையே என்று தம் வெள்ளிய பல்வரிசைகளைக் காட்டிக் கோவென்றிரங்கி முறையிடுவனபோல் ஆரவாரித்தோடிக் கொண்டிருந்தன; துரிஞ்சில், ஆந்தை, காட்டுப்பூனை போன்ற சில பிராணிகளும் இடையிடையே தங்குரலெழுப்பி யிரைதேடி உலாவித்திரிந்தன; சடசட

வென்றும் சத்துப்பொத்தென்றும் சிலவமயங்களி லெழும் பேரொலி, இப்பிரதேசத்தின்கண் வேறு பெரிய விலங்கினங்களின் சஞ்சாரமுமுளதென்பதைக் குறித்து நின்றது; சிலவாயதாரைகள் தரும் சிற்றொளியா லூற்று நோக்குமிடத்து, குறிஞ்சி நிலப்பயிர் களுள் யாதும் புலப்படாமையும், மானிட சஞ்சாரத் தைக் குறிக்கும் அடிச்சுவடுகளேனும் கொடிவழிக ளேனும் காணப்படாமையும், ஆங்குள்ள மரஞ்செடி களும் புற்பூண்டுகளும் தம்போக்குப்போல் வடுவின்றி வளர்ந்தோங்கிச் செழித்திருக்கின்றமையும் வெளி யாகி, இத்தலம், சாதாரண மனித சஞ்சாரங்கிடக்க, கல்லிற்பசிய நாருரித்துத் திறைகொள்ளவல்ல 'காட்டி லாகா' காரரும் காலடிவைத்திராத குறவரும் மருளுங் குன்றப்பிரதேசமென்பது தெரியவரும். இம்மலங் காட்டின் நடுவே, மதயானையீருரிபோர்த்த மலைமகள் மணாளரைப் போன்று மழை யணிந்தோங்கியதோர் வானுறு குன்றின் குடுமியின்கீழ், அப்பெருமான் தம் நுதல் விழியைத் திறந்தார்போலத் திடீரென்றோர் வெளிச்சம் அந்நடுநிசிக்கட்டோன்றிற்று. தேவலோ கத்துக்கே யுரிமைப்பொருளாக விருந்த அக்கினியை மானிடருக்குக் கொணர்ந்து தந்தளித்ததற்காகவோர் கருணையம்பெருமானைக் கடவுளர்பிரான் கொடுந் தண்டனைக்குட் படுத்தினனென்றொரு கிரேக்கப்பழங் கதையுளது. அஃதெங்ஙனமாயினும், நெருப்பொளி கண்டுழி மானிடவாசத்தை யூகித்தல் உலகவழக்கம்; ஆயினும் இத்தகைய காடுகளில் மூங்கில்கள் உராய்வ

தால் மனிதப் பிரயத்தனமின்றியே நெருப்பெழுவது உண்டென்றும் சொல்வாருளர்.

இச்சந்தேகத்தை யகற்றும் பொருட்டேயோ பின்வரும் செம்பதத்தைப் பாடிக்கொண்டு இருவர் திடீரெனத்தோன்றினர்:—

பல்லவி.

லயில லல்லேலேலோ, பறங்கி, லயிலலல்லேலேலோ,
லயில, லயில, லயில, லயில, லயிலலல்லேலேலோ,

கண்ணிகள்.

(1) பனைகறுத்திருக்கும், பறங்கி, சோறுவெளுத்திருக்கும்|| அதிலே வடியும் சாற்றைக் குடித்தால் தலைகிறுகிறுக்கும்—(லயிலலல்லேல......).

(2) முக்கலச் சாராயம், பறங்கி, முன்னூறு கோழி முட்டை||பந்தனை தின்றாலும், பறங்கி, வெற்றிலை தின்றுப்போய்—(லயிலலல்லே......).

(3) கறுத்த கண்களடா, பறங்கி, பருத்த கொண்டையடா||சிறுக்கி முறுக்கு உருக்கி மனத்தைக்கிறுக்கி விட்டதடா—(லயிலலல்லே......).

அவர்கள் மனங்கிறுங்கிவிட்டதாகவே பாடினும், ஒருவன் தலையில் பெரியதோர் சுமையும் மற்றவன் கழுத்தில் மாலைபோல் தொங்கும் ஆட்டுக்குட்டியும் இருப்பதைச் சிறிதும் மதியாது, பாஞ்சாலிக்குப்

பூக்கொணரும் பொருட்டுக் குபேரனது நந்தனத்தை நோக்கிச் சென்ற வீமனைப்போல, அவர்கள் அதிவேகமாக அவ்வழியிலா மலங்காட்டினூடே செல்லும் செலவும், அவ்வீமனது தமையனைப்போற் பாயும் பாய்ச்சல்களும் தாவும் தாவல்களும் விசேஷ மனத்தெளிவையும் சரீர திடனையும் சுறுசுறுப்பையுமே வெளிப்படுத்தின. அவர்கள் சிறிதும் திகைபபுத்தியக்கமின்றி வெருவேகமாய் அவ்வெளிச்சத்தை நோக்கி யேறினர்; அந்நியரைத் திகைக்கச்செய்யும் ஒரு பெரிய நகரியினூடே பல்லாண்டுகளாக அதன்கண்ணே வதிந்து சஞ்சரித்து வருவாரொருவன் எவ்வாறு சர்வதாராளமாய் வேண்டியவிடத்துக்கு நேராகச் செல்வானோ, அவ்விதமே அக்காட்டினூடு அவர்கள் சென்றார்கள். அவ்வெளிச்சத்தை யணுகியவுடன், தங்கள் பாட்டையும் பேச்சையும் நிறுத்திவிட்டார்கள். விசாலமான ஒரு வட்டப்பாறையின் மத்தியில் கணகணவென்று ஒரு தீ யெரிந்துகொண்டிருந்தது. அதைச் சூழ்ந்து சில குளிர் காய்ந்துகொண் டிருந்தார்கள். ஒருவன் மட்டும் ஏதோ மாமிசத்தைப் பாகஞ்செய்து கொண்டிருந்தான். இவர்களுக்குள் நடந்து கொண்டிருந்த சம்பாஷணையைச் சிறிது கவனிப்போம்:—

முதல் மனிதன்: அண்ணே! நம்ம மகராசா என்ன தயவுங்கள், பார்த்தீங்களா? நேத்துச் சொக்கன் காவிடறி இலத்தம் பெருகினப்போ, திடீருனு சரிகையுரு மாலைக் கொளிச்சுக் கட்டினாங்களாம். பெரிய மக

ராசா இருந்தாங்களே, அவுககூட இவ்வளவில்லே, அண்ணே.

இரண்டாமவன்: ஆமண்டா, இவுகளையுஞ்சொல்லி இன்னொத்தரையும் சொல்லவா? அந்தப் பாவிப் பயல் சர்ச்சி சமீனை வீரசங்கிலிக்குக் கொடுத்தானே! இவு களுக்கு மட்டும் வந்திருந்தா நமக்கெல்லாம் இந்தப் பிளேப்பே வேண்டாம்; இவுகள் காலைக் களுவிக் குடிச் சுக்கிட்டிருக்கலாம்.

மூன்றுமவன்: இம்; எல்லாம் ஊளப்பா, ஊள்; தலையிலே அவன் எளுதியிருக்கிறபடி யில்லா நடக் கும்.

முதலாமவன்: ஆனாலும், அண்ணே, இவுகளுக்கு இது தகாது. அண்ணே! கரிவீரன் மகராசா வந் தப்போ போனான்; இன்னும் வரக் காணமே? எங்கே போனான் அண்ணே?

மூன்றுமவன்: எல்லாம் மகராசா காரியமாகத் தான் போயிருக்கான். ரயிலேறி—.

இதற்குள் அடியரவம் செவியுற, ஆளரவத்தால் திடுக்குற்ற மானினங்கள் மேய்ப் பொழித்துக் காது களைத் தூக்கிக் கொண்டு நாலாபக்கமும் நோக்குவது போல், எல்லோரும் பேச்சொழிந்து கவனிக்கலானார் கள். ஒருவனெழுந்து நின்று "எலியோ புலியோ" என்று உசாவினான். இதற்குள் நெருங்கிவிட்ட இரு வரில் ஒருத்தன், "புலி" யென்றான். எழுந்தவன்,

'அண்ணே! கரிவீரனுக்கு நூறு வயசு; இப்பத்தான் நினச்சம், அதோ வந்திட்டான்' என்று சொல்லிக் கொண்டே யுட்கார்ந்தான். வந்தவர்களில் "புலி" யென்றுத்தர மளித்தவன், வீற்றிருந்தாரை நோக்கி, "மகராசா என்ன செய்கிறுக?" என்று வினவ, அவர் களில்ஒருவன், "தலைவரோடு பேசிக்கொண்டிருக்காக" என்றான். உடனே அவன் சிறிதும் தாமசிக்காது தன் தலைச் சுமையுடன் மேற் செல்வானாயினான். அவனுடன் வந்தோன் ஆட்டுக்குட்டியைக் கீழே விட்டு விட்டு, அவர்களுடன் பேசிக்கொண்டு தீயிற் குளிர் காயத்தொடங்கினான். சுமைக்காரன் கொஞ்ச தூரஞ் சென்றவுடன், எதிரே யிருட்டினின்றும், "என்ன கிளங்கு?" என்றொரு சப்தம் கேட்டது; அவன் "வள்ளி" என்று சொல்லி விட்டு நிற்க, எதிரே யொரு தீபம் பொருத்தப்பட்டது. மேற் சென்று, அதைத் தன்கையில் வாங்கிக் கொண்டு, அதன் உதவி யினால் எளிதில் வெளிக்குப் புலப்படாததோர் குகைக் குள் இறங்கலானான்; சிறிது தூரஞ் சென்றவுடன் அக்குகைவழி முடிந்து விட்டாற் போலிருந்தது. ஆங் கோர் ரிடுக்கில் மறைவாகவிருந்த சிறு கயிறொன்றைப் பிடித்திழுத்து விட்டு நின்றான்; இயற்கையான பாறை போல் தோன்றிய வோர்கல் திடீரென்று கீழே தொங் கிச் சரிந்தது; அதனாலுண்டான வாயிலின் வழியாகச் சுமையையுள்ளே தள்ளிவிட்டுத் தானும் நுழைந்தான். உட்சென்று மற்றோர் பெருங் கயிற்றைப் பிடித் திழுக்க, கற்கதவு முன்போல் மூடிக்கொண்டது.

உள்ளே இடம் விசாலமாக விருந்தது; நாற்புற மும் வெகு உன்னதமான பாறைகள் சுவர்போ னின் றன; தலையில் விழுந்து விடுவதுபோல்ஒரு பாறை, மேல் வெளியின் முக்காற் பாகத்தைக் கூரைபோல் மூடிக் கொண்டிருந்தது; வானவெளி தெரியும்படியாகச் சிறிது பாகமிருந்தது; ஆனால் பாறைச்சுவர்கள் செங் குத்தாயும் மிகவுயரமாகவும் இருந்தமையால், உச்சியில் வந்தாலன்றிச் சூரிய சந்திரர் வெளிச்சம் நன்கு தெரிய மார்க்க மில்லை; மிகத் தெளிவான நீரையுடைய தோர் சுனையும் அவ்விடத்திருந்தது. சுமைக்காரன் போம்பொழுது, 'பருந்துக்கூடு' என்று வழங்கும் அக் குகை அறையில் ஒரு மெழுக்குவர்த்தி விளக் கெரிந்து கொண்டிருந்தது; கட்டிற்போல் மேடாயிருந்த ஒரு பாறையின்மீது பரப்பப்பட்டிருந்த படுக்கையில் நம் கதா நாயகர் ஒரு திண்டின்மேற் சாய்ந்துகொண்டு வீற்றிருந்தார்; வீரமாகாளித்தேவனும் சுந்தரமும் கீழேயுட்கார்ந்திருந்தார்கள். கரிவீரன் என்ற சுமைக் காரன் நம் கதாநாயகர் முன்பு சாஷ்டாங்க தண்ட னிட்டு நின்றெழுந்து, "மகராசா! சமுகத்து உத்தரவுப் படி செய்துவிட்டேன்: காகிதத்தைத் தூத்துக்குடிப் போஸ்டிலே போட்டுவிட்டேன்; வரும்பொழுது புலி மலைக்கு வந்து விசாரித்தேன்; வீரசங்கிலித் தேவர் இன்னும் இரண்டு மூன்று நாள்களில் வரப்போகிறு ராம். செஞ்சாலியிலைக்கு வந்து சமீன் ரொக்கப் பணத்தை வாங்கிக் கொண்டு, புலிமலைக்கு வந்து, எல் லாம் ஏற்பாடு செய்து கொண்டு, முன் முகூர்த்தத்தி லேயே, 31-வது தேதி, கலியாணம் நடக்குமாம்" என்று

சொன்னான். அவனை இரண்டொரு கேள்விகள் கேட்டு, அவன் கொணர்ந்த சாமான்களைச் சுந்தரஞ் சரிநோக்கிய பின்னர், முன்போற் கதவைத் திறந்து அவனை வெளியே அனுப்பிவிட்டார்கள். கதவை யிழுத்து மூடியபின், கீழ்வரும் சம்பாஷணை நடந்தது:—

விஜயமா: என்ன வீரமாகாளி, இனி யென்ன யோசனை? வீரசங்கிலித்தேவர் புலிமலைக்கு நாளை அல்லது நாளை நின்று வந்து விடுவார்; அவர் வந்தால் பந்தோபஸ்து பலமாய் விடும்; சுந்தரம்போய்க் கடத்திக் கொண்டு வந்து விடுதல் சாத்தியமாயிராது; நாமெண்ணியபடி சாவகாசமுமில்லை; நாளையல்லது மறுநாட்குள் கடத்த முடியுமா?

சுந்தரம்: மகராசா உத்திரவு கொடுத்தால், நாய்க்குட்டிபோய் நாளையே கொண்டு வந்து விடுகிறேன்.

விஜயமா: ஆமடா, மஹாராசா நாய்க்குட்டி யிருவரும் போய்த்தானே தலை பிழைத்தது தாலிபாக்கிய மென்று திரும்பி வந்தோம்! நீ யென்ன சொல்லுகிறாய், காளி?

வீரமா: மகராசா, அதுதானே யோசிக்கிறேன். இங்கிருந்து புலிமலை யிரண்டு காத மிருக்குது; நம்முடைய ஏற்பாடெல்லாம், இது வரையும், நாலைந்து நாளாகக் காத்திருந்து கண்ணி வைத்து வேலையை முடிக்கிற தென்றிருந்தது.

மகராசா சொன்னாற் போலே, இனி அது முடியாது. வீர சங்கிலி வந்திட்டால் அது கட்டந் தான். ஒரு வேளை கண்ணி தப்பிட்டால் பின்பு முழுமோசம். எனக்கு ஒன்று தோன்றுகிறது: மகராசா இங்கேயே இருங்கள். நாய்க்குட்டி, என் மறக்குட்டிகளைக் கூட்டிக்கொண்டு போய், ஒரே தூக்காகத் தூக்கிக்கொண்டு வந்து விடுகிறேன். வீரசங்கிலியில்லை, இந்திரன் சந்திரன் வந்தாலும் எங்களிடம் பூச்சுச் செல்லாது. மகராசா காகிதம் கிடைத்தவுடனே, எல்லாரும் மகராசா கொளம்புக்குப் போய் மோரிசுக்குப் போய்விட்டதாக நினைப்பார்கள். சந்தேகமே யிராது.

விஜயமா: ஆமாம்; பின்னையார் எதற்காகச் சிவகாமியைத் தூக்கிக் கொண்டு போனார்களென்று ஆலோசிக்க மாட்டார்களா ?

வீரமா: மகராசாவுக்குக் கோபம் வராதென்றால் சொல்லுகிறேன். கலியாணத்திலே நம்ம சிவகாமித் தாய்க்கு வீரசங்கிலித்தேவர் சுமைதியான நகைகள் போட்டிருப்பார். அப்படியே தூக்கிக்கொண்டு வந்து, வரும்பொழுது இன்னும் கையிலகப்பட்டதையும் எடுத்து வந்துவிட்டால், கொள்ளைப்பறியாக நினைப்பார்கள். வழியிலே ஒரு பக்கத்தில் ஒரு கோழியைக் கழுத்தைத் திருகி யிரத்தத்தைச் சிந்தவிட்டால் கொலையென்றும் நினைத்து விடுவார்கள். அப்புறம் நம்ம போலீசு செந்தலைப்புலி களெல்லாம் ஆடிப்பாடி யமரவிட்டு, மகராசா

மெதுவாய்க் கொளும்புக்கோ வடக்கேயோ இட்டம்-போலே போய் விடலாம். அல்லது நாய்க்குட்டிகள் பேரிலே தயவிருந்தால், வருஷம் நூறுறுலும் இந்தப் பருந்துக் கூட்டிலேயே சௌக்கியமாயிருக்கலாம். மகராசாவுக்கு ஒரு கவலை வேண்டாம்.

விஜயமா: என்ன வீரமாகாளி, முடியாத சமாசாரமெல்லாம் பிதற்றுகிறாய்? புலிமலையில் கொள்ளையிட முடியுமா? ஒரு மறக்குஞ்சிருந்தாலும் போதாதா? உன் சாமர்த்தியம் செல்லுகிற மட்டும்தான் செல்லுமா, அதற்குமேலும் செல்லுமா? இதெல்லாம் பிரயோசனமில்லை. ஏதாவது நடத்தக்கூடிய சங்கதியை ஆலோசிக்கவேண்டும்; எல்லாம் இரண்டு நாளில் முடியவும் வேண்டும். இல்லாவிட்டால் என் உயிர்—.

இதற்குள் உள்ளே தொங்கிக்கொண்டிருந்த ஒரு மணியசைந்து சப்தித்தது. உடனே வீரமாகாளி ஒரு பெரிய வடக்கயிற்றைத் தளர்த்தித் திட்டி வாயிலைத் திறந்தான். முன்பு சுமைகொண்டு வந்தவன் உள்ளே நுழைந்து, வீரமாகாளி காதில் ஏதோ மெதுவாய்ச் சொன்னான். உடனே வீரமாகாளி நம் கதாநாயகரிடம் வந்து, "மகராசா விசாரப்படவேண்டாம்; நான் யாரை யிப்பொழுது நினைத்தேனோ அவனே திடீரென்று வந்திருக்கிறான். அவன் தான் திருத்துறைசில்லா கள்ளர்களுக் கெல்லாம் தலைவன். இந்த மாதிரி சங்கதிகளுக்கு அவன் தான் சமர்த்தன். அவனுக்கு மகராசாவைத் தெரியாது; சந்நிதானமும் அவனை அறி

திருக்கமாட்டாது. உத்திரவு கொடுத்தால் வரச் சொல்லுகிறேன்" என்றான். நம் கதாநாயகர் சிறிது பொழுது ஆலோசித்து, பின்பு வருவதற்கு அநுமதி யளித்தார். வீரமாகாளி சமைக்காரனிடம் ஏதோ சொல்லியனுப்பி விட்டான்.

பின்பு வீரமாகாளியும் சுந்தரமும் சாப்பிடத் தொடங்கினார்கள். போஜனம் செய்தாய் விட்டபடி யால், நம் கதாநாயகர், தம் நிலைமையையும் மேற்செய்ய வேண்டியதையும் பற்றி ஆலோசித்துக்கொண்டு, மெது வாய்ப் பாடிக்கொண்டிருந்தார். அவர் பாடிய பாட்டு 'பைரன்' என்ற ஆங்கில கவி இயற்றியது; தம் காதலி விரும்பிய வண்ணம் அதன் கருத்துக்களை ஒருவாறு அவர் தமிழில் மொழிபெயர்த்த பாக்களைக் கீழே வரைவோம்:—

அரும்பெரும்புகழ் அவனியில் அடைபவர் அடைக,
தரும்பெரும்புகழ் இளமையாம் தனிப்பெரும் பருவம்;
துரும்பெனத்தகும் தும்பையாதிய இசைத்தொடையல்
விரும்புகண்ணியங் காதலின் தாரொடும் விளம்பின்.

வாகைமாலையும் மகுடமும் விருத்தரைவனைதல்
சாகையுற்றபின் தனுவின்மேற் சந்தனப்பூச்சாம்;
கூகைபோன்றுள மூப்பினுக் கொப்பனை குறியீர்;
ஓகையோ டிளம்விழைந்திலன் வெறும்புக ழொலியல்.

எந்தநாளினும் எவரினும் ஏற்றமா இயம்பும்
முந்துநாவுரை நசைந்துனை முயன்றிலன், புகழே!

என் தனுருயிர் நிலையனுள் என் பெருங்காதற்
கந்தநாண்மலர் தகவெனக் கருதலென் கருத்தே.
புகழ்க்குழைத்ததும்புகழ்புரிந்ததும்அவள்பொருட்டே;
திகழனுள் திருநோக்கமே சீர்த்தியின் நிலவும்;
மகிழ்வொடென்செயல்கேட்டவள் மான்விழிமதர்க்கின்
நிகழ்மனக்குறியுணர்ந்தமீத புகழெனநினைந்தேன்.

இவ்வாறு நம் கதாநாயகர் தம் காதலியை நினைத்துப் பாடிக்கொண்டிருக்கையில் மறுபடியும் மணியோசை கேளாநிற்கக் கற்கதவு திறக்கப்பட்டது. இரண்டு கண்களும் பலமாகத் துணியால் மறைத்துக் கட்டப்பட்ட ஒரு மனிதன் அவ்வாயில் வழியாக இருவரால் உள்ளே தள்ளப்பட்டான்; அவனைச் சுந்தரமும் வீரமாகாளியும் கைகொடுத்து வாங்கி நிறுத்தினர். பின்பு கதவு மூடப்பட்டது. வந்தவன் கண்கட்டை அவிழ்த்துக்கொண்டே வீரமாகாளி அவன் காதிற் சிலமொழிகள் கூறினன். கண்கள் திறக்கக்கப்பட்டபின்னரும் அவன் சிறிதுநேரம் கண்களைக் கசக்கிக்கொண்டு வெறித்துநோக்கிப், பின்பு நம் கதாநாயகருக்குத் தண்டனிட்டு, "மகராசாவை அடியேனுக்குத் தெரியாது; இப்பொழுது காளி அண்ணன் சொன்னபின்பு தான் தெரிந்தது" என்று சொல்லி, மரியாதையாகத் தூரத்தில் நின்றான்.

விஜயமா: சந்தோஷம்; நீ திருத்துரைக்கள்ளர் தலைவனென்று கேள்விப்பட்டேன். உன் பெயரென்ன?

வந்தவன்: அடியேன் பேர் கறுப்பணன் சேர்வை; 'பொட்டைக் கறுப்பன் என்று சொல்லுவார்கள்.

அவனுக்கு இடதுகண் குத்துண்டு பொட்டையா யிருந்தது.

விஜயமா: சரி; நீ யிப்பொழுது இங்கே வந்தகாரிய மென்ன?

இதைக்கேட்டவுன் கறுப்பன் வீரமாகாளி முகத்தை நோக்கினன்.

வீரமா: சும்மா சொல்லு; சந்நிதானத்திலே சொல்வதற்கென்ன? எதானாலும் சும்மா சொல்லு.

கறுப்பன்: புலிமலைப் புதுமகராசா அவர்கள் நாளை நின்று புதன்கிழமை புலிமலைக்கு வருகிறார்கள். சென்னபட்டணத்திலிருந்து செஞ்சாலி யிளைக்குவந்து வருகிறார்கள்; சுமந்த நகையும் பணமும் கொண்டு வருகிறார்கள். அதைப்பார்த்து விட்டுப்போகலாமென்று வந்தேன்.

விஜயமா: என்ன, வழிப்பறி செய்யவா?

கறுப்பன்: இல்லை; புலிமலையிலே அப்படித்துணிய மாட்டோம். ஆனல், மகராசாவுக்கோ பட்டங்கிடைக்கவில்லை; காளியண்ணனுக்கும் புதுமகராசாவுக்கும் ஆகாதென்று தெரியும்; ஊரிலும் ஒருவருக்கும் அவ்வளவு மனச்சுகமில்லையென்று கேள்வி. அதுதான் பார்த்துவிட்டுப் போகலாமென்று வந்தேன்.

வீரமா: தம்பி, எத்தனை தலைக்கட்டுக் கூடவந்திருக்கிறது?

கறுப்பன்: எல்லாம் ஐம்பதுக்குக் குறைவில்லை. புது மகராசா இராத்திரித்தான் வருகிறார். பத்துப் பதினைந்துபேர் கூடவருவார்கள். அண்ணன் தயவு மட்டும் இருந்தாற்போதும்: நானே மோட்டுப் பரம்புக் கிட்ட வண்டி வரும்பொழுது எல்லாவற்றையும் தட்டிக் கொண்டுவிட்டு விடுகிறேன். ஒன்றுமில்லாவிட்டாலும் எல்லாமாக நாற்பதினாயிரத்துக்குக் குறையாது.

பின்பு நம் கதாநாயகர் வாயை எதிர்பார்த்து மற்றவர்கள் ஆவலுடன் சும்மா இருந்தார்கள். அவரோ ஆலோசனையில் ஆழ்ந்திருந்தார். அவர் மநக்களத்தில் நிகழ்ந்த போராட்டத்தை யாவரே விவரிக்கவல்லார்? தம் வித்தியாப்பியாச காலத்திலும், பின்பும்,

> " கற்கக் கசடறக் கற்பவை; கற்றபின்
> நிற்க அதற்குத் தக."

என்ற குறளைத் தம் ஒழுக்கத்துக்கு மேற் கோளாக்கிக்கொள்ள நிச்சயித்ததின் முடிவும் இது தானா? உயர்தரக்கல்வி பயின்று நாகரிகத்தில் மிகச் சிறப்பு வாயாத தம் வளர்ப்புத் தந்தையாகிய முன் ஜமீன்தாரும், கொள்ளை விஷயங்களை அறிந்திருந்தும் சும்மாவிருந்த தன்றி, தாமும் சம்பந்தப்பட்டுத் தூண் டிய தில்லையே. புதிதாகத் தாம் ஆங்கிலமும் பயின்று காவியங்களும் தத்துவசாஸ்திரமும் படித்ததன் விசேஷ பலனோ இது? கொள்ளை நடக்கப்போவதைத் தெரிந்திருந்தும் இராச்சிய அதிகாரிகளுக்கு அறிவியா திருத்தல் பெருங்குற்றமே. தம்மால் தடுக்கக்கூடிய

கொள்ளையைத் தாமே தூண்டுவதெப்படி? அதில் கொலை நடந்தாலும், அதனாற் சிலர் சிறைச்சாலை யுற்றாலும், அந்தப் பாவங்கள் தம்மையே சேருமன்றோ? ஒருவேளை தாமும் தண்டனைக்கு உள்ளாக வேண்டிவரும் அன்றோ? நன்று! நன்று! கொள்ளை, கொலைகளை விசாரித்து நியாய தண்டனை விதித்தற்குரிய உத்தியோகத்தைத் 'தந்தி' யனுப்பி மறுத்ததும், தாமே அக்கொடுங் குற்றங்களைச் செய்தற் பொருட்டேயோ? அவ்விதமான கெட்ட எண்ணங்கள், சேரத்தகாதாரைச் சேர்ந்ததனாலன்றோ உண்டாயின.

" நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்கினத்தியல்ப தாகும் அறிவு."

என்ற நாயனார் வாக்கின் உண்மை விளங்கி விட்டது. இவ்வளவு துர்ப்புத்தியும் எதற்காக? அந்தோ! நம் கதாநாயகர் தம் ஆலோசனையைக் குறளொடு நிறுத்தி உடனே வெளிப்போந்தாரில்லையே; கேடுவரும் பின்னே மதி கெட்டுவரும் முன்னே என்ற பழமொழி துலங்கலாயிற்றே! இவ்வளவும் எதன் பொருட்டு என்ற வினா மனத்தெழுந்த நிமிஷமே, எழுந்தான் மாரனும் ஒரு கைபார்க்கிறேனென்று. போருக்குத் தூதனுப்புவான் போல, சிவகாமியின் அதிசுந்தர ரூபத்தை அவர் மனக் கண்முன் தோற்றுவித்தான். "அத்தான், நான் உங்கள் அடைக்கலம், உங்கள் அடைக்கலம்; நீங்களே கதி" என்ற அவள் அபயக்கூப்பாடு அவர்செவிகளில் முழங்குவது போலிருந்தமை, அவன்

முா சதிர்ச்சியை ஒத்தது; அன்பெனும் விட மூட்டிய பாணங்களை அவன் எய்யவே, அவர் மதிமயங்கிச் சோர் விற்ருர். சிவகாமியை இழத்தல் என்ற எண்ணத்தை ஒரு கணமும் அவரால் தாங்க முடியவில்லை; மூச் சிறுகுவதுபோல் பலகால் பெருமூச் செறிந்தார். தாமிருக்குமிடத்தையும் தம்முடன் இருப்பவரையும் முற்றும் மறந்து, காதல் வசத்தினராய்ச் சிறிது பொழுது விழிகுருடர்போலிருந்தார். சிவகாமியைத் துறத்தல் எவ்விதத்தானும் பொறுப்பரிதாகவும், சத்தியம், மானம், நல்லொழுக்கம், நற்பெயர் முதலி யன அக்காதலிழப்புடன் ஒப்பிட்டுப் பார்க்கின் மிக அற்பமாகவும் தோன்றின. உடனே எவ்விதத்தானும் தம் காதலை நிறைவேற்றிக்கொள்வதே கடனென்றும், அதில் என்ன நேரினும், தம்முயிரையே அவமானமாக இழக்கவரினும், அவை கவனிக்கத்தக்கன அன்றென் றும் துணிந்தார். அந்தோ! இங்ஙனமே இவர் ஊழ் நின்றதுபோலும். உடனே தம் மநத்துணிவை நிறை வேற்றற்கேற்ற முயற்சியிற் புகுந்தார்.

விஜயமா: என்ன, கறுப்பா! வீரசங்கிலித்தேவர் நாளை நின்று புதன்கிழமை புலிமலைக்கு வருவார் என் ருயே: கல்யாண மெப்பொழுதாம்?

கறுப்பன்: வெள்ளிக்கிழமையென்று சொல்லிக் கொள்கிருர்கள். எல்லாம் நான் விட்டபின் அன்ருே பார்க்கவேண்டும்.

விஜயமா: இம்: நீ என்ன சொல்லுகிருய், காளி?

வீரமா: நாங்கள் போனால் தெரிந்துவிடுமென்று பயந்தீர்கள்; அதுவும் நிசந்தான். இப்பொழுது அந்தப் பயமும் இல்லை. தம்பிகூட வந்திருக்கிற ஆள்களெல்லாம் திருத்துறை, திருச்சியூர், தஞ்சைப்பள்ளி அந்தப் பக்கத்து ஆள்கள். ஒரு குஞ்சுகூட இனந்தெரியாது.

விஜயமா, ஆமாம்; ஆனால் கறுப்பன் உத்தேசத்துக்கும் நம்முடைய காரியத்துக்கும் பொருத்தமில்லையே?

வீரமா: அதெல்லாம் தம்பி சொன்னபடி செய்வான். பணமும் நகையும் எங்கே போய்விடுகிறது? புலி மலைக் குத்தானேவரும். வழியிலே ஆனால் கொஞ்சம் சுலபம்; இங்கே கொஞ்சம் கட்டம்; முடியாதது ஒன்றுமில்லை.

சிவகாமியைப்பற்றிய விஷயமும் உத்தேசமும் கறுப்பனுக்குக் கூறப்பட்டன. அவன் சிறிது யோசித்துப், பின்பு:—“ அண்ணே! அது முடியுமா? ஊரிலே நூறு தலைக்கட்டிருக்குமே” என்று சொன்னான். பின்பு எல்லாருமாகக்கூடி வெகுநேரம் ஆலோசித்து எவ்வாறு செய்வதென்பதைப்பற்றி விவரமாய்த் தீர்மானஞ் செய்து முடித்தார்கள்.

## ஆருவது அதிகாரம்.



வெளுத்த தெல்லாம் பாலா, கறுத்ததெல்லாம் நீரா?



புலிமலை ஜமீன் புதுமஹாராஜா விஜயபாண்டிய வீரசங்கிலித்தேவர் புதன்கிழமை யன்று காலை ஆறுமணிக்கு 'மேனுப்' பல்லக்கில் தம்மரமனை வாயிலில் வந்திறங்கினர். அவர் குடிகளிற் பலர், அவரையெதிர்கொண்டு மேள தாளங்களுடன் வரவேற்றனர்; அவர்களுக்காக, பேர. சுப்பையர், மஹாராஜா அவர்களுக்கு ஒருபசாரப் பத்திரமெழுதிவாசித்தார். சருக்கரைப் பந்தலில் தேன் மழை பொழிந்தாற்போலச் சுப்பையர் கவியும் கத்தியமுமாக வாசாமகோசரமாய்ப் பேசிமுடிந்த வுடன், மஹாராஜா அவர்கள் மறுமொழியொன்றும் அளியாது," அடே வெள்ளையா! படுக்கையைப்போடு; இராத்திரி உறக்கமே இல்லை" என்று சொல்லிக் கொண்டு அரமனைக்குள் நுழைய, மற்றவர்களெல்லாம் வெட்கிப் பலவாறு பேசிக்கொண்டு தத்தம் வீடு போய்ச் சேர்ந்தனர். சுப்பையர் இராப்பகல் தூக்க மின்றிப்பாடுபட்டு அலங்கரித்த மணப் பந்தரைப் பற்றிக்கூட, ஜமீன்தார் ஒருவார்த்தையுஞ் சொல்ல வில்லை. விஜயமார்த்தாண்டத் தேவரெனின் இவ்வாறு நடந்திருப்பாரா? அதிமதுரமாகவும் சாதுரியமாக

வும் பேசி, எல்லார் மனங்களையும் அடிமைகொண்டிருப்பாரே! குருட்டுத்தெய்வம் இந்த நிரக்ஷரகுக்ஷிக்கு ஜமீனைக் கொடுத்ததே! இவ்வாறு எண்ணிக்கொண்டு சுப்பையர் மற்றவர்களை வரவு விசாரிக்கச் சென்றார்.

ஜமீன்தார் மாலை இரண்டுமணிக்கு நித்திரை தெளிந்தெழுந்து, ஸ்நாநம்செய்து, போஜனத்தை முடித்துக்கொண்டு, சபாமண்டபமாக முன்ஜமீன்தார்களால் பாவிக்கப்பட்டுவந்த அறைக்குச் சென்றார். சப்பாணித் தேவரும், வேலாயுதத்தேவரும், சுப்பையரும் அங்கிருந்தார்கள். மறுபடியும் பிற்கூறிய இருவரும் செய்த உபசாரத்தையேற்று, அவர்களுடன் பேசத்தொடங்கினார்.

சுப்பையா: மஹாராஜா அவர்களுக்கு இந்த நாலு கடிதங்களும் நேற்று வந்தன. இது விஜயமார்த்தாண்டத்தேவர் கையெழுத்து; பட்டணம் போய்த் திரும்பி வந்திருக்கிறது.

ஜமீன்: என்ன துடுக்கு ஐயா அவனுக்கு! இனியென் கையிலே அகப்படட்டும் சொல்லுகிறேன், அவன் என்ன எழுதியிருக்கிறான், திறந்து வாசியும்.

சுப்பையர் கடிதத்தைத் திறந்து பின்வருமாறு வாசித்தார்:—

உ

முருகன் துணை.

தூத்துக்குடி,
22-1-18....

மஹாராஜராஜ ஸ்ரீ வீரசங்கிலித்தேவரவர்களுக்கு விஜயமார்த்தாண்டசுதேவர் தெண்டனிட்டு விண்ணப்பம். க்ஷேமம். க்ஷேமம்.

என்னிடமிருந்து கடிதத்தை நீங்கள் ஒருபொழுதும் எதிர்பார்த்திருக்கமாட்டீர்கள். ஆனால் இது வரையும் நாமிருவரும் எதிரிகளாயிருந்திருப்பினும், காரியம் ஒருவிதமாக முடிந்தபின்பு, விரோதம் பாராட்ட நியாயமில்லை யென்றெண்ணுகிறேன். ஜமீனை யிழந்ததுமன்றி, என் காதலியையும் இழக்க நேர்ந்ததே என் மனத்தை வருத்துகின்றது. வலிய்வலியை யாரால் கடக்கமுடியும்? நன்றுங்கால நல்லவாக்காண்பவர் தீதாங்கால் அல்லற்படுதல் முறையன்று. நீங்களும் அவ்வாறே நினைந்து, என்மேல் இனிப்பகைமை பாராட்டமாட்டீர்களென்று நம்புகிறேன். இன்று மாலை கப்பலேறி நான் கொழும்பு மார்க்கமாய் மோரீசுக்குப் போகிறேன். இனி இங்கே திரும்பி வர உத்தேசமில்லை. பலவாண்டுகள் கழிந்து ஒருவேளை வந்தால், தங்களைப் பார்ப்பேன். புலிமலையில் எல்லோரையும் நான் விசாரித்ததாகச் சொல்லவேண்டுகிறேன்.

முருகன் துணை.

விஜயமார்த்தாண்டம்.

சுப்பையர்: இரண்டு மூன்று நாள்களுக்குமுன் வேலாயுதத்தேவர் அவர்களுக்கும் இம்மாதிரியாக ஒரு கடிதம் வந்தது.

ஜமீன்: சரி; சனியன் ஒழிந்தது. சிவகாமிக்கு இது தெரியுமா?

வேலாயு: எனக்குவந்த கடிதத்தைப் பார்த்தாள். அது முதல் இன்னும் அழுது கொண்டேயிருக்கிறாள். அந்த 'மூதி'க்கு அவர் பேரிலே கொஞ்சம் கிறுக்கு.

ஜமீன்: இனிமேல் அழுதென்ன செய்ய, அடித்து என்ன செய்ய? இதையும் கொண்டுபோய்க் காட்டுங்கள், நிசந்தானென்று நிச்சயமாகட்டும். ஐயரே! வெள்ளிக்கிழமையா முகூர்த்தம் பார்த்திருக்கிறது?

சுப்பை: ஆமாம்; உதயம் ஏழுமணிக்குமேல் கும்ப லக்நத்திலே நடக்கவேண்டும்.

ஜமீன்:சரி; அம்மான்! உங்கள் மகளைச் சமாதானப்படுத்துங்கள். நான் கொண்டுவந்திருக்கிற நகைகளைத் தருகிறேன்; இப்பொழுதே கொண்டுபோடுங்கள்; இன்னும் சில நகைகள் பின்னால்வரும்.

சுப்பையர்: எல்லாம் ஸ்திரீகளுக்கெல்லாம், அது தான்பெரிது. தவிரவும் மநஸில் இஷ்டமிருந்தாலுங் கூட வெளியே காட்டமாட்டார்கள். சிவகாமியம்மைக்கு யதார்த்தத்தில் தங்கள் மேலேயே இப்பொழுது இஷ்டமென்றெண்ணுகிறேன். ஆனால் அதை வெளியிட்டுவிட்டால் சுலபமாக எண்ணிவிடுவீர்களென்றோ, அல்லது தங்கள் பிரியத்தைச் சோதிக்கவோ, இந்த நடிப்பு. ஒரு ஸ்திரீயின் மநத்தை யாரால் அறியக் கூடும்?

ஜமீன்: எதற்கும் நீங்கள் இந்த நகைகளைக் கொண்டு போடுங்கள்; இந்தக் கடிதத்தையுங் காட்டுங் கள். எல்லாம் வரவரச் சரியாகிவிடும்.

அப்படியே வேலாயுதத்தேவர் கடிதத்தையும், சுமார் பதினாயிர ரூபா பெறுமான நகைகளையும் வாங் கிக்கொண்டு தம் வீடு சென்றார். பின்பு;

ஜமீன்: என்ன, ஓய் ஐயரே! முத்துக்குடியிலி ருந்து இரண்டு சேவல் வரவழைக்கிறேனென்று எழுதியிருந்தீரே; வந்திட்டுதா?

சுப்பை: இல்லை; ஆள் அனுப்பியிருக்கிறேன். சீக் கிரம் வந்துவிடும்.

இதற்குள், வண்ணான் மூட்டையிலும் பெரிய தான ஒரு பலவர்ணத் தலைப்பாகையும், வெள்ளிச் சங்கிலியில் கோக்கப்பட்ட பொத்தான்கள் மாட்டிய பச்சைப்பட்டுடுப்பும், பட்டுக்கரை வேஷ்டியும், இடுப் பைச்சுற்றி ஒரு சரிகை வேஷ்டியும் தரித்துக் கொண்டு, நீண்ட கறுத்த மீசையும் சிவந்த கண்களு முடைய ஒருவன் வந்து, வெகு சாதுரியமாக வலது கையால் தரையைத் தொட்டு நெற்றியில் வைத்துச் சலாம்செய்து நின்றான்.

ஜமீன்: நீ யார்?

வந்தவன்: அதிவிஜய வீரப்ரதாப பூபால மாரா ஜாதி ராஜமன்னா! ஆடவர்கள் ஏறே! அணங்கனையர்

பேறே! அடுத்தவர்கள் கருணையாறே!--விதிவசம் ஒழி த்தரிய நிதியையும் எடுக்கவல வீரசங்கிலிவீரனே! விண்ணவர்கள் மண்ணவர்கள் எங்கும்புகழ்கின்ற வேல வனை நிகர்தீரனே!--மதிவலிய சீலா! மனங்கரைய மாதர் புகழ்லீலாவிநோத ஜாலா! மன்மதா! வாரிச மலர்ப்பதா! அன்பதா ஆண்டருள்க, என் பிதாவே!—இதுவரையும் சிறையேன்—,

ஜமீன்: ஏ! போதும், போதும், கடையைக், கட்டு, கடையைக்கட்டு; இதென்ன! கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டாற்போல் இருக்கிறதே, நீயார் என்று கேட்டால் சும்மா சளசளவென அடித்துக்கொண்டு போகிறாயே. நேரே சொல்: நீயார் ?

வந்தவன்: மஹாப்ரபோ! அடியேனை, பூலோக, புவ லோக, சுவர்லோக, மகாலோக, சனலோக, தபோலோக, சத்தியலோகங்களாகிய ஏழு மேல்லோகங்களிலும், அதல, விதல, சுதல, தராதல, இரசாதல, மகாதல பாதாளங்களாகிய ஏழு கீழ்லோகங்களிலும் இசை பெற்றிலங்கும் "தேவேந்திர சபா"வின் சூத்திரதார ராகிய நிமிஷகவி கெட்டிலிங்கக் கவிராயரென்று கூறுவர்.

ஜமீன்: நாடகக்காரனா?

கெட்டி: ஆம், ப்ரபோ.

ஜமீன்: அப்படிச் சொல்லேன் தமிழிலே. அதற் கென்னமோ புளுபுளெனப் பொரிகிறாயே. எங்கே வந்தாய்?

நேட்டி:ப்ரபோ! தங்கள் விவாக மகோத்ஸவத்தைக் கேள்வியுற்று, இங்கே எல்லோருமாக வந்தோம். தங்களைப்போன்ற பொன்மேகங்களின் கருணையாலன்றோ ஏழைப்புல்லர்கள் தலையெடுத்து வாழ்வது?

ஜமீன்: அட, அட, தமிழிலே நேரே பேசேன். பெண் வேஷத்துக்கு ஆள் இருக்கிறதா?

நேட்டி:ரம்பை, ஊர்வசி, மேநகை, திலோத்தமையனையாரும் எதிரில்லாத அழகு பொருந்தும் வேஷம் போட்டு, ஆடுதற்கு அவதார புருஷன்போல் வந்திருக்கும் சங்கீத சாகித்ய நடநவித்வான் நாராயணசாமி இருக்கிறான்.

ஜமீன்: சரி; கலியாணத்தன்று, முதல் நாடகம் பார்க்கலாம்.

நேட்டி:ப்ரபோ! அடியேன் ஒரு விண்ணப்பம். 'தேவேந்திரசபா' எந்த ஊருக்குச்சென்றாலும், முதற்கண் தேவாலய சந்நிதியில் தலையரங்கேற்றிய பின்பு தான் ஊரில் ஆடுவது வழக்கம். அதுபோலவே, நாளையிரவு, உத்திரவுகொடுத்தால், முருகன் குன்றில் குமரக்கடவுள் சந்நிதானத்தில் அரங்கேறி, மறுநாள் தங்கள் திருமணப் பந்தரில் ஆடுகின்றோம்.

சுப்பையர்:மஹாராஜா! அதுவும் நல்லதுதான்; நாளையிரவு பார்த்தால் யோக்கியதை இவ்வளவென்று வெளியாகிவிடும். பின்பு கலியாணப்பந்தரில் ஆடுவதற்கு அநுமதிகொடுக்கலாம்.

ஜமீன்: சரிதான்; ஐயர் சொல்கிறதும் ஒரு யுக்தி தான். என்ன ஓய், புலவரே! உமக்குச் சம்மதந்தானா?

செட்டி:மஹாராஜா ஆஞ்ஞைப்படியே சித்தமா யிருக்கிறோம், ப்ரபோ.

ஜமீன்: சரி? போய்வாரும்.

வண்டியிற் கூறியவாக்கை நம்பிச் சிவகாமி சிறிது மநந்தேறியிருந்தாள். ஆனால் தன் தகப்பனருக்குத் தூத்துக்குடியிலிருந்து வந்த கடிதத்தைப் பார்த்தது முதல் அவள் மநம் இடிந்துபோயிற்று. தன்னைக் கடத்திச் செல்வது அசாத்தியமானதென்றஞ்சித் தன் காதலர் கைவிட்டுச் சென்றதாகவே எண்ணினாள். இனி வேறு கதி யேது? ஒன்று விதிவசத்துக்குட் பட்டு வீரசங்கிலித் தேவரை மணவாளராக ஏற்க வேண்டும்; அல்லது அதற்குமுன உயிரை மாய்த்துக் கொள்ளவேண்டும். முன்னதினும் பின்னதே உத்த மம். "ஐயோ! என் அருமை நாயகருக்கும் எனக்கும் இக்கதி நேர்ந்ததே! அவமானம் பொறுக்கமுடியாது. அவர் தீவாந்தரஞ் செல்லவும், யான் தற்கொலை செய்துகொள்ளவும் ஆயிறறே! முற்பிறப்பில் எவ்விதக் கொடும்பாவத்தைச் செய்தோமோ, இப்பொழுது இவ்விதி வருதற்கு! ஈசா! தீனதயாளு! பெண்ணென்றால் பேயுமிரங்குமே; நீ கடைக்கணித்தால் தகாதோ! 'பெற்றமனம் பித்து; பிள்ளைமநம் கல்' என்று சொல் வதுண்டே, என்மட்டுமோ பெற்றமனம் கல்லாயிருக் கின்றது? என்னை யிவ்வாறு விற்றேனும் பொருள்தேடி

என் கொடிய தாய்தந்தையர் இனியென்ன சுகத்தை அநுபவிப்பார்? பிராணேசா! நான் இனி உயிர்தரிக்கேன்; ஆனால் இன்னும் ஒருமுறையேனும் உங்கள் திவ்யமங்கள சொரூபத்தைக் கண்குளிரக்கண்டு, மந்தகாசத்தை அநுபவிக்க என் மநம் தழைக்கின்றதே. என் பொருட்டன்றோ நீங்கள் இப்பொழுது பரதேசஞ்சென்று துயருழப்பது. பாவி யொருத்தி நானில்லாவிடின் நீங்கள் உயர்ந்த உத்தியோகத்திலமர்ந்து, வேறு எவளாயினும் ஒரு பாக்கியவதியோடு சுகமாய் வாழ்வீர்களே; அந்தோ! தங்களையும் கெடுத்து யானும் கெடுதற்கோ இந்த ஜன்மம் எடுத்தேன்! அந்த மஹாபாவிக்கு என்மேல் ஏன் மோகமுண்டாயிற்று. அவன் என்னை நன்றாகப் பார்த்திருப்பதுகூடவில்லையே. என் செய்வேன்! என் செய்வேன்! தெய்வமே!" என்று நினைந்து நினைந்துருகிப், பெருகிய கண்ணும் சிந்திய மூக்குமாக அவள் சயனித்திருக்கையில், அவள் தகப்பனார் திடீரென வீட்டுள் நுழைந்து, "குட்டி! சிவகாமி! உன்னைத்தானே கூப்பிடுகிறேன்; சும்மா அழுகிறாயே: இதோ உன் மாப்பிள்ளைக்குக் கடிதம் வந்திருக்கிறது பார்" என்று சொன்னார். உடனே வெகு ஆவலுடன் சிவகாமி யெழுந்து, அவர் நீட்டிய கடிதத்தை வாங்கிப்படித்தாள். "அவர்தான் உன்னை விட்டுவிட்டுப் போய்விட்டாரே; இதற்கு முன் மோரீசிலிருப்பார். நீ யிங்கே சும்மா அழுதுக்கொண்டு கிடக்கிறாய்" என்றார் அவள் தகப்பனார். ஆனால் அந்தப் பேச்சு அவள் காதிலேறவில்லை. கடிதத்தை ஒரு முறைபோல் மும்முறை படித்தாள்.

பின்பு அவள் மநத்தில் ஓர் அநுமாநமுண்டாயிற்று. உண்மையாகவே தன்னுயகர் பிறதேசம் போவதாயிருப்பின், வேலாயுதத்தேவருக்கு ஒருகால் கடிதமெழுதினும், வீரசங்கிலித்தேவருக்கு எழுதுவாரா? அவ்விருவர் கண்ணையும் மறைத்தற்பொருட்டுச் செய்த தந்திரமே யிது. அன்றேல் தனக்கொரு கடிதம் கூடக் கடைசியாக எழுதாது போய்விடுவாரா? தன் மடமையினுலேயே அவரையிதுகாறும் பழிதூற்ற நேர்ந்தது. கல்யாண திநத்துக்குமுன் எவ்விதமாவது அவர் தன்னை விடுவித்துக் காப்பாற்றுவார். ஆகவே அதற்கு ஆயத்தமாயிருத்தற் பொருட்டு, தான் தன் துக்கக் குறிகளை நீக்கி, வேறுவிதியன்றி வீரசங்கிலித்தேவரை மணம்புரிய உடம்பட்டவள் போல் நடித்தலே தகுதி. அங்ஙனஞ் செய்தால் தான், ஒருவரும் சந்தேகியார்கள்; தானும் சாதாரணமாய் உலாவித்திரியலாம். அப்படி யொன்றும் நிகழாவிட்டால் முன் துணிந்தபடி உயிரைத் துறந்துவிடுகிறது. இவ்விதம் நிச்சயித்துக்கொண்டு, "தலையிலெழுத்தை யார் தடுக்கவல்லவர்' என்று சொல்லி, கடிதத்தைத்தன் தந்தையிடம் கொடுத்தாள். இதைக் கேட்டவுடன் அவருக்கு அளப்பரிய சந்தோஷம் உண்டாய்விட்டது. அவள் தாய் தந்தையர் அவளை மிகவும் மெச்சிக்கொண்டாடி, ஜமீன்தார் கொடுத்த நகைகளையெல்லாம் அவளுக்கு அணிந்தனர். பின்பு வேலாயுதத்தேவர் தம்மகள் உடம்பட்ட விஷயத்தை ஜமீன்தாருக்குத் தெரிவித்தற்பொருட்டு வேகமாய் அரமனைக்குச் சென்றார். சற்றுநேரத்துக்குப்பின்

வீதியிற் பேரிகையொலி கேட்டது. சிவகாமி என்ன வென்று பார்க்கச் சென்றாள். பேரிகை முழக்கம் நின்ற வுடன், ஒருவன் பின்வருமாறு உரத்துக் கூறினான்:—

"இதனால் சகலமான ஜனங்களுக்கும் அறிவிப்ப தென்னவென்றால், நாளை வியாழக்கிழமை யிரவு எட்டு மணி முதல் விடியற்காலம் மூன்று மணி வரைக்கும், முருகன்குன்றில் திருமுருகன் சந்நிதியில், 'தேவேந்திர சபை'யாரால் 'வள்ளியம்மை கலியாணம்' என்ற நாடகம் ஆடப்படும். வேஷங்கள், திரைகள், சங்கீதம், எல்லாம் வெகு அற்புதமாயிருக்கும். காசுபணம் கிடையாது. யாவரும் தாராளமாய் வந்து பார்க்கலாம். மஹாராஜராஜஸ்ரீ மகாகனம்பொருந்திய விஜயபாண்டிய வீரசங்கிலி மஹாராஜா அவர்கள் அரமனைப் பரிவாரத்துடன் விஜயஞ் செய்வார்கள். எல்லாரும் வாருங்கள்! பாருங்கள்! களிகூருங்கள்!" பேரிகை முழக்கம். இதுவும் தன் அநுமானத்துக்கு அநுசரணையா யிருப்பதாகச் சிவகாமி நினைத்தாள். ஏனெனின், இதுவரையும் புலிமலைக்கு நாடகக்காரர் வந்ததேயில்லை; அங்ஙனமிருக்க இப்பொழுது திடீரென வந்ததுடன், கலியாணத்துக்கு முந்திய நாளிரவு ஊருக்கு வெளியேயுள்ள கோவிலில் நாடகம் போடுவது என்ன காரணத்தினு லிருக்கக்கூடும்? ஊரார் எல்லோரும் போவார்கள். அப்பொழுது ஒருகால் தன் நாயகர் வந்து தன்னை யழைத்துச் செல்வாரோ? ஒருவேளை முன்பு போல் முடிந்துவிடுமோ? ஒருசமயம் கலகம் விளைந்து தன்னி

மித்தம் தன்னுதருக்குச்சேதம் விளையுமோ? ஐயோ! என்ன பதைபதைப்பு!

சாயங்காலம் ஆண்டியொருவன் பாட்டுப்பாடிக் கொண்டு பிச்சைக்குவந்தான். அவன் குரல் நன்றாயிருந்ததால், தெருவிற் சென்ற தன் சிறுதம்பியையெடுக்கப் போன சிவகாமி, வீட்டுவாயிலில் நின்றுகொண்டு அவன் பாட்டுக்குச்செவிகொடுத்தாள். அவள் நின்று உற்றுக் கேட்கவே, ஆண்டி, தான் பாடிக்கொண்டிருந்த பாட்டைத் திடீரெனமாற்றி, விஜயமார்த்தாண்டதேவருக்கு மிகப் பிரியமானதும், அவர் அடிக்கடி பாடுவதும், அவர் அவளுக்குச் சொல்லிக்கொடுத்திருந்தது மான ஒரு தேவாரத்தைப் பாடத்தொடங்கினன். ஆண்டிகள் தேவாரம் பாடும் வழக்கமில்லை; அங்ஙனமிருக்க, அவ்வாண்டி, "வாழ்வாவது மாயம் இது மண்ணுவது திண்ணம்," என்று பாடிக்கொண்டு வேலாயுதத் தேவர் வீட்டுவாயிலுக்கு வந்தான். அதுமுடிந்தவுடன், "இன்னும் ஏதாவது தேவாரம்பாடு" என்றாள் சிவகாமி. "அம்மணீ! தெரியாது அம்மணீ! நேற்று ஒரு மஹாராஜன் இது ஒன்றையும் சொல்லித்தந்தான், அம்மணீ! வேறு தெரியாது அம்மணீ!" என்றான் ஆண்டி. "ஆனால் வேறெதாவது பாட்டுத்தெரியுமானால் பாடு" என்றாள் சிவகாமி. ஆண்டி அக்கம்பக்கம் பார்த்து, சில குழந்தைகளைத்தவிர வேறொருவரும் இல்லாமையையறிந்து கொண்டு, பின்வரும் பாட்டைப்பாடினன்:—

சங்கரசங்கர சம்பு, சிவ, சங்கரசங்கரசங்கர சம்பு,
சங்கரசங்கர சம்பு.

(1) வெள்ளிக்கு முந்தியவேளை—துயிற்
பள்ளிக்கு நல்ல படுக்கை வேளை
கூத்துக்குப் போவான் குரங்கன்—அதைப்
பார்த்தற்குப்போவார் பலபெயர் தாமும்—(சங்)

(2) விதியை விலக்க வசமோ—பெண்ணே
விதியை விலக்கும் மதியுண்டு கேளாய்;
மானைத்தனிவிடலாமோ—விடின்
கானக்கலையும் கடத்திச் செல்லாதோ-(சங்கர)

(3) வாசற்படியதன்மேலே—நன்று
பேசற்கரியன பேசிடும் ஓலை
காலையிற்கண்டிடலாமே—அந்த
ஓலையிற்கண்டபடி செயலாமே— (சங்கர)

இதற்குள் சிவகாமியின் தாயும் வீட்டிலிருந்து வெளியே வந்தாள். அவளைக்கண்டவுடன்,

(4) 'தருவைக்கு மேற்கே சங்காணி—வெள்ளம்
தானேவரும்போது விடுவானே தோணி;
இரும்பாலடித்ததோர் ஆணி—எருமை
என்னதைத்தின்னாலும் போடுமே சாணி' (சங்)

"அம்மணி! பிச்சைபோடு தாயே" என்றான். சிவகாமி யுட்சென்று சிறிதுசோளம் எடுத்து வந்துபோட, ஆண்டி யதை வாங்கிக்கொண்டு போய்விட்டான்.

## ஏழாவது அதிகாரம்.

### சாகத்துணிந்தால் சமுத்திரம் முழங்கால்.



மறுநாட் காலையிலும் மாலையிலும் கலியாணத் துக்காகப் பலர் புலிமலை வந்துசேர்ந் தனர். ஆனால் வீரசங்கிலித்தேவரைத் தெரியாமை யினாலும், போதுமான அவகாசமில்லாமையினாலும், ஏனைய ஜமீன்தார்கள் பிரபுக்கள் ஒருவரும் வரவில்லை. வேதியரையும், வரும்படியைக் கருதிவந்த சில 'சர்க் கார்' உத்தியோகஸ்தரையும், பட்டணத்திலிருந்து வந்த சில சங்கீத வித்வான்கள் நடன மாதர்களையும் தவிர்த்து, வந்தவர்கள் எல்லாரும் சாமான்கள் கொண்டு வந்த வேலைக்காரர்களே. அன்றிரவு திருமுருகனுக்கு அபிஷேகாதி விமரிசைகள் சிறப்பாக நடத்தப்பட்டன. கோவிலிலேயே பலவிதச் சித்திரான்ன நைவேத்தியங்கள் செய்யப்பட்டு, எல்லோருக்கும் அங்கேயே போஜனம் நடந்தது. அரமனையிற் சிலகாவற்காரரைத்தவிர, வேறொருவருமில்லை. ஊரிலோ, எல்லோரும் வீடு வீடாகக் கதவைப் பூட்டிக்கொண்டு கோவிலுக்குப் போய்விட்டார்கள். நாடகத்தின் நிமித்தம் இரவு ஒன்பது மணிக்குள் மற்ற வேலைகளெல்லாம் முடிந்து விட்டன. சிவகாமி சர்வாலங்கிருத பூஷணியாக ஆல

யத்துக்குச் சென்று சுவாமி தரிசனம்செய்து அங் கேயே சுவாமி பிரசாதத்தை ஆகாரஞ்செய்தாள். மஹாராஜாவின் பட்ட மகிஷிக்கு நடந்ததினும் அதிக மரியாதை அவளுக்குக் காட்டப்பட்டது. ஒன்பது மணிக்கு நாடகம் ஆரம்பித்தவுடன், பொறுக்க முடி யாத தலைநோவால் சிவகாமி வருத்தமுற்றுளாக, அவ ளும் அவள் தாயும் வெளியேவந்து சிறிது நற்காற்றுக் கொண்டனர். அதற்கும் தலைநோவு தீராமையால், சிவகாமி, வீட்டுக்குச்சென்று படுத்துறங்க விரும்புவ தாகச் சொன்னாள். இது மஹாராஜாவுக்குத் தெரி யப்படுத்தப்பட்டவுடன், கூத்தில் பெண்வேஷத் தால் மயக்குற்றிருந்த அவர், அப்படியே அநு மதி கொடுத்து நாலு காவற்காரரைத் துணை யனுப்பினர். சிவகாமியும் அவள் தாயும் காவற் காரருமாகச சிறிது நேரத்தில் வீடுவந்து சேர்ந்த னர். வீட்டில் ஒருவருமே இல்லாமையால் சிவகாமி யின் தாய், காவற்காரரை வாசலில் படுத்துக் கொள் ளும்படி சொன்னாள். நாடகம் பார்க்க மிக்க விருப்ப முடையராயினும், 'மகராசா'வின் மாமி சொல்லை மறுக்க வஞ்சி, அவர்களில் இருவர் அப்படியே படுத் துக் கொண்டனர்; மற்றிருவர் வாசற் கதவு மூடிய வுடன் கோயிலுக்குப் போய் விட்டனர். நடுநிசி வேளையில் வாசலிற் படுத்திருந்த காவற்காரர் குழறி யோலமிட்டனர். சிவகாமி, தன் தாய் எழுமுன் எழு ந்து, விரைவாய்ச் சென்று வாசற் கதவைத் திறந்தாள். வாசலில் ஒவ்வொரு காவற்காரன் மேலும் இருவழி

ருந்து அமர்த்திக் கொண்டும், வாயில் துணியைத் திணிக்க முயன்று கொண்டு மிருந்தார்கள். ஒருவன் ஒரு சிறு பந்தத்தைப் பிடித்து நின்றான்; கம்பும் கையுமாகப் பத்துப் பேர்வரை நின்றார்கள். சிவகாமியைக் கண்டவுடன், இருவர் திடீரென வந்து அவளைத் தூக்கினார்கள். "ஐயோ! கொள்ளை! என்னை விடடா, பாவி! எல்லாவற்றையும் தந்து விடுகிறேன்; என்னை விடடா பாவி" என்று சிவகாமி அரற்றினாள். இதற்குள் அவளை எடுத்தவர்கள் விரைவாய் ஊரைவிட்டு வெளியே சென்றனர். நின்றவரில் நாலு பெயர்களும் அவருடன் சென்றனர். தன் மகள் ஓலமிட்டதால் விழிப்புற்ற மருதி, தானும் ஓலமிட்டுக் கொண்டு வெளியேவந்து பார்க்க, அவளை யிருவர்பிடித்துக் கட்டி வாயில் துணி யடைத்து விட்டார்கள். பின்பு பந்தக்காரனும் சிலரும் வீட்டுள் நுழைந்து வெள்ளித் தாம்பாளம், இருநூறு பவுன் முடிப்பு முதலிய திரவியப் பொருள்கள் கிடைத்தன வெல்லாவற்றையும் கைப்பற்றிக்கொண்டார்கள். மருதி யணிந்திருந்த சில நகைகளையும் கழற்றிக் கொண்டார்கள். இதற்குள் அரமனைப் பக்கமிருந்து சிலர் பணப்பெட்டிகளையும் நகைப்பெட்டிகளையும் எடுத்துக் கொண்டு வந்து சேர்ந்தனர். இவர்களில் இருவர், பிறரால் தூக்கிக் கொண்டுவரப்பட்டார்கள். இவ்வளவு நடந்ததிலும், திருடருள் ஒருவனாவது வாய் திறந்து பேசவில்லை. காவற்காரர் ஓலமும் துணி யடைப்பினால் முன்னரே நின்று போயிற்று. ஊரோ நிச்சப்தமாயிருந்தது. வந்தவர்களும் ஒருவித சப்தமும் செய்யவில்லை. பின்பு மருதியை வீட்டிற்குள்

ஒரு தூணோடும், காவற்காரரை முதுகொடு முதுகு சேர்த்தீர்த்துக் கட்டி வாசற் கம்பத்தோடும் நன்றாகக் கயிறுகளால் கட்டிவிட்டு, சம்பாதித்த சாமான்களை யெடுத்துக்கொண்டு திருடர்கள் புறப்பட்டார்கள். இச்சமயத்தில் ஒருவன் "பந்தலை மறந்து விட்டோமே" என்றான். உடனே யிருவர் மட்டும், மற்றவர்களை யனுப்பிவிட்டு, அரமனைக்குச் சென்று, மணப்பந்தரில் ஒரு மூலையில் தீயை வைத்துவிட்டு ஒடிப் போய் விட்டார்கள். பனையோலை, பாய், துணி, மூங்கில், முதலியவற்றால் செய்யப்பட்ட அப்பெரிய பந்தர், குபீரெனச் சுவாலை விட்டு எரியத் தொடங்கியது, அவ்வூரெங்கும் ஒரே வெளிச்சம் பரவியது. இதை முருகன்குன்றி லிருந்தவர்கள் கண்டவுடன், எல்லோரும் வேகமாய் ஊரை நோக்கி யோடி வந்தனர், பலபலவழிகளிலும் ஓடிவருகையில், இருவர் எதிர்த்திசையை நோக்கி யோடுவதைச் சில மறவர் கண்டு, அவர்களைப் பின்றொடர்ந்து துரத்தினார்கள். மற்றவர்கள் வந்து அரமனைக் கருகேயுள்ள தெப்பக் குளத்து நீரைக் கொண்டு நெருப்பை யவித்தனர். மணப்பந்தர் முழுமையும் அரமனை முன் கட்டும் வேறு மூன்று கூரை வீடுகளும் சேதமாயின. அரமனைப் பின்புறம் அடைப்பட்டிருந்தமையாலும், வாயிற் புறம் பந்தர் எரிந்து கொண்டிருந்தமையாலும், இதுவரையும் ஒருவரும் உட்செல்ல முடியவில்லை. நெருப்பவிந்த பின் உட் சென்று பார்க்கவே, இரண்டு காவற்காரர் பலத்த காயங்களால் மூர்ச்சையாய்க் கிடந்தார்கள்;

யிருந்த நாலு காவற்காரர், தூணுக்கொருவராகச் சித்திரப்பதுமைகள்போல் வாய்களில் துணி யடைத்துப் பலமாய்க் கட்டப்பட்டிருந்தார்கள். சாமான்களெல்லாம் தாறுமாறுகக் கிடந்தன; அரமனைக் காவல் நாய்கள் இரண்டும் வெட்டுண்டு கிடந்தன; ஜமீன்தார் பொக்கிச அறை திறந்திருந்தது. பணப் பெட்டிகள் நகைப் பெட்டிகளொன்றையும் காணவில்லை. கீழே கிடந்தவர்களை மூர்ச்சை தெளிவித்தும், கட்டுண்டிருந்தவர்களை விடுவித்தும் விசாரித்ததில், காவலாக இருந்த அறுவருள் இருவர் பொக்கிச அறைவாயிலிற் பேசிக் கொண்டு காவலிருந்ததாகவும், மற்ற நால்வரும் தாழ்வாரத்திற்படுத்துத் தூங்கிக்கொண்டிருந்ததாகவும், அரமனை வாசல் திறந்திருந்ததாகவும், அப்பொழுது திடீரென்று தாழ்வாரத் திருந்தவர்கள் வாய் குழறியோலமிட, அதென்னவென்று பார்க்கத் தாங்கள் எழுந்துபோகுமுன் பத்துப் பெயர் தாழ்வாரப் பக்கத்திருந்து பொக்கிச அறைப் பக்கம் வந்ததாகவும், உடனே வந்தவர்களுக்கும் தங்களுக்கும் சண்டை நடந்ததாகவும், அப்பொழுது வாசற் பக்கத்தினின்றும் குரைத்துக் கொண்டு உள்ளே வந்த நாய்களிரண்டையும், வந்தவர்கள் வாளால் வெட்டிவிட்டதாகவும், அச்சண்டையில் நேர்ந்த பலமான இரத்தக் காயங்களால் தாங்கள் மூர்ச்சையற்றதாகவும், பின்பு நடந்த தொன்றுமே தங்களுக்குத் தெரியாதென்றும், மூர்ச்சை தெளிந்த இருவரும் சொல்லி முடித்தனர்; வந்தவர்களில் ஒருவனையேனும் தங்களுக்கு முன்பு தெரியா

தென்றும், இனிப்பார்த்தால் சிலரை அடையாளங் களால் அறிந்து கொள்ளலா மென்றுஞ் சொன்னார் கள். மற்ற நால்வரும், சிறிது நேரம் பேசிக் கொண் டிருந்துவிட்டுப் பின்பு தாங்கள் தாழ்வாரத்தில் படுத் துத் தூங்கியதாகவும், அப்பொழுது யாவரோ சிலர் திடீரென வந்து தங்கள்மேல் விழுந்து அமுக் கித் தங்கள் வாய்களில் துணியை அடைத்துத் தங்களைத் தூண்களோடு சேர்த்துக் கட்டிவிட்ட தாகவும், பொக்கிச அறையில் நடந்த விஷயங் களைத் தாங்கள் நேரிற் பார்க்கவில்லை யென்றும், ஆனால் நடந்த கலகமும் கொள்ளையும் தங்களுக் குக் காது கேட்டதென்றும், வந்தவர்களில் ஒருவரை யும் அதற்குமுன் தெரியாதென்றும் சொல்லி முடித் தார்கள். தூங்கியதற்காக இவர்களுக்கு ஜமீன்தார் சமர்ப்பித்த சவுக்கடிகளுக்கும் கால்மிதிகளுக்கும் கணக் கில்லை. இதனிடையே, வேலாயுதத்தேவர் வீட்டு வாசல் தூணுக்கு மனிதப் பொம்மைகள் கட்டியிருப் பதையும், வீட்டுக்குள் அவர் மனைவி, இதுவரையும் யாரும் அவளிடத்துப் பார்த்திராத மௌனத்தோடு கட்டுண்டிருப்பதையும், வீடு கொள்ளை போயிருப்பதை யும், சிவகாமி அங்கில்லாமையையும், அத்தெருவாரிற் சிலர் வந்து தெரிவித்தனர். உடனே எல்லோரும் அங்கோடினர். அங்கிருந்த காவற்காரர் இருவரும் அரமனையில் தூங்கிக்கொண்டிருந்த காவற்காரரைப் போலவே வாக்கு மூலம் கொடுத்தார்கள்; சிவகாமி யைச் சிலர் தூக்கிச் சென்றதையும், அவள் ஓலமிட்ட தையுங் கூறினர். மருதி, தான் தன் மக

ளுடன் தூங்கிக்கொண்டிருந்ததாகவும், தன்மகள் வாசலில் ஓலமிட்டதைக் கேட்டெழுந்து சென்ற தாகவும், அங்கிருந்த பத்துத் திருடர்கள் தன்னைப் பிடித்துக் கட்டி வாயில் துணியை அடைத்துத் தன் நகைகளையும் கழற்றிக்கொண்டு வீட்டையும் கொள்ளை யாடிவிட்டுப் போய் விட்டதாகவும், மிக்க அரவத்து டன் கூறினள். அவளும் வேலாயுதத்தேவரும், "ஐயோ! எம்மகளே! எம்மகளே" என்று அலறிய அழுகைக்குரல் கல்லையும் கரைக்கும். "பந்தலை மறந்துவிட்டோமே" என்று சொல்லிக்கொண்டு இருவர்மட்டும் திரும்பி அரமனையை நோக்கிச்சென்ற தையும், பின்பு சிறிது நேரத்திற் பந்தல் எரியத் தொடங்கியதையும், அவர்களில் ஒருவன் வீரமா காளித்தேவன் என்றும், மற்றொருவரையுமே ங்களுக் குத் தெரியாதென்றும், அரமனையினின்றும் பெட்டி களுடன்வந்த திருடரில் இருவர் நடக்க முடியாதபடி காய முற்றுப் பிறரால் தூக்கிக்கொண்டு வரப்பட்டார் களென்றும், இரண்டு காவற்காரரும் கூறினர். மருதி சொற்படி நடப்பதிலும் நாடகம்பார்த்தலையே பெரி தாகமதித்த இரண்டு காவற்காரருக்கும் தக்க சவுக் கடிமரியாதை நடந்தது

இந்த விருத்தாந்தங்களைச் செவியுற்ற அவ்வூரா ரும் அயலாரும் பலபலவிதமாய்ப் பேசினர். திரளான கொள்ளைக்காரர் அயலூரினின்றும் வந்து, வீரமா காளித் தேவனை உடந்தையாக வைத்துக்கொண்டு கொள்ளைபோட்டு விட்டுப் போய்விட்டதாகவே பொது

அபிப்பிராயம். சிவகாமியைத் தூக்கிச்சென்றது, அவளணிந்திருந்த நகைகளுக்காகவும், வேறு கெட்ட உத்தேசத்தோடு மிருக்கு மென்று நினைத்தார்கள். அப்பொழுதே பந்தங்களும் தடிகளுங்கொண்டு மறவர்கள் திருடரைப் பிடிக்கப் புறப்பட்டார்கள். வீரமாகாளிகொள்ளைக்கூட்டத்திற் சேர்ந்தவர்கள் அப்பொழுது அங்கிருந்த பலரை விசாரித்ததில், தாங்கள் ஒருமாதமாக ஒரு வேலைக்கும் போகவில்லையென்றும், தங்கள் தலைவனைக் காணவுமில்லையென்றும், அதற்கு முன் அவன்மட்டும் மலையாளத்துக்குப்போனான் என்றும், இன்னும் திரும்பிவரவில்லை யென்றும் சொன்னார்கள். இங்ஙனம் பேசிக்கொண்டிருக்கும் பொழுதே வீரமாகாளித்தேவனையும், வேறொருவனையும் பிடித்துக் கட்டிக்கொண்டு புலிமலை மறவரிற் சிலர் வந்துசேர்ந்தார்கள். இவர்கள்தாம் பந்தரில் தீயிட்டவர்களைத் துரத்திச் சென்றவர்கள். தாங்கள் அநுமானத்தின்மேல் வெகு தூரம் துரத்தியதாகவும், அப்பொழுது திருடரில் ஒருவன் கற்றடுக்கிக் கீழே விழுந்து விட்டதாகவும், அவனைத் தாங்கள் பிடித்துக் கொண்டவுடன், தன்னைப் பிடித்துக்கொண்டு விட்டார்களென்று அவன் ஓலமிட்டதாகவும், அப்பொழுது முன்னேலோடிக்கொண்டிருந்த வீரமாகாளி திரும்பிவந்து தங்களுடன் சண்டையிட்டதாகவும், தாங்கள் அவனையும் பிடித்துக்கொண்டதாகவும் சொன்னார்கள். வீரமாகாளியும், அவனுடன் பிடிபட்டவனும் ஒன்றுமே பேசவில்லை. ஜமீன்தாரும் மற்ற

வர்களும் பல கேள்விகள் கேட்டார்கள்; ஒன்றுக்கும் வாய் திறக்கவில்லை.

மறுநாட்காலையில், மாங்கல்ய தாரணத்துக்குக் குறிக்கப்பட்ட பலக்நத்தில், 'சர்க்கார்' அதிகாரி களுக்கு நடந்த விஷயங்களைப்பற்றி 'ரிப்போற்டு' எழு தப்பட்டது. வீரசங்கிலித்தேவருற்ற கிலேசத்துக்கும் கோபத்துக்கும் எல்லையில்லை. வீரமாகாளியைத் தமக் குத்தெரிந்த சித்திரவதைகளுக்கெல்லாம் உட்படுத் தினர்; அவன் வாயே திறக்கவில்லை; மற்றவனும் அப்படியே மௌனஞ்சாதித்துவிட்டான். பிறர் தடுக் காவிடின் அவர்களிருவரையும் ஜமீன்தார் கொன்றே யிருப்பார். முப்பதினாயிரரூபா சொத்துக்குமேல் கொள்ளைபோனது பெரிதாகத் தோன்றவில்லை; சிவகாமி தவறிப்போனது சிறிதுமே பொருட்டாகத் தோன்றவில்லை; பந்தரும் அரமனை முன்கட்டும் நீறுன தைப்பற்றி அவர் நினைக்கவேயில்லை; தாம் ஜமீனை நன்கு கைக்கொள்வதற்கு முன்னரே, தம் குடிகளில் ஒருவனாலேயே, ஊர்க்கேலி நாட்டுக்கேலியான இவ் விதக்கொள்ளை நடந்ததே அவர் மநத்தை உறுத்தியது; விஜயமார்த்தாண்டத்தேவர் பட்டத்துக்கு வந்திருப் பின் இம்மாதிரிசெய்ய எவரும் துணிந்திராரென்று அவருக்கே தோன்றியது; எரிகின்ற தீயில், எண்ணெய் ஊற்றினாற்போல மணமுகூர்த்தத்திற்குப் புதிதாகக் காலையில் வந்த நாட்டுக்கோட்டைச் செட்டிமார் துக்கம் விசாரித்தார்கள். முன்னரே தம்மைச்சிறிதும் மதியாத மற்ற ஜமீன்தார்கள், இனிப்பகிரங்கமாய் இகழ்வார்

களென்று அவர் நன்குணர்ந்தார்; இன்னும் எவ்வளவு திரவியம் செலவிட்டாயினும் இக்கொள்ளையைத் துலக்கிச் சொத்துக்களைமீட்டு, திருடர்களைத் தக்க தண்டனைக்குட்படுத்தாவிடின், தமக்கு வெளியே தலை நீட்ட நீதியில்லையென்று அறிந்தார்; சுப்பையரை மந்திரியாகக்கொண்டு, அதற்கு வேண்டிய ஏற்பாடு களைச் செய்யத்தொடங்கினர். வேலாயுதத்தேவ ரோ, வாய்த்தவிட்டையும் அடுப்பு நெருப்பை யும் ஒருங்கு கெடுத்துக்கொண்டவருக் கொப்பாகி, தம் மகளைத் தேடுவதில் முயலலானர்.

## எட்டாவது அதிகாரம்.

---

### ஆறிலும் சாவு நூறிலும் சாவு.



முன்னதிகாரத்திற் கூறிய கொள்ளைக் 'கேசை'ப் பற்றிய பிரதம விசாரணையையும், வாக்கு மூலங்களையும், எத்தனைபேர் அநுமானத்தின் மேற் பிடிக்கப்பட்டார்கள் விடுக்கப் பட்டார்கள் என்பதையும், எவரெவர்க்கு எவ்வளவு பணச்செலவு என்பதையும், உண்மையறிந்து நியா யஞ்செய்வதன் மேற்பழியாக என்ன என்ன சித்திர வதைகள் செய்யப்பட்டன என்பதையும், என்ன என்ன சாக்ஷியங்கள் கண்டுபிடிக்கப்பட்டன என்பதையும், சம யத்துக்கேற்பக் 'கேசு' எப்படியெல்லாந் திருப்பப்

பட்டதென்பதையும், ஜமீன்தார் கோவிலில் அணிந்திருந்த என்ன நகைகள் பின்பு களவுபோயினவென்பதையும், எவரெவர் வீடுகளெல்லாஞ் சோதனைசெய்யப்பட்டன என்பதையும், நாடகக்காரருக்கு என்ன செலவு என்பதையும், விவரமாகக் கூறுவதற்கு இப் புத்தகம் முழுமையுமே போதாது, எமக்கிஷ்டமுமில்லை. ஆயினும், இவையெல்லாம் நிகழ்ந்த காலச்சுருக்கமட்டும் மிகவியப்பானதே; ஏனெனின், வியாழக்கிழமை இரவு நடந்தகொள்ளை, பத்துநாளில் செஞ்சாலியிலே 'ஸெஷந்ஸ் ஜெட்ஜி' முன்பு விசாரணைக்கு வந்துவிட்டது; அதற்குள் ஒரு பெரிய புத்தகத்திலெழுதியடக்க முடியாத சங்கதிகளும் நடந்துவிட்டன. முடிவில், வீரமாகாளித்தேவன் தானாக ஒப்புக்கொண்ட சங்கதிகளே அரங்கேறின. அவன் முதலில் மௌனஞ்சாதித்தானாயினும், 'போலீஸ் ஸுப்பரிண்டண்டு, துரை, சிவகாமியைக் கண்டு பிடித்தற்பொருட்டு நூறு செந்தலைப்புலிகளையும் தெரிந்தெடுத்த மறவர்கள் முப்பதுபேரையும் உதவியாகக்கொண்டு, தாமே, அம்மலைச்சாரல் முழுமையும் எள்ளிருக்குமிடமின்றித் தேடப் போவதாக ஏற்பாடு செய்தவுடன், வீரமாகாளி உண்மையை உரைப்பதாக ஒப்புக்கொண்டு, மௌனவிரதத்தைக் கைவிட்டு, தன் வாக்குமூலத்தை யெழுதி வைத்தான். உண்மையாக அகப்பட்ட சாக்ஷியமும் அவன் கூறிய தற்கு அநுசரணையாயிருந்தபடியால், அந்தப்பிரகாரமே 'கேசு' மேல்விசாரணைக்கு அனுப்பப்பட்டது. அவன் முழு உண்மையையும் கூறி, உடன்சேர்ந்தவர்களை வெளிப்படுத்திப்

பிடித்துக்கொடுத்தால், அவனைக் குற்றத்தைத்துலக்க உதவியாகக்கொண்டு, மன்னித்துக் காப்பதாக, 'ஜில்லா கலெக்டர்' கேட்டதற்கு, வீரமாகாளி, "துரையே! எங்கள் குலவிருத்தி கொலையும், கொள்ளையும்; அதில் அவமானமில்லை; ஆனால், ஒருத்தனை யொருத்தன் காட்டிக்கொடுப்பது எங்கள் குலவிருத்தியல்ல. அப்படியேனும் பிழைக்க உயிர் கருப்புக்கட்டியா? ஆறிலும் சாவு, நூறிலும் சாவு" என்று சொல்லிவிட்டான். ஆனால் உண்மையில்களவுபோன சொத்தில் ஒரு பைசா வேனும் திருகாணியேனும் அகப்படவுமில்லை; முதலிற் பிடிபட்ட இருவரையும், வீரமாகாளி காட்டிய வேறு நால்வரையும், ஜமீன்தாருக்கு விரோதமான நால்வரையும் தவிர்த்து, ஒருவரும் பிடிபடவுமில்லை.

கைதிகளின்மேல் ஏற்பட்ட குற்றங்களில் நான்கு முக்கியமானவை:—கொலை, கொள்ளை, வீட்டில் நெருப்புவைத்தல், கொள்ளையில் இருவரைக் கடுங்காயப் படுத்தல். முதற்கைதியாகிய வீரமாகாளி எழுதி வைத்த வாக்கு மூலத்தைக் கீழே சுருக்கிக்கூறுவோம்.

"என் பெயர் வீரமாகாளித்தேவன்; என் தகப்பன் பெயர் சங்கர பாண்டியத்தேவன்; மறச்சாதி; தொழில் விவசாயம்; வயது தெரியாது; ஊர் புலிமலை. நான் கொஞ்சகாலமாகக் கொள்ளைக்காரரோடு சம்பந்தப்பட்டிருப்பது வாஸ்தவமே. ஒரு மாதத்துக்கு முன் என்னைத் தலைவன் ஆக்கினார்கள். ஆனால் என் னிஷ்டப்படி நடத்தச் சரிப்படாமல் நான் மலையாளத்துக்குப்போயிருந்தேன். என்னுடன் சேர்ந்திருந்தவர்

கள் இன்னுரென்ருவது, என்னகளவுகள் செய்தோ மென்பதாவது நான் சொல்லமாட்டேன். இந்தக் கொள்ளையைப்பற்றி மட்டும் முழுவிசத்தையும் சொல்லி விடுகிறேன். நான் மலையாளத்திலிருந்து, இந்தக் கொள்ளைக்கு ஒரு வாரத்துக்கு முன்பு தான் வந்தேன். வந்தவுடன் எங்கள் ஊர் ஜமீன் வியாச்சியம் முடிந்து விட்டதென்றும், வீரசங்கிலித்தேவர் வந்து பட்டத்தை ஒப்புக்கொண்டு, விஜயமார்த்தாண்ட மகராசாவுக்கென் றிருந்த பெண்ணைக் கலியாணஞ் செய்து கொள்ளப் போவதாகவும், விஜயமார்த்தாண்ட மகராசா, மோரீசு, நேட்டால், முதலிய இடங்களுக்குப் போய் விட்ட தாகவும், கேள்விப்பட்டேன். இது எனக்கு வருத் தமாயிருந்தது. வீரசங்கிலித்தேவருக்கும் எனக்கும் எப்பொழுதும் விரோதம். இனியென்ன செய்யலா மென்று யோசித்துக்கொண்டிருக்கும் பொழுது, வே ெருரு கொள்ளைத்தலைவனைச் சந்தித்தேன். அவன் வட க்கேயிருந்து வீரசங்கிலித்தேவர் போக்கு வரவுகளைக் கவனித்துக்கொண்டே வந்திருந்தான். அவன் பேர் சொல்லமாட்டேன்; ஊர் தெரியாது. அவனுடன் பத் துப்பேர் வந்திருந்தார்கள். சமயம் பார்த்து வீரசங்கி லித்தேவர் கொண்டு வந்த நகைகளையும் பணத்தையும் பறித்துக்கொள்ளும் பொருட்டு அவன் வந்திருந்தான். அவனுக்குப் புலிமலை தெரியாது. நான் அவனுக்கு உடந்தையாயிருந்து வேண்டிய உதவிசெய்தால், என க்கு மூன்றிலொருபங்கு தருவதாயும், பின்பு எல்லோ ரும் மலையாளத்துக்குப் போகலா மென்றும் சொன் ஞன், அவனை ஓரூரில் இருக்கச்சொல்லிவிட்டு, நான்

புலிமலைக்கு ஓரிரவிற் போனேன். 3-வது, 4-வது, 5-வது, 6-வது கைதிகள் வெகுநாளைக்கு முன் என்னுடன் கொள்ளைகளிற் சம்மந்தப்பட்டவர்கள். அவர்களுக்கும் புலிமலையே பிறந்தவூர். அவர்கள் அரமனையில் வேலையாகவிருந்தார்கள். அவர்களுடன் கலந்து பேசியதில், வீரசங்கிலித்தேவர் இரண்டுநாளில் சுமைதியான நகைகளும் பணமும் கொண்டு வரப்போவதாகவும், கலியாணம் நடக்கப்போவதாகவும், இரண்டு நாள் கழித்து வந்தால் மேல்விவரம் தெரிவிப்பதாகவும் சொன்னார்கள். அப்படியே வேண்டிய ஏற்பாடுகள் செய்துகொண்டு, நாங்கள் எல்லோரும் புலிமலைக்கு வெகுசமீபமாக ஓரிடத்திற் காத்திருந்தோம். புதன் கிழமையன்று வீரசங்கிலித்தேவர் புலிமலைக்கு வந்தார். குறிப்பிட்டிருந்த இடத்துக்கு, நான் மட்டும் பாதியிராத்திரியிற் போனேன். 3-வது கைதி தவசி மட்டும் வந்து என்னைச் சந்தித்தான். மறுநாள் குமரன் கோவிலில், இராத்திரி திருவிழாவும் நாடகமும் நடக்கப்போவதாயும், ஊரிலும் அரமனையிலும் ஒருவருமே இருக்கமாட்டார்களென்றும், அப்பொழுதைவிட ஏற்ற சமயம் வாய்க்காதென்றும், நகைகளையெல்லாம் வீரசங்கிலித்தேவர் தம் மணப்பெண்ணுக்கு அனுப்பிவிட்டாரென்றும் சொன்னான். வேலாயுதத்தேவர் மகள் கலியாணத்துக்குச் சம்மதித்துவிட்டாளென்றும் சொன்னான். மறுநாளிரவு சாமத்துக்கு வந்தால் எல்லாம் முடித்துவிடலாமென்றுஞ் சொன்னான். நான் திரும்பிவந்து என்னைச்சேர்ந்த மற்றவர்களோடு ஆலோசித்துச் சமயத்துக்குத் தக்கபடி செய்கிறதென்று

தீர்மானஞ் செய்துகொண்டு, நாங்கள் எல்லோரும் மலைக்காளிகோவிலிற் படுத்திருந்தோம். அந்தக் காளிதான் கொள்ளைக்காரர் குலதெய்வம். அன்றிரவு தூக்கத்தில் கனவில் அந்தக்காளியம்மைவந்து, வேலாயுதத்தேவர் மகள் சிவகாமியைத் தனக்குக் கன்னிப் பலிகொடுக்கும்படி கேட்டாள். நானும் என்பெண்சாதி பிள்ளைகளும் இரண்டுவருஷங்களுக்கு முன் பேதி யெடுத்துக்கிடந்த பொழுது, மலைக்காளிக்கு, நாங்கள் பிழைத்தால் ஒரு கொடைகொடுப்பதாக வேண்டிக் கொண் டிருந்தேன். எல்லோரும் பிழைத்தோம். இன்னும் கொடைகொடுக்கவில்லை. அதையும் காளி யம்மை எடுத்துச்சொன்னாள். நான் ஏம்மதித்தால் அந்தப்பெண் எளிதில் என்கையில் அகப்படுவாளென் றும், அவளைப்பலிகொடுக்க உடம்பட்டால் தான் எங்கள் கொள்ளை நன்கு நிறைவேறு மென்றும் சொன்னாள். நான் விழித்தவுடன் என் கனவையும் காளியம்மையின் மகிமையையும வரசக்தியையும் மற்றவர்களை எழுப்பிச் சொன்னேன். உடனே எல்லாருமாக ஆலோசித்து அப் படியே செய்கிறதென்றும், பின்புகாட்டில் மறைவான இடத்தில் கொலை ருசுவாகாதபடி பிரேதத்தை எரித்து நீறுக்கிவிடுகிறதென்றும், காளி சந்நிதியில் சபதம் செய் தோம். அப்பொழுது 2-வது கைதியில்லை. மறுநாள், அதாவது வியாழக்கிழமை, இரவு யாமப்பொழுதுக்கு எல்லோரும் புலிமலை யூருக்கு ஒரு நாழிகை வழித் தூரத்துக்குள் வந்து சேர்ந்தோம். நானும் என் கூட் டாளிகள் தலைவனும் மட்டும் ஊருக்குள் மெதுவாய் நுழைந்தோம். அரமனையைச் சுற்றி அவனுக்குக்

காட்டினேன். ஊரில் ஒருவருமில்லை. வீடுகளெல்லாம் பூட்டப்பட்டிருந்தன. எல்லோரும் கோவிலுக்குப் போயிருந்தார்கள். அப்பொழுது, குறிப்பிட்ட இடத்தில் 3-வது கைதி எங்களைச் சந்தித்தான். அவர்கள் நால்வரும் என்ன தந்திரங்கள் செய்தும் அவர்கள் மட்டும் அரமனையிலிருக்க முடியாமற் போயிற்றென்றும், வீரசங்கிலித் தேவருக்கு உண்மையுள்ள வேறிருவர் இருப்பதாகவும், அவர்களைக் கொலை செய்தால், அல்லது மூர்ச்சையாகும்படி அடித்துத் தள்ளி விட்டாலன்றிக் காரியம் முடியாதென்றும், அரமனைக் கொல்லைக்கதவை எங்களுக்காகத் திறந்து வைத்திருப்பதாகவும், அவர்கள் இருவரும் பொக்கிச அறை வாசலில் இருப்பார்களென்றும், தாங்கள் தாழ்வாரத்திலிருப்பதாகவும் சொன்னான். இன்னபடி செய்வது என்று ஆலோசித்து நிச்சயித்துக் கொண்டு, வேலாயுதத் தேவர் வீட்டில் அவர் மகளிருக்கின்றாளா என்று பார்க்க மறைவாகச் சென்றேன். அந்தத் தருணத்தில், அவர் பெண்சாதி, தானும் தன் மகளும் மட்டும் தனியே யிருப்பதாகவும், வாசலிற் காவலாகப் படுத்துக் கொள்ளும்படிக்கும் சில காவற்காரருக்குச் சொல்லிவிட்டுக் கதவை யடைத்தது, என் காதில் விழுந்தது. சற்று நேரத்தில், இரண்டுபேர், தாங்கள் நாடகம் பார்க்கப் போவதாகவும், மற்ற இரண்டு பேரைக் காவலாகப் படுத்துக் கொள்ளும்படிக்கும் சொல்லிக் கொண்டே கோவிலை நோக்கிச் சொல்வதையும் பார்த்தேன். இது காளியம்மையின் செயல்

என்று என்கூட்டாளி சொன்னான். நானும் அப்படியே எண்ணினேன். பின்பு ஒளிப்பிடத்துக்குத் திரும்பி, எல்லோருமாக நடுநிசி வேளையில் புலிமலைக்கு மறுபடியும் போனோம். எங்கள் கூட்டத்தை இரண்டாகப் பிரித்து, ஒரு பகுதிக்கு நானும் மற்றதற்கு என் கூட்டாளியும் தலைவராக ஏற்படுத்திக் கொண்டோம். நான் வேலாயுதத்தேவர் வீட்டுக்குப்போனேன், என் கூட்டாளி அரமனைக்குப் போனான். முதலில் வாசலிற் படுத்திருந்த இரண்டு காவற்காரரையும் சரிப்படுத்தினோம்; வாயிற்றுணியை அடைக்கு முன் அவர்கள் போட்ட சப்தத்தாலும், காளியம்மையின் செயலினாலும், வேலாயுதத்தேவர் மகளே வாசற் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தாள். உடனே முன் ஏற்பாட்டுப்படி இரண்டு மூன்று பேராக அவளைத் தூக்கிக் கொண்டு காளி கோயிலுக்கு ஓடி விட்டார்கள். பின்பு அவள் தாய் வந்தாள். அவளையும் பிடித்துக் கட்டிவிட்டு வீட்டைக் கொள்ளை போட்டோம். என்னை அடையாளம் தெரியாதபடி நான் தெருவிலேயே மறைவாய் நின்றேன். இதற்குள் அரமனைக்குப் போனவர்கள் கிடைத்த சாமான்களுடன் திரும்பி விட்டார்கள். அவர்களில் இருவருக்குக் கொஞ்சம் காலில் அடிபட்டிருந்தது. முன் ஏற்பாட்டுபபடி அரமனைப் பின் வாயில் வழியாக உள்ளே சென்றதாகவும், மூன்றாவது, நான்காவது, ஐந்தாவது, ஆறாவது கைதிகள் போலீக் கூச்சலிட்டதாகவும், இதற்குள் பொக்கிச

அறை முன்னிருந்தவர்களை அடித்து மூர்ச்சையாய் விழும்படி தள்ளி, குரைத்துக் கொண்டு வந்த இரண்டு நாய்களையும் கொன்று விட்டு, பின்பு பணப் பெட்டிகளையும் நகைப்பெட்டிகளையும் எடுத்துக் கொண்டு, வீரசங்கிலித்தேவர் சந்தேகியாதபடி முன் ஒப்பந்தப்படி அவர்களைத் தூண்களோடு கட்டி வாயில் துணியை அமுக்கிவிட்டு வந்து விட்டதாகவும் அந்தக்கூட்டத்தலைவன் சொன்னான். உடனே சாமான் களையெல்லாம் காளி கோயிலுக்கு அனுப்பினோம். என் பழைய விரோதியாகிய வீரசங்கிலித்தேவரை அவமானப் படுத்தும்படி அவர் மணப்பந்தரில் தீயிடு கிறதென்றும் காளியம்மைமுன் சபதம் செய்திருந் தேன். என் கூட்டாளி அதை மறந்து விட்டபடியால், நான் இரண்டாவது கைதியைக் கூட்டிக் கொண்டு அரமனைக்குச் சென்றேன். என் கூட்டாளியும் மற்ற வர்களும் காளிகோவிலுக்குப் போனார்கள். நானும் இரண்டாவது கைதியும் பந்தரில் தீயை வைத்துவிட்டு ஓடும் பொழுது சிலர் எங்களைக்கண்டு துரத்தினார்கள். இரண்டாவது கைதி கீழே விழுந்து அகப்பட்டுக் கொண்டபடியால் நானும் அகப்பட்டுக் கொள்ளும்படி யாயிற்று. அகப்பட்டுக் கொண்டபின் நடந்ததைச் சொல்லி விடுகிறதென்றே என் தீர்மானம். ஆனால் மற்றவர்கள் தப்பித்துக் கொள்ளுதற் பொருட்டு முத லில் மௌனமாயிருந்தேன். அவர்களுக்கு அபாய முண்டாகாதென்று நினைத்தபிறகு போலீஸ் துரை யிடத்தில் எல்லாவற்றையும் சொல்லி விட்டேன். முன் ஒப்பந்தப்படி பலிமட்டும் கொடுத்தானே ஒழிய,

என் கூட்டாளி சொத்துக்களை நான் குறிப்பிட்ட விடத்தில் புதைக்க வில்லை. அவன் ஒருவேளை என் னையே மோசஞ் செய்ய எண்ணியிருக்கலாம்'' என்று சொல்லிமுடித்தான். யாவரும் வெகு பிரமிப்புடன் கேட்டுக்கொண் டிருந்தார்கள். மற்றைக் கொள்ளைக் காரர்பெயரை ஏன் சொல்லக் கூடாதென்று கேட்ட தற்கு, வீரமாகாளி கலெக்டரிடம் சொன்னதுபோலவே சொல்லிப் பழமொழி யோதினன்.

நியாயாதிபதி: அப்படிச் சொல்பவன், மூன்றுமவன் தொட்டு நான்கு கைதிகளை ஏன் காட்டிக் கொடுத் தாய்?

வீரமா: துரையே! அவர்கள் என்னுடன் இந்தக் கொள்ளையிற் சேர்ந்து, தங்கள் எஜமானுக்கே துரோ கஞ் செய்தார்கள். அப்படிப்பட்டவர்களை ஒருபொழு தும் நம்பக் கூடாது. அவர்களைக் காட்டிக் கொடுத் தலே சரி. நாங்கள் ஒருவருமே அகப்படாவிட்டா லும், அவர்களை நான் வேறெப்பொழுதாவது தொலைத் திருப்பேன். எப்பேர்ப்பட்டவனுைம் ஒருவனை எச மானைக் கொண்டு அவன் உப்பைத் தின்ற பின், அவனுக்குத் துரோகஞ் செய்தல் எங்கள் குல தருமம் அல்ல. அது வேசைத் தனம்'' என்றான்.

நியாயாதிபதி: உண்மை யுரைப்பதாகச் சொல்ப வன் கடைசி நாலு கைதிகளைப்பற்றி ஏன் ஒன்றும் சொல்லவில்லை?

வீரமா: துரைகளே! அவர்கள் கொள்ளையிற் சம் பந்தப் பட்டவர்களேயில்லை. அவர்கள் இதற்கு முன்

நடந்த வியாச்சியங்களில் விஜயமார்த்தாண்ட மகராசா வுக்கு உதவியாக விருந்தார்கள். அவர்களுக்கும் வீர சங்கிலித் தேவருக்கும் எப்பொழுதும் பகை. அத ஞல்தான் அவர் பொய்ச் சாக்ஷிகள் ஏற்படுத்தி அவர்களை யும் இந்தக்கேசில் சேர்த்திருக்கிருர். நான் மலையாளத் துக்குப்போன பிறகு, சனிக்கிழமையன்று அவர்களைப் பிடித்துக்கொண்டுவந்த பொழுதுதான் நான் அவர் களைப்பார்த்தேன். அவர்கள் இந்தக் கேசில் சிறிதும் கலக்கவில்லை.

பின்பு இரண்டாவது கைதியை வாக்குமூலம் கேட்க, அவன் வாய்திறக்கவேயில்லை; கடைசிவரை யும் அவன் மௌனமாகவே இருந்துவிட்டான். வீர சங்கிலித்தேவர் வேலைக்காரர்களாகிய அடுத்த நான்கு கைதிகளும் தாங்கள் இதிற் சம்பந்தப்படவே யில்லையென்றும், விரோதத்தினல் வீரமாகாளி தங்களையும் சேர்ந்துச்சொல்லுவதாகவும், தங்களுக் குச் சாக்ஷியங்கள் உண்டென்றும் சொன்னர்கள். கடைசி நான்கு கைதிகளும தாங்கள் இந்தக்கேசில் சம்பந்தப்படவேயில்லை யென்றும், தங்களுக்கும் வீரசங்கிலித தேவருக்கும் தீராப்பகையென்றும் தாங்கள் ஒருமாதக்காலமாகப் புலிமலையூரிலேயே இல்லையென்றும், ஏதோ தீயும் கொள்ளையும் நடந்த தைக் கேள்வியுற்றுத் தங்கள் வீடு சொத்துக்களைப் பார்க்கும் பொருட்டுச் சனிக்கிழமையன்று காலையிலே யே தாங்கள் புலிமலைபோய்ச் சேர்ந்ததாகவும், வீரமா காளித்தேவர் ஏவுதலின்மேல் தங்களைப்பிடித்துக் கொண்டார்களென்றும், கொள்ளை நடந்ததினம்

தாங்கள் செஞ்சாலியிலேயிலிருந்ததற்குச் சாக்ஷிகளிருக்கிறார்களென்றும், அன்று மாலை கனம் ஜெட்ஜிதுரையவர்கள் ஆற்றங்கரையின்மேல் உலாவிக் கொடிருந்ததைக் கூடத் தாங்கள் ஆற்றுக்குள் நின்று பார்த்ததாகவும் சொன்னார்கள்.

பின்பு சாக்ஷி விசாரணை தொடங்கியது. வேலாயுதத்தேவர் மனைவியும் வாசலிற் படுத்திருந்த இரண்டு காவற்காரரும், தாங்கள், கொள்ளைக் காலத்தில் முதவிரண்டு கைதிகளையும் கடைசி நான்கு கைதிகளையும் பார்த்ததாகவும், அவர்கள்தாம் தங்களைப் பிடித்துக் கட்டினவரென்றும் பிரமாணஞ் செய்தார்கள். பூமாலைகள் கட்டிவிற்கும் பண்டாரங்கள் இருவர், தாங்கள் வெள்ளிக்கிழமை விடியற்காலம் புல்லூரிலிருந்து புலிமலைக்குக் கல்யாணத்துக்காகப் புஷ்பம் கொண்டுபோகும் பொழுது, மலைக்காளி கோவிலினின்றும் "ஐயோ" என்ற ஒருபெண்குரற் கேட்டதென்றும், தாங்கள் பயமுற்று விரைவாக நடந்து சென்றதாகவும், பிற்பாடு சிறிதுதூரம் போய்த் திரும்பிப் பார்த்தபொழுது, ஒரு வெளிச்சம் தெரிந்ததுடன், அங்கிருந்து பிணவாடை வீசிற்றென்றும், தாங்கள் பயந்து இன்னும் விரைவாக ஓடினதாகவும் சொன்னார்கள். போலீஸ் துரையும் இன்னும் சிலரும், சனிக்கிழமையன்று மாலை முதற்கைதி சொன்னதைக்கொண்டு, தாங்கள் மலைக்காளி கோவிலுக்குச்சென்றதாகவும், அது புலிமலையிலிருந்து நான்கு மைலுக்கப்பால் மலங்காட்டின் மத்தியில் ஒரு பள்ளத்தாக்கில் இருப்பதாகவும், அங்கே

பலிபீடத்தின் முன் இரத்தம் உறைந்திருந்ததாகவும், அதன்மேல் மண்ணை வாரிப்போட்டிருந்ததாகவும், கோவிலுக்குப் பின்புறம் இரண்டு பெரிய பாறைகளின் இடையில் மறைவான ஓரிடத்தில் ஏதோ எரியுண்டசாம்பற் கிடந்ததாகவும், அதில் இரண்டொரு நீறுன எலும்புத்துண்டுகள் இருந்தனவென்றும், தாம் வந்துவிட்டபிறகு, மறுபடியும் அவ்விடத்தை நன்கு சோதனை செய்துகொண்டிருந்த சேவகர்களும் ஜமீன்தாரின வேலைக்காரர்களுமாகிய சிலர், அங்குச் சாம்பரின்கீழ் மண்ணுக்குள் உருகியோடிக் கிடந்தகைக் கண்டெடுத்ததாக இரண்டு வெள்ளிக் கட்டிகளை எடுத்துவந்தார்களென்றும், அவைகளை நிறுத்துப் பார்த்ததில் எண்பதுரூபா எடைக்குக் கொஞ்சம் குறைய விருந்தனவென்றும், சொன்னார்கள். வேலாயுதத்தேவரும், புலிமலைத் தட்டானொருவனும், சப்பாணித்தேவர்வந்து கல்யாணம் நிச்சயம் செய்தபின், சிவகாமிக்கு எண்பதுரூபா எடையுள்ள கால்காப்பு அடித்துப்போட்டதைப்பற்றிப் பிரமாணஞ் செய்தார்கள். வேறு சில சாக்ஷிகளுக்குப் பின்னர், குற்ற ருசு முடிந்தது. பின்பு குற்றவாளிகள் பக்கத்துச் சாக்ஷிகள் விசாரிக்கப்பட்டார்கள். முதலிரண்டு கைதிகளுக்குச் சாக்ஷிகளில்லை. அடுத்த நாலு கைதிகளுக்கு ஜமீன்தாரே முதல் சாக்ஷி. வாஸ்தவத்தில் அவருக்கு இவர்கள்மேற் சந்தேகமே கிடையாது. சனிக்கிழமைமாலை வீரமாகாளி மௌனத்தைவிட்டுப் பேசும்வரை யாரும் இவர்களைப்பற்றி அநுமானப்படவே இல்லை. இதைவிட நல்லசமயம்

வாயாது என்றே அவர் கடைசி நாலுகைதிகளாகிய தம்விரோதிகளை இதில் மாட்டிவிட்டார். விஜயமார்த் தாண்டத்தேவர் இந்தச்சமயத்தில் இல்லையே என்று அவருக்கு மிக்க விசனம். "அந்தப் பயலிருந்தால் இப்பொழுது ஒரே அமுக்காய் அமுக்கிவிடுவேன்; அவன் தப்பிவிட்டானே. எட்டாக்கையாக மோரீசுக் குப் போய்விட்டானே" என்று மிகவும் வருத்தப்பட் டார். சாக்ஷியம் கிடைப்பதைப்பற்றிக் கவலையே இல்லை. "மஹாராஜா பேரை வைத்துக்கொண்டு,எதற்குவேண்டு மாயினும் சாக்ஷி விடுகிறேன்; அதைப்பற்றிக் கவலையே வேண்டாம்" என்று விருதுகூறினார் மந்திரி சுப்பையர். ஆகவே, தம் வேலைக்காரர்களை நீக்கிவிடவேண்டு மென்று அவருக்கெண்ணம். ஆனால் வீரமாகாளியின் வாக்கு மூலமே அச்சாணியாகக் 'கேசை' மேல் நடத்துவதால், அவர்களை நீக்கிவிட்டால் முழுமோசு மாய்விடும் என்று 'போலீஸ்காரர்' சொன்னார்கள்; அவன் வாக்குமூலத்துக்கு அநுசரணையாகப் போனு லொழிய ஒன்றுமே ருசுவாகாதென்று சொன்னார்கள். முடிவில், உபயபிரயோசனமாக, ஜமீன்தார் இஷ்டப் படி, வீரமாகாளி கூறுத கடைசி நான்கு கைதிகளையும் 'கேஸி' ல் 'போலிஸ்காரர்' சேர்த்துக்கொள்ளுகிற தென்றும், தம் வேலைக்காரர் நான்கு பெயர்களுக்கும் பிரதிகூலமாக ஜமீன்தார் சாக்ஷிகூறுகிறதென்றும் நிச்சயிக்கப்பட்டது. இஃதொன்றையும் அறியாத வேலைக்காரர் நால்வரும், ஜமீன்தாரையும் தம்முட னிருந்த காவற்காரர் இருவரையுமே சாக்ஷிகளாக அழைத்திருந்தனர். ஜமீன்தார் படியேயிப்பிரமாணஞ்

செய்தவுடன், தம் வேலைக்காரர்பேரில் தமக்கு அவ்வளவு திருப்தியில்லையென்றும், அவர்கள் நம்பத்தக்கவர்களல்லரென்றும், தாம் எட்டுப்பேர் களைக் காவல்வைத்துவிட்டுக் கோவிலுக்குப் போன தாகவும், அவர்களில் இருவரை இவர்கள் தம்பின் கோவிலுக்கு அனுப்பிவிட்டதாகவும், அவர்களைக் கட்டியிருந்தது அவர்களே அவிழ்த்துக்கொள்ள முடியாத அளவு பலமாகவில்லையென்றும் சொன்னார். இடி விழுந்தாற்போல் இதைச் செவியுற்ற வேலைக் காரர் நால்வரும், "மகராசா! பிள்ளைகுட்டி உண்டாக வேண்டும்; நியாயத்தைச் சொல்லுங்கள்" என்று முறையிட்டார்கள். பிரயோசனப்படவில்லை. பிற பாடு காவற்காரர் இருவர் தாங்களும் மஹா ராஜா உத்திரவுப்படி காவலிருந்ததாகவும், மூத்த நாச்சியார், அவர்களை வரச் சொல்லிவிட்டுப் போன தாகக் கூறித் தங்களை மூன்றுமவன் முதல் நான்கு கைதிகளுமே கோவிலுக்கு அனுப்பியதாகவும் சொன்னார்கள். அடிபட்ட இருவருங்கூட, இவர்கள் போட்ட கூப்பாடு போலிக்கூப்பாடு போன்றே இருந்த தென்றும், தங்கள் பேச்சைக் கடந்து இவர்கள் தனி மையாகத் தாழ்வாரத்துக்குப் போயினரென்றும், இரவு சுமார் மூன்பதுமணிக்கு மூன்றுவது கைதி அவசிய கருமத்துக்குச் செல்வதாகச் செம்பில் நீரை எடுத்துக்கொண்டு வெளிச் சென்றவன், இரண்டு நாழிகை கழித்தே திரும்பி வந்தனனென்றும், வந்த திருடர்கள் மொத்தம் ஏழெட்டுப்பேருக்கு மேலிரா

தென்றும், இவர்கள் எதிர்த்திருந்தால் அவர்களால் கொள்ளைபோட்டிருக்க முடியாதென்றும் கூறி முடித்தனர்.

கடைசி நான்கு கைதிகளின் சாக்ஷிகள் பின்பு விசாரிக்கப்பட்டன. தக்க கனவான்களிருவரும் நியாய துரந்தரர் ஒருவரும், கடைசி நான்கு கைதிகளையும் வியாழக்கிழமை அன்று மாலை மூன்று மணிக்குத் தாங்கள் செஞ்சாலியிலேயிற் கண்டுபேசியதாகவும், தங்களுக்குத் தெரிந்தமட்டும் அவர்கள் யோக்கியர்களென்றும், இவ்விதக் குற்றங்கள் செய்யக்கூடியவர்களல்லரென்றும் கூறினர். 'கேசு' தொடங்கிய மூன்றாவது நாள் மாலையில் விசாரணை முடிந்தது. பின்பு நியாயாதிபதி, 'கேசில்' ஏற்பட்ட குற்றங்களைப் பற்றிய சட்ட ஆதாரங்களையும், சாக்ஷிகளின் தராதரங்களையும் எடுத்துப்பேசி, 'அசேஸர்' களது ஆழ்ந்த ஆலோசனையையும் அபிப்பிராயத்தையும் வேண்டினர். அவர்களிருவரும் வெகுநேரம் ஆலோசித்து, முடிவில் 'கேசில்' ஏற்பட்ட எல்லாக் குற்றங்களுக்கும் முதலிரண்டு கைதிகளும் உத்தரவாதிகள் என்றும், மற்றைக் கைதிகளின்மேல் ஒரு குற்றமும் நன்கு ருசுவாகவில்லையென்றும் அபிப்பிராயங் கொடுத்தனர். பின்பு நியாயாதிபதி தம் அபிப்பிராயத்தையும் தீர்ப்புத் தண்டனையையும் வெளியிட்டார். நியாயாதிபதிகள் பொதுவாய் இருவிதத்தினர்.—சாக்ஷிகளை யெளிதில் நம்பாது, குற்றவாளிகளாகக் கொண்டு வரப்பட்டவரைப் பெரும்பாலும் விடுதலை செய்து அனுப்புபவர் ஒரு

திறத்தார்; தண்டனை விதிப்பதிலேயே கண்ணுயிருப்ப வர் ஒரு திறத்தார். இந்தக்குற்றத்தை விசாரித்த நியாயாதிபதி, பின் வகுப்பில் மிகப் பெயர்போனவர். 'மறவர்,' 'குறவர்,' 'கள்ளர்' என்ற குலத்தினர் எவ ரேனும் குற்றவாளிகளாகவரின், அவர்கள் சாதியே இவருக்குப் போதுமான சாக்ஷியமாம்; சாக்ஷியம் எவ் வளவு பலக்குறைவாயிருப்பினும் தண்டித்தாலன்றி, இவர் தம் கடமையைத் தாம் செவ்வையாகச் செலுத் தினதாகத் திருப்தியடைகிறதில்லை; அவ்வருணத் தாரில் சாக்ஷிகளாக வந்தாரைக்கூட எங்ஙனமாயினும் குற்றப்படுத்தித் தண்டிக்க முயல்வார். ஆகவே, அவர், 'அபேக்ஷர்கள்' அபிப்பிராயத்தோடு தாம் முற் றும் இசையவில்லை யென்றும், எல்லாக் கைதிகளுமே குற்றவாளிகளென்றும், இவ்வளவு துணிவும் மறமும் பொருந்தியவர்களைத் தக்கபடி சிக்ஷிக்கவேண்டியது தம் கடமையென்றுங்கூறி, முதலிரண்டு கைதிகளுக்கு மரணதண்டனையும், மற்ற எட்டுக்கைதிகளுக்கும் ஒவ் வொருவருக்கும் பத்து வருஷம் கடுஞ்சிறையும் விதித் தார். கடைசி நான்கு கைதிகளிலிருவர் மூர்ச்சித்துக் கீழே விழுந்துவிட்டனர். வீரமாகாளி மட்டும் "ஆறி லுஞ் சாவு; நூறிலுஞ் சாவு" என்று பழமொழி யோதினன்.

## ஒன்பதாவது அதிகாரம்.

தானொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்தது.



நமது நண்பர்களுக்குப் 'பருந்துக்கூடு' தெரியுமே. ஆனால் முன்பு நாம் பார்க்கும்பொழுது இருட்டு. இப்பொழுதோ வெகு மனோரம்மியமாகச் சந்திரிகையடிக்கின்றது; வானம் நிஷ்களங்கமாக இருக்கின்றது; நக்ஷத்திரங்கள் ஒன்றொடொன்று பணயம் வைத்துள்ளன போற் பிரகாசிக்கின்றன. நம் கதாநாயகரும் சிவகாமியும், முன்கூறிய நீர்ச்சுனையின் அருகே, எருமையின் முதுகில் எண்ணெயைத் தேய்த்தாற் போற்காணும் ஒரு சுத்தமான கருங்கல்லின்மேல் பரிமாறியிருக்கும் போஜனத்தை, நிலவிலிருந்து உண்கின்றனர்; சுந்தரம் பரிமாறுகிறான்; கற்கதவு அடைத்திருக்கின்றது; வேறொருவருமில்லை. காதலர் உடனிருந்து உண்ணும் சுகம் அநுபவித்தார் அறிவார். அதுவும், நிலவில், நீர்ச்சுனையின் கரையில், இவ்வளவு தனிமையான இடத்தில், உடனிருந்து உண்டுகளிக்க யாவருக்கும் கிடையாது; கிடைப்பினும், எல்லாக் காதலரும் அநுபவிக்கவல்லரல்லர். ஒத்த உணர்ச்சியும், அளப்பருங்காதலும், சிதறா இளமையும், கட்டழகும், இயற்கைக் காட்சியிலுள்ள அழகுகளையும்

சிங்காரங்களையும் உணர்ந்து அநுபவித்தற்கு வேண்டிய மனோபாவமும் கலவிபபயிற்சியுமுள்ள வதூவரர்க்கும், மற்றைக்காதலர்க்கும் வித்தியாசமில்லையா? வீணை கானத்துக்கும் முரசதிர்ச்சிக்கும் எவ்வளவு வித்தியாசமுண்டோ அவ்வளவு இதினும் உண்டு. காதலெல்லாம் காதலுமல்ல, ஓசையெல்லாம் சங்கீதமுமல்ல. இவர்கள் சம்பாஷணையைச் சற்று கவனிப்போம்.

சிவகாமி: அத்தான! நீங்கள் நன்றாகச் சாப்பிடவில்லையே. உங்களுக்கென்ன பசியில்லையா? இங்கேயே சிறைச்சாலையிலிருப்பது போல் இருப்பதால், பசி மந்தித்துவிட்டதா?

விஜயமா: இல்லை; நன்றாகவே சாப்பிடுகிறேன். இதை நான் சிறைச்சாலையாக நினைக்கவேயில்லை. தேவலோகமாகவே நினைத்திருக்கிறேன். "இன்பமும் துன்பந்தானும் உள்ளத்தோடியைந்தவன்றே" என்று கம்பர் சொல்லியிருக்கிறபடி மநது தான் காரணம். கற்சுவர்களும் இருப்புக்கம்பி அடைப்புக்களும் ஓரிடத்தைச் சிறைச்சாலை யாக்கிவிடமாட்டாவென்றும், அவ்விடத்தையோர் ஆசிரமமாகப் பாவித்து வானத்துப் பக்ஷிகளைப் போல் தாராளமாக உலாவிக்களிக்க மநம் வல்லதென்றும் ஓர் ஆங்கில கவி கூறியிருக்கிறார். இராமரிருக்குமிடம் அயோத்தியென்பது போல, நீ யிருக்குமிடமே எனக்குச சுவர்க்கம். அன்றியும் நமக்கிங்கென்ன குறை? இன்னும் ஒரு வருஷத்துக்குப் போதுமான சாமான்களிருக்கின்றன; என்

மதிப்பில், மனிதர் கட்டிய எந்த மாளிகையும் கடவுள் இயற்றிய இந்தக் கன்மாளிகைக்குச் சமான மாகாது. புலிமலையில் நடந்த சங்கதிகள் ஒன்றுமே தெரியாமலிருப்பதுதான் சிறிது கவலையை உண்டுபண்ணுகிறது. ஆனாலேதாவது விசேஷமாயிருந்தால் இதற்குமுன் வீரமகாளி ஆள் அனுப்பியிருப்பான்.

சுந்தரம்: மஹாராசா! ஒன்றும் விசேஷமில்லாவிட்டால் இன்னும் ஒரு மாதத்துக்கு இங்கே ஒருவருமே வரமாட்டார்கள். என்னிடத்தில் அவர் அப்படியே சொல்லியிருக்கிறார்.

விஜயமா: ஆயினும், விசேஷ மொன்றுமில்லையென்று உறுதியாய் ஒரு வார்த்தை தெரிந்துவிட்டால் பிற்பாடு கவலையே இல்லை.

சுந்தரம்: நானே நான் போய்த் தெரிந்துகொண்டு வரட்டுமா?

விஜயமா: அது சரியல்ல. உனக்கு நன்றாக வழி தெரியாது. அன்றியும் நீ மோரீசுக்கு என்னுடன் போயிருப்பதாக யாவரும் எண்ணியிருக்க, நீ வெளியிற் புறப்படவேகூடாது.

சிவகாமி: அதுதான்! ஐயாவுக்குத் தங்கள் கடிதம் வந்தவுடன் நான் பட்ட வருத்தத்தை இப்பொழுது நினைத்தாலும் மனம் திடுக்கிடுகிறது.

விஜயமா: அப்படி நான் போய்விடுவேனென்று நீ நினைக்கலாமா? நான் வாக்குக்கொடுக்கவில்லையா? அன்றியும் உன்னை வீரசங்கிலித்தேவருக்கு இரையாக விட்டு விட்டு, நான் மோரீசுபோயேனும் வயிறுவளர்த்து இந்த உயிரைக் காப்பாற்றுவது எதற்காக? சுந்த

ரம்! நீ சாப்பிட்டாய்விட்டதல்லவா? நீ போய்ப்படுத்துக்கொள். புநர்பூசம் உச்சிக்கு வந்துவிட்டது. பத்துமணிக்கு மேலாயிற்று. சாக்கிரதையாய்ப் படுத்துக்கொள்" என்றார். உடனே சுந்தரம் கயிற்றை யிழுத்துக் கதவைத் திறந்தான். நம்கதாநாயகர் அவனை வெளியே விட்டுக் கதவை மூடினார். உடனே சிவகாமிஅவரை இறுகத்தழுவிக்கொண்டாள். இருவரும்போய் நிலவு வெளிச்சத்தில் மறுபடியும் உட்கார்ந்தார்கள்.

சிவகாமி:—இங்கே ஒரு குறையுமில்லை என்று சொன்னீர்களே? வெற்றிலைகூட இல்லையே; வெறும் வாய்க்கிலைகெட்ட இடமன்றோ இது?

விஜயமா: (சிரித்துக்கொண்டு) சோமி! ஸ்திரீ சுபாவத்தை நன்குகாட்டுகிறது உன்பேச்சு. ஒரு வித்வான் சொல்லியிருக்கிறான்: இப்பூமண்டலத்தையெடுத்து ஒரு மனிதன் ஒரு ஸ்திரீக்கு வெகுமதியாகக் கொடுத்தால், அதை நன்றாகக் காகிதத்திற் பொதிந்து தரவில்லையென்று அவள் அதிருப்தியடைவாளாம். உன் பேச்சும் அப்படியே இருக்கிறது. மேல்நாட்டாருக்குள், புதுமணமான வதூவரர், ஏகாந்தமாக அநுபவிக்கும்பொருட்டு, விவாக திநத்தன்றே வேறு எங்கேனும் சுகாநுபவத்துக்கேற்ற இடத்துக்குப்போய்ச் சிலகாலம் வாசஞ்செய்வது வழக்கம். அந்தக்காலத்திற்கு அவர்களுக்குள் 'தேன்மதி' என்று பெயர். யாரொரு மேல்நாட்டாரு யிருந்திருப்பின், இதினும் மநோரம்மியமான இடத்தை விரும்பியிருக்க

மாட்டேன்; அங்ஙனமில்லாமலே இதுகிடைத்தது என்பாக்கியமே. பார், உரோகிணியுடன் வெகு உல்லாசமாகக் களித்துக்கொண்டிருக்கும் சந்திரனைப்பார்: அவள்மேற்கொண்ட காதலினாலேயே சந்திரனுக்குச் சாபம்நேர்ந்ததென்று புராணகதை. இன்னும் அவள் மேல் அதிகப் பக்ஷமுள்ளவனாகவே தோன்றுகிறான். என்ன கஷ்டம் நேர்ந்தாலும், ஸ்திரீவிஷயத்தில் மாத்திரம் புருஷனுக்கு எளிதில் பற்றுவிடுகிறதில்லை. ஸ்திரீயைக் கடவுள் சிருஷ்டித்திராவிட்டால், புருஷன் என்செய்வானோ?

சிவகாமி: ஸ்திரீயில்லாவிட்டால் புருஷனும் இருக்கமாட்டானே. ஆனால் புருஷனுக்குண்டாகும் தீங்குகளெல்லாம் ஸ்திரீகளாலன்றி வருவதில்லை. நீங்களிவ்வாறு இங்குக்காட்டில்வந்து திருடரோடு கூடிச் சஞ்சரிப்பதும் ஸ்திரீயின் நிமித்தமே அன்றோ ?

விஜயமா: என் கண்ணாட்டி! அப்படி நினையாதே. துக்கமுள்ள இடத்திலேயே சுகமும்; புருஷனது சுகத்துக்கும் துக்கத்துக்கும் ஸ்திரீயே காரணம்; அவனும் அவள் விஷயத்தில் அப்படியே. ஆனாலிப்பொழுது நான் அநுபவிக்கும் சுகத்துக்கு, நீ கஷ்டமாகக்கூறும் சங்கதி எம்மட்டு? தேவாமிர்தத்தை அருந்துபவனுக்கு ஒரு சிறுதுரும்பு அதில் அகப்பட்டாற்போலாம். பார்! இந்தச் சந்திரன் இப்பொழுது இவ்வளவு சந்தோஷத்தைக் கொடுக்கிறான் மனத்திற்கு; நான்மட்டும் தனித்திருந்தால், இவ்வளவு பொறுக்கரிய துக்கத்தையே கொடுத்திருப்பான். என் மனம் இப்பொழுது சம்பூர்ண ஆநந்தத்தில் ஆழ்ந்திருக்கின்றது. இப்ப

டியே உன்மடிமேல் என்னுயிர்போவதாயிருந்தால் எனக்கு மிகச்சந்தோஷமே. ஏனெனின் பின்வரக் கூடியதை யார் அறிவார்?

சிவகாமி: ஏன் அப்படி விரும்புகிறீர்கள்? இதெல் லாம் வீணே. இந்தக்கொள்ளையின் அரவம் சிறிது அமரவிட்டு, தங்களுடைய தேசப்படி எங்கேயாவது அறி யாத இடத்துக்குப்போய்விட்டால், நமக்கென்னகுறை? இப்பொழுதினும அதிகமான ஆநந்தத்தையே நம்வாழ் நாளெல்லாம் சுகமாக அநுபவித்துக் கொண்டிருக் கலாம்.

விஜயமா: எனக்கேனோ அப்படித் தோன்றவில்லை? ஏதோ காரணமில்லாமலே மநம் கவலுகின்றது. எதாவது பாடு.

சிவகாமி: பாட்டா? சந்திரனையே பாடுகிறேன்: (பாடுகிறாள்).

"தக்கன் மகத்தில் ஒருநாள் தாளிற் படுநீதலையேறி
மிக்கமுனிவாமந்திரநீர் இறைக்கஇன்னும்மீண்டிலையால்.
நக்கன் பவள வாய்ப்பட்டுகளத்தி லிறங்குநஞ்சமுனை
ஒச்குமென்பதறியாமை அன்றோஒளிவெண் மதியமே"

விஜயமா: உன் கண்டம் இப்பொழுது முன்னி லும் வெகு நன்றாயிருக்கிறது. சரி பேச்சும் பாட்டு மாக நடுநிசிக்கு மேலாயிற்று. படுத்துக்கொள்வோம்." என்றார். பின்பு இருவரும்போய்ப் படுத்துக்கொண்டு, மறுபடியும் பேசத் தொடங்கினர்.

சிவகாமி: அத்தான்! தங்கள் உத்தேச மென்ன? விவரமாய் எனக்குச் சொல்லவில்லையே இன்னும்?

இங்கேயே எப்பொழுதும் இருந்து விடலாமென்ற எண்ணமா?

விஜயமா: அது கூடுமாயின் எனக்கு மிகச் சந்தோஷமே. நம்மை யாராவது கண்டு பிடித்து விடுவார்களென்ற பயமே இல்லை. வீரமாகாளி உள்ளவரைக்கும் அந்தப் பயமும் வேண்டாம்; சாப்பாட்டுக்கு வேண்டிய சாமான்களைப் பற்றிய விசாரமும் வேண்டாம். ஆனால் அது முடியாத காரியம். உன்னை இவ்வாறு கடத்துதற்கு ஏற்பாடு செய்ததில், என் உத்தேசம், கலியாணத்தை முடித்துக் கொண்டு, இரண்டொரு வருஷத்துக்குப் பின், உனக்குச் சுதந்தர பாத்தியதைக்குரிய வயது வந்தவுடன், பகிரங்கமாக வெளிப் புறப்படலாமென்றிருந்தது. ஊரார் பலர் பலவிதங் கூறினும், பெரும்பாலாரும் எனக்கு அநுதாபமே காட்டுவார்களென்பதிற்சந்தேகமில்லை. ஜீவனோபாயத்தைக் குறித்தும் கவலைப்பட வேண்டியதில்லை. பெரிய மஹாராஜா அவர்கள் தயவினால் அந்த விசாரமில்லை. எவ்விதமாயினும் நமக்கு வேண்டிய திரவியம் எளிதில் சம்பாதிக்கலாம். ஆனால் முதலில் என் பிரயத்தனம் தவறி, அதனிமித்தம் வீரசங்கிலித்தேவர் உடனே புறப்பட்டு வந்து கலியாணத்துக்கு ஏற்பாடு செய்தவுடன், சுலபமாய் உன்னைக் கடத்த அவகாச மில்லாமல், அயோக்கியதையான வழியிற் பிரவேசிக்க வேண்டியதாயிற்று. முற்றும் வீரமாகாளி இஷ்டமாயிருந்தால் அப்படி நேரிட்டிராது; அந்தக் கறுப்பன், தான் கொள்ளைக் கென்றே ஆள்கள் திரட்டிக் கொண்டு வந்திருப்பதாயும், தங்களு

க்குப் பணம் கிடைக்கும் வழியில்லையெனின் தன் ஆள் கள் உடம்பட மாட்டார்களென்றும், பிடிவாதமாகச் சொன்னபடியால், அதற்குச் சம்மதிக்க வேண்டிய தாயிற்று. ஆகவே இனி நீ யெனனுடனிருப்பதாக எப்பொழுது வெளியில் தெரிந்தாலும், நானும் கொள் ளையில் சம்பந்தப் பட்டவனாய் விடுவேன். ஆதலால் இனி அப்முகமே தெரியாத வேறு எந்த இடத்துக் காவது ஒளித்துச் செல்வதைத் தவிர வேறு விதி யில்லை. நான் மோரீசுக்குப் போய்விட்டதாகவும், உன் னைக் கொள்ளைக்காரர் கொண்டு போய்விட்டதாகவுமே இனி எப்பொழுதும் ஊரார் நம்பியிருக்க வேண்டும். வீரமாகாளி வந்தவுடன் உனக்கு வீரசங்கிலித்தேவர் அனுப்பிய நகைகளை யெல்லாம் அவனிடம் கொடுத்து விடவேண்டும். அவை கொள்ளையைச் சேர்ந்தவை; கொள்ளைக்காரருக்கே சொந்தம். அந்தக் கொள்ளை யில் எனக்கு இந்த விலை மதிப்புக் கெட்டாத மாணிக் கம் ஒன்றுமே போதும். பிறபாடு அவன் உதவி யினல், இனந்தெரியாமல், பமபாயோ, கல்குத்தாவோ, மோரீசோ, எங்கேயாவது தூர தேசத்துக்குப் போய் நாம் வாழ வேண்டும். இதைப்பறறி நினைக்கும் பொழுது, என் மனம் திடுக்கிடுகின்றது. நாளே, அனுதை; எனக்காக வருந்துவார் யாருமேயில்லை; வீர சங்கிலித் தேவருக்காவது, நான் போய் விட்டால் வெகு சந்தோஷமாகவே யிருக்கும். ஆனல், என்னல் உனக்கும் இந்தவிதி நேர்ந்ததே யென்றுதான் வருந் துகிறேன், கொள்ளைக்காரர் கொண்டு போனதாக வதந்தி பரவிப் பெண்களுக்கு அருங்கலமாகிய உன்

கற்புக்கு உலக அபிப்பிராயத்தில் ஒரு தீராவசை உண்டானதுமன்றி, இந்த அதிபாலிய வயதிலேயே, நீ, தாய் தந்தையரையும், உடன் பிறந்தோரையும், பிறந்து வளர்ந்த ஊரையும் விட்டு, எங்கேயோ பரதேசம் போக நேரிடுகிறதே என்றே என் வருத்தமெல்லாம். இவ்வளவுக்கும் நான் காரணனானேனே.

சிவகாமி: (அவரைத் தழுவிக் கொண்டு) அத்தான்! நீங்களிவ்விதம் பேசினால் என்னால் பொறுக்க முடியாது. எனக்குத் துக்கம் நெஞ்சை யடைக்கின்றது; கண்ணீர் பெருகுகின்றது. நீங்கள் சொல்வது, நான் இஷ்டமில்லாதவள் போலும், நீங்கள் பலவந்தமாய் என்னைப் பலிகொடுக்கக் கொண்டுபோவதுபோல் அழைத்துப் போவது போலும் தோன்றுகிறது. உங்களுக்கு ஞாபகம் இருக்கிறதோ இல்லையோ, நானாகவே உங்கள் அடைக்கலத்தை வேண்டினேன். என் தாய் தந்தையரோடிருந்து, அந்தப் பாவியை மணம் புரிந்திருந்தால், நான் பலி கொடுக்கப் பட்டவளே— அந்தத் துன்பத்தின்றும் என்னை நீங்களன்றோ நீக்கினீர்கள்? அதற்கு இணங்காது நான் எப்படியேனும் தற்கொலை புரிந்து கொண்டிருப்பேனெனின், உங்களாலன்றோ இன்று நான் உயிரோடிருப்பது? என் பொருட்டன்றோ நீங்கள் உயர்பதவியான உத்தியோகத்தை மறுத்து, சோரத்தகாதவர்களுடன் சேர்ந்து, உங்கள் மனச்சாக்ஷி ஒப்பாத காரியத்துக்கும் உடம்பட்டீர்கள்? எனக்குத் தாயும், தந்தையும், உடன் பிறந்தோரும், ஊரும், வாழ்வும். எல்லாம் நீங்களே. என்னைப் போன்ற மறப்பெண்களைப்போல் சாணி பொறுக்கிக்

கொண்டும் சாகரித்துக் கொண்டும் கேவலம் விலங்கு களுக் கொப்பாக வாழ்நாளையெல்லாம் வீண் போக்கா மல், நீங்களன்றோ எனக்குக் குருவாக நின்று, என்னை மனித ஜந்மத்துக் கேற்றவளாக்கினீர்கள் ?

"தக்க இன்ன தகாதன இன்னவென்
றொக்க உன்னல ராயின் உயர்ந்துள
மக்களும் விலங்கே"

என்று சொன்னது பொய்யன்றோ? இவ்வளவிருக்க, நீங்கள் எனக்காக வருத்தப் படுகிறதென்றால் நான் எப்படிச் சகிப்பேன்? இம்மாதிரியான பேச்சு இனிப் பேசுவீர்களானால் என்னால் பொறுக்கவே முடியாது. என்மேல் உண்மையில் இஷ்டமுண்டானால், சிறிதே னும் கருணை உண்டானால், இப்படி யென் மனத்தைப் புண்படுத்தாதேயுங்கள்.

விஜயமா: நீ வருத்தப்படாதே, சோமி! இனி யொரு பொழுதும் அந்தப் பேச்சையே எடுக்கவில்லை. என் மனத்தில் தோன்றியதையே வெளியிட்டேன். இனி யவ்விதம் எண்ணவும் மாட்டேன். இனி நாமிரு வரும் இரண்டுடல்களும் ஓர் உயிருமாகவே இருப் போம். என் கண்ணே! சோமி! அழுகையை நிறு த்து. இதைப்பற்றி நீ யிவ்வளவு கிலேசப் படுவா யென்று தெரிந்திருந்தால், நான் சொல்லியிருக்கவே மாட்டேன், இப்பொழுது நீயும் என்னைப் போலவே ஆகிவிட்டாய்: இனி உனக்கு நானும், எனக்கு நீயும், இருவருக்கும் தெய்வமுமே கதி; வேறு உற்றாருமில்லை, உறவினருமில்லை. நீ யென்னை விட்டுப் பிரியச் சகியா யென்பது என் மனப் பூர்வமாகத் தெரிந்து விட்டது;

நானும் இனி உன்னைவிட்டு இந்த உயிருள்ள மட்டும் பிரியேன். என் தேனே! இந்த உலகத்தில் எவரை யும் நான் எனக்கு இணையாக நினைக்கவில்லை. என்னைப் போன்ற பாக்கியவான் எவனுமே இல்லை. எனக்கு ஜமீன் கிடைத்திருந்தால் உன் அருமை எனக்குத் தெரிந்திராது. இவ்வளவு மெய்யன்பும் வாஞ்சையும் இருப்பதைத் தெரிந்து கொள்ள, ஒரு ஜமீனை, ஒன் பது ஜமீனை இழந்தாலும் தகும். என்ன, பேசாமலி ருக்கிறாய், சோமி? நம்மைப் போன்ற பாக்கியவான்கள் யாவரேனும் இருக்கிறார்களா? சொல்லு.

சிவகாமி: நம்முடைய அன்பும் ஆநந்தமும் நாளு க்கு நாள் விருத்தியாகும்படி, கடவுளைப் பிரார்த்திக் கிறேன். உங்களுடன் இருக்குமட்டும் எனக்கு இந்தி ராணியும் எதிரில்லை. உங்களைவிட்டுப் பிரிந்தால் என் உயிர் போய்விடும்.

விஜயமா:—என் பிரியவேண்டும், என் கண் ணுட்டி? என் கரும்பே! ஒரு முத்தங் கொடு. ஆ! ஹா! இதுவே சம்பூர்ண ஆநந்தம். நானே பாக்கிய வான்! நானே பாக்கியவான்! நானேபாக்கி——"

பேசி முடிவதற்குமுன் 'ஓம்' என்றாற்போல், கிணுகிணென்று மணிகிலுங்கிற்று. உடனே இருவ ரும் திடுக்கிட்டு எழுந்தனர். நம் கதாநாயகர் ஒரு தீபத்தைப் பொருத்தினர். மறுபடியும் மணி கிலுங்க வே, சுந்தரம் எதற்காகவோ கூப்பிடுகிறா னென்ற றிந்து, கயிற்றை இழுத்துக் கதவைத்திறந்தார். சுந்த

ரமும், வீரமாகாளியின் கூட்டாளியான கரிவீரனும் (பழைய சும்மைக்காரன்) உள்ளே வந்தார்கள். அவர்கள் முகங்களைப்பார்த்த நிமிஷத்திலேயே நம் கதாநாயகர் பயந்துவிட்டார்: அவ்வளவு திகிலும் விசனமும் இருப்பதைக் கண்டார். கரிவீரன் தம் காலில்விழுந்து எழுந்தவுடன், அவர், என்ன விசேஷமென்றும், வீரமாகாளி ஏன் வரவில்லையென்றும் விசாரித்தார்.

கரிவீரன்:—மகராசா! வீரமாகாளி அண்ணனைத் தூக்கிலிடப் போகிறார்கள். ஐயோ! அண்ணன் இனித் திரும்பமாட்டான், தூக்கிவிடுவார்கள்" என்று வாய்குழறி அழுது சொன்னான்.

விஜயமா:—ஏன்? என்ன விசேஷம்? சரியாகச் சொல்லு; விசனத்தை அடக்கிக்கொள்.

கரிவீரன்:—மகராசா! பந்தலிலே தீயைவைதது விட்டு ஓடும்பொழுது வீரமாகாளி அண்ணனும் வடசுகத்தியான் ஒருததனும் அகப்பட்டுக் கொண்டார்கள். நான் அப்பொழுதே சந்நிதானத்திலே தெரியப்படுத்துகிறேனென்று சொன்னேன், கூடாதென்று சாடை காட்டிவிட்டான் அண்ணன். ஒருநாளைக்கு நல்ல மறுபிள்ளையைப் போல, பேசாமலிருந்தான். மறுநாள் சாயங்காலம் போலீசு துரை நமமதாயைத் தேடுகிறதாக மலைக்குப் புறப்பட்டார். ஒருவேளை இங்கே வந்திடுவாரென்ற பயமோ என்னவோ தெரியவில்லை; இந்திரன் சந்திரன் வந்தாலும் பருந்துக் கூட்டைக் கண்டுபிடிக்க முடியுமா? அவர் புறபபட்டவுடனே,

அண்ணன் வாயைத் திறந்துவிட்டான். நம்ம நாச்சியாரை மலைக்காளிக்குப் பலிகொடுத்தா யிருக்குமென்று சொன்னுன், இன்னும் என்ன வெல்லாமோ சொன்னுன். நம்ம ஆள்கள் ஒருவரையும் மட்டும் காட்டிக் கொடுக்கவில்லை. துரை எல்லாருமாக மலைக்காளி கோவிலுக்குப் போய்ப் பார்த்தார்கள். அங்கே கொள்ளையன்று இராத்திரி ஆடு வெட்டின இரத்தமும் பின் பக்கத்திலே பொங்கித்தின்ற சாம்பலும் கிடந்தது; அதைப் பார்த்து அண்ணன் சொன்னதை எல்லாரும் நம்பிவிட்டார்கள். போதாக்குறைக்கு வீரசங்கிலி எங்கிருந்தோ இரண்டு வெள்ளித் துண்டத்தையும் அங்கே கிடந்தகப்பட்டதென்று எடுத்து வந்தார். அதுதான் கால்காப்பென்று வைத்துக் கொண்டார்கள். அன்றைக்கு உதயத்திலேயே வீரசங்கிலித்தேவர் ஏவுதலின் பேரில் ஆறுமுகத்தேவர் வகையில் நாலுபேரைப் பிடித்து அடைத்துவிட்டார்கள். அண்ணன் சொன்னதின்மேல் வீரசங்கிலித்தேவர் சொந்த ஆள்கள் நாலுபேரையும் பிடித்தார்கள். ஆக, அண்ணன், வடக்கத்தியான், அவர்கள் நாலுபேர்கள், இவர்கள் நாலு பேர்கள் எல்லாரையும் செஞ்சாலியிலேக்கு அனுப்பினுர்கள். அப்பொழுதும் சந்நிதானத்திலே சொல்லக் கூடாதென்று சொல்லிவிட்டான்; அங்கே ஜெட்ஜி முன்பு விசாரணை யாச்சுது. கள்ளப் பிரமாணத்துக்குக் கங்குகரையில்லை. கடைசியில் அந்தப் பாவி ஜெட்ஜி அண்ணனையும் வடக்கத்தியானையும் தூக்கிலிடும்படிக்கும், பாக்கிப்பெயரை எல்லாம் பத்து, பத்து வருஷம் கடுங்காவலிடும்படிக்கும் தீர்ப்புச் செ.

ய்துவிட்டான். கண்டவர், கேட்டவர் எல்லாரும் கூட இது அநியாயம், இது அநியாயமென்று பேசிக்கொண்டார்கள். நம்ம தாயிங்கிருக்க, அந்தப் பாவிக்குக் கொலை ருசுவாய்விட்டதாம்! அண்ணனைச் சயிலுக்குக் கொண்டுபோகும் பொழுது கூட ஜாடையாகக் கேட்டேன். இங்கே சந்நிதானத்திலே தெரிவிக்கவேண்டாமென்று ஜாடை காட்டிவிட்டான். அண்ணன் பேச்சை மீறி எப்படிவருகிறதென்று அழுதுக்கொண்டிருந்தேன். நேற்றுத் திருத்துரைப் பொட்டைக் கறுப்பனைக் கண்டேன். அவனுக்கு நேற்றுத்தான் சங்கதிகளெல்லாம் தெரியுமாம். உடனே சந்நிதானத்திலே தெரியப்படுத்தச் சொன்னான். இல்லாவிட்டால் அவனே வருவதாகச் சொன்னான். பிற்பாடுதான் நான் ஒப்புக்கொண்டேன்; அவனுக்குக் கை போட்டுக் கொடுத்தேன். அதுதான் வந்தேன். ஐயோ! அண்ணனைத் தூக்கிவிடுவார்களே! மகராசாதான் காப்பாற்றவேண்டும்'' என்று சொல்லி முடித்தான்.

---

## பத்தாவது அதிகாரம்.

---

### தன் வினை தன்னைச் சுடும்.



செஞ்சாலையினைப் பெரிய சிறைச்சாலை ஊருக்கு மூன்று 'மயில்' தூரத்துக்கு வெளியே இருக்கின்றது. அது மிகப் பெரிய கட்டிடம்; அடுத்த ஜில்லாவுக்குச் செல்லும் பிரதம இராஜ

பாதை ஓரமாயிருக்கின்றது. சுவர்மேற் சுண்ணும்புப் பூச் சின்றி, ஒவ்வொரு செங்கலேயுஞ் சுற்றிச் சுண்ணும் புவரை கீறப்பட்டிருப்பதால், அக்கட்டிடம், சதுரமான பெரிய 'கெம்பு'க் கற்களே வெள்ளியிற் பதித்திருப் பதுபோல் விளங்குகின்றது; அதைக் கட்டுவதில் மொத்தம் எத்தனை செங்கற்கள் செலவாயினமவன் பதை எளிதில், எப்பொழுது வேண்டுமாயினும், கணக் கிட்டு விடலாம்போ லிருக்கின்றது. அதன் வெளி யே, தென்புறத்தில் உள்ள 'மைதான'த்தில் தூக்கு மரம் நிற்கின்றது. தூக்குமரத்தை எல்லோரும் பார்த்திராரென் றெண்ணுகிறேம்: இத்தூக்குமரம் மூன்று பெரிய மர உத்திரங்களாலானது; இரண்டுத் திரங்களேச் சுமார் இருபத்தைந்தடி யுயரத்துக்குச் செங்குத்தாய் நிறுத்தியிருக்கின்றது; இவ்வுத்திரங் களி னிடைவெளி, பத்து அல்லது பதினைந்தடி யிருக் கலாம்; மூன்றுவது உத்திரம் இவ்விரண்டின் உச்சியில் வைத்துப் பிணைக்கப்பட் டிருக்கின்றது; உச்சியுத்திரத் தில் தூக்கிடுங் கயிறுகளே மாட்டு தற்குச் சில 'இருப்புக் கொண்டி'கள் மாட்டப்பட் டிருக்கின்றன; இம்மூன்று மரங்களுமாகச் சேர்ந்து, பெரிய பள்ளிக்கூடங்களில் பிள்ளேகள் ஆடுதற்கென்று நிறுத்தப்பட்டிருக்கும் ஊஞ்சலேப்போ லிருக்கின்றன; ஐந்தாறடித் தூரத் தில் ஒரு பெரிய மண்மேடிருக்கின்றது; செங் குத்தாக நிற்கும் இரண்டு கம்பங்களிலும், நடுமத்திக்கு மேல், ஒரு பலகையைத தாங்குதற்கு வேண்டிய யந்திரமொன்று வைக்கப்பட்டிருக்கிறது; இப்பல

கையை வெகு சுளுவாய்த் திடீரென்று கீழேவிழும் படி செய்துவிடலாம். ஒருவனைத் தூக்கிலிடவேண்டு மாயின், இப்பலகையைச் சரியானபடி நிற்கச்செய்து, இதற்கும் மண் மோட்டிற்கும் பாலம்போல் ஒரு பல கையைப் போட்டு, மண்மோட்டின் வழியாகவும் ஊடு பலகை வழியாகவும் தூக்குப் பலகைமேல் அவனைக் கொண்டுவந்து நிறுத்தி, மீதாள்கள் வரையும் தலையை நன்கு மூடும் ஒரு குல்லாவை அவன் தலையில் மாட்டி, மேல் விட்டத்திலிருந்து தொங்கும் கயிற்றை அவன் கழுத்தில் சுருக்கிட்டுச் சுருக்கு 'முடிச்சு'ப் பிடரிக்குழியி லிருக்கும்படி வைத்து, பின்பு உடன் சென்று இவ்வளவும் செய்தவன் மண் மோட்டுக்குத் திரும்பி ஊடுபலகையை வாங்கிவிட, கீழே நிற்பவ னொருவன் தூக்குப்பலகை திடீரெனக் கீழே விழுந்து விடும்படி இயந்திரத்தைத் திருப்பவே, அதன் மேல் அந்தரத்தில் நின்றுகொண்டிருக்கும் குற்றவாளி, அடி யாதாரமற்றுத் திடீரென ஆகாசத்திற்றொங்க, அவன் சரீரப்பளுவால் இழுக்கப்பட்ட கயிறு நருக்கென்று சுருங்கி யழுத்திப் பிடரியை முறித்து மூச்சையிறுக் கிச் சில நிமிஷங்களில் மரணத்தை விளைத்துவிடும். பின்பு பக்கத்தில் நிற்கும் வைத்தியர் குற்றவாளியின் உடலைச் சோதித்து உயிர்நீங்கியதை யுறுதிப்படுத்திய வுடன், பிணத்தை யிறக்கிப் புதைப்பார்கள்.

ஒருநாள் விடியற் காலமுதல் திரளான ஜனங்கள் கூட்டம் கூட்டமாய்ச் சிறைச்சாலையை நோக்கிச்சென்று கொண்டிருந்தார்கள். அவர்களுக்குள் நடக்கும் பேச்

சைக் கவனிக்க, மறவரிருவர் மரணதண்டனை விதிக் கப்பட்டாரென்றும், அவர்களில் ஒருவன் மட்டும் 'அப்பீல்' செய்ததில், அவன் தண்டனை ஆயுள் முடியு மளவும் தீவாந்தரமாக மாற்றப்பட்டதென்றும், மற்ற வன் 'அப்பீலே' செய்யவில்லை யென்றும், அவன் இன்று காலை தூக்கிலிடப்படுவானென்றும், அதைப் பார்க்கவே எல்லோரும் செல்வதாகவும் தெரியவரும். அந்தோ! வீரமாகாளியின் கதி யிவ்வாறோ ஆயிற்று? யாமும் கடைசியாக ஒருமுறை அவனைப் பார்க்கச் செல்வோம். தூக்குமரத்தருகே எவரும் நெருங்காத படி 'துப்பாக்கி'களுடன் செந்தலைப்புலிகள் வேலி போல் நிற்கின்றனர். ஜநங்களெல்லாம் சற்றுத் தூரத் திலேயே நிற்கின்றார்கள்; அவர்களுக்குள் நடக்கும் சம்பாஷணைகளில் நவரசங்களு மிருப்பினும், சோக ரசமே அதிகம். தூக்குப்பலகை, ஊடுபலகை, கயிறு, எல்லாம் ஆயத்தமாயிருக்கின்றன. தூக்குவோனும் சிறைச்சாலையைத் திரும்பித் திரும்பி நோக்குகிறான்; தன் மனைவிக்கோர் சீலை வாங்குவதற்கு அவசரமாய் அவன் சந்தைக்குப் போகவேண்டும்; 'அதனாற் சிறிது ஆத்திரப்படுகிறான். இக்கொடுமையைக் காணச்சகி யாதவன் போல் முகஞ்சிவந்து சூரியனும் கீழ்பால் உதித்தனன். அதிகாலையிலேயே வந்து நெடுநேரமாய் நின்றுக்கொண்டிருக்கும் ஜனங்களிற் சிலர், தங்களைப் போன்ற ஒரு மனிதன் உயிரினும் தங்கள் கால்நோவே பெரிதெனமதிக்கத் தொடங்கியும், தங்கள் தங்களுக் குள்ள அவசர வேலைகளை நினைந்து கூறியும், கால

தாமசத்தை வெறுப்பாராயினர்; ஒவ்வொரு நிமிஷ முஞ் ஒரு யுகம்போலிருந்தது; செந்தலைப் புலிகளுங் கூடத் தங்கள் துப்பாக்கிகளின்மேற் சாய்ந்து, கால் நோவாற்றத் தொடங்கினர். கடைசியில், சிறைச் சாலையிலிருந்து குற்றவாளியின் பவனி புறப்பட்டது: வீரமாகாளித்தேவனை ஒருபுறம் வைத்தியரும் மறு புறம் சிறைச்சாலை அதிகாரியுமாகப் பிடித்துக்கொண்டு வந்தனர்; அவர்களுக்கு முன்னும் பின்னும் துப்பாக்கி களுடன் காவலாளிகள் சென்றனர்; அவன் கைகள் பின்புறம் தளைக்கப்பட்டிருந்தன; கால் விலங்கு நடத் தற்பொருட்டுச் சிறிது தளர்வாய் மேலே தூக்கப் பட்டிருந்தது. அவன் முகத்தில் விசனக்குறி யேனும், பயக்குறியேனும் இல்லவே இல்லை, அவன் தீரத்தையும் விடைபோன்ற நடையையும் கண்டு, எல் லோரும் ஆச்சரியப்பட்டனா; தூக்குமரத்தைப் பார்த்தவுடன் அவன் முகத்திற் சிறிது புன்சிரிப்புண் டாயிற்று; சூழ்ந்து துப்பாக்கியுடன் நிற்கும் போலீஸ் காரரைப் பார்த்தவுடன், அவன் வாய்விட்டுச் சிரித்து, "அண்ணன்மாரே! உங்கள் பெரியதுரைக்குச சலாம் சொல்லுங்கள். நான் போய் வருகிறேன்" என்று சொன்னான். பின்பு தூக்குபவனைக் கண்டவுடன், "அண்ணே! சுகமா? மதினியாரை நான் விசாரித்த தாகச் சொல்லண்ணே" என்று பரிகாசஞ் செய்தான். பின்பு அவனை மண்மோட்டின் மேற்கொண்டு போனார் கள். அப்பொழுது, குதிரையொன்று நாற்காற் பாய்ச்சலாக வருவதுபோல் படீர் படீரென்ற சத்தங் கேட்டது. நிச்சப்தமாயிருந்த இடத்தில் இச்சத்தங்

கேட்டவுடனே, யாவரும் செவிகொடுத்துச் சிறிதுற்றுக்கேட்டனர். இதற்குள் நாக்கை வெளியே தள்ளிப் பெருமூச்செறியும் ஒரு பெரிய வெள்ளைக்குதிரை சிறைச்சாலைப் பக்கத்திலிருந்து தூக்குமரத்தை நோக்கி யோடிவந்தது. அதன்மேல் வடியும் வியர்வையாறே, கிளம்புந் தூளியைத் தணித்துவிடப் போதும்போலிருந்தது. அக்குதிரையின் மேலிருந்த துரை தம் வலதுகையில் தொப்பியைத் தூக்கி உயர்த்திப்பிடித்து வீசிக்கொண்டு, "ஸ்டாப்; ஸ்டாப்" என்று தம்மாலியன்றமட்டும் உரத்துக் கூவிக்கொண்டே வந்தார். தூக்குமரத்தடியேவந்து அவரிறங்கியவுடன், அவரும் அவர் குதிரையும் அப்படியே கீழே விழுந்துவிடுவதுபோல் நடுங்கினார்கள்; சிறிது பேசுமளவு களைப்புத் தீர்ந்தவுடன், அவர் சிறைச்சாலை யதிகாரியிடம் ஏதோ சிலவார்த்தைகள் இங்கிலீஷில் சொன்னார், வெகு ஆச்சரியத்தோடும் களிப்போடும் வீரமாகாளியைக் கண்மூடாது நோக்கி, நோக்கி, மற்றவர்களுடன் இங்கிலீஷில் பேசினார். பின்பு அவன் சிறைச்சாலைக்குத் திரும்பவும் கொண்டுபோகப்பட்டான். சூரியனும் அப்போதே தன்கோபம் தணிந்தான்போற் சிவப்பு மாறி மேற்செல்வானாயினான். நடந்தது இன்னதென்று அறியாத ஜனங்களெல்லாம், யுத்திபுத்திக்குத் தோன்றியவாறு பேசிக்கொண்டு ஊரைநோக்கித் திரும்புவாராயினர்; தாம் பார்க்கவந்த வேடிக்கை நடக்கவில்லையே என்று சிலர்க்கு மனக்கசப்புமுண்டு.

கரிவீரன் கூறியதைக் கேட்ட நிமிஷமே நம் கதா நாயகர் வீரமாகாளியைக் காப்பாற்றப் புறப்பட்டார். இவ்விஷயத்தில் சிறிதும் மந்திதைப்பில்லை. தாம் கூறப்போவதை நூசசெய்தற் பொருட்டும், வேறுவித ஏற்பாட்டுக்குச சௌகரியமின்றியும், சிவகாமியையும் தம்முடன் அழைத்துச்செல்ல வேண்டியதாயிற்று. சற்றுநேரத்துக்கு முன் குதிகொண்டு கொந்தளித்த ஆநந்தத்தின் ஸ்தானத்தில்,கவலையும்பயமும் அவமான மும் இப்பொழுது கதித்தோங்கு மநத்தோடு, அவர், சுந்தரத்தையும் சிவகாமியையும் அழைத்துக் கொண்டு கரிவீரன் பின் செல்வாராயினர். சிவகாமியோ, முன் னிலும் பதின் மடங்கு துயரத்தில் மூழ்கினாள்; சுந் தரம், அவர் செய்யச் செல்வது முற்றிலும் தவறென் றும, இன்றில்லாவிடின் என்றாயினுமொரு நாள் வீர மாகாளி தூக்கு மரததுக்கே உரியவனாதலின், சும்மா இருந்து விடுவதே நலமென்றும், ஆனால் தன் 'மகா ராஜா' சென்றவிடம் எதேயாயினும் தானும் அங்குச் செல்ல ஆயததமா யிருப்பதாயும், பலவாறு முணு முணுததுக் கொண்டு, மூட்டையும் தலையுமாகச் சென் றான். ஒரு நாளிரவு பதது மணிக்கு அவர்கள் செஞ் சாலியிலை வந்து சேர்ந்தனர். உடனே நம் கதாநாயகர் தம் நண்பரான ஒரு நியாயதுரந்தரர் வீட்டுக்குச் சென்று, நித்திரையிலிருந்த அவரை யெழுப்பி, அவர் பிரமித்துக் கேட்கச சகல சங்கதிகளையும் சொன்னார். மறுநாள் காலையிலே வீரமாகாளியைத் தூக்கிலிடப் போவதை அந்நண்பர் அறிந்திருந்ததால், போஜனம் செய்யக்கூடத் தாமசியாமல், இருவரும் சிவகாமியை

அழைத்துக் கொண்டு ஜில்லா 'கலெக்டர் பங்களா' வுக்குச் சென்றனர். அங்கே விசாரித்ததில், துரை, பத்து 'மயிலு'க் கப்பாலுள்ள பூனைக்காவூருக்குப் போயிருப்பதாகத் தெரிய வந்தது. வண்டியை விரட்டி விரட்டி வைகறை நாலுமணி சுமாருக்கு அவ்வூரை யடைந்தனர். 'டேரா' வில் நித்திரையா யிருந்த துரையை எழுப்புவது மிக அரிதாயிருந்தது; பின்பு என்ன நேர்ந்தாலும் சரியென்று துணிந்து, நம் கதா நாயகர் ஓலமிட்டழைத்தார். மிகக் கோபமாய் வாயில் வந்தபடி திட்டிக் கொண்டு துப்பாக்கியும் கையுமாய் எழுந்திருந்த துரை, உண்மையை அறிந்து, சங்கதிகளை ஆதியோடந்தம் கேட்டு, உடனே தம் குதிரையின் மேலேறிக் கொண்டு செஞ்சாலியினைச் சிறைச் சாலையை நோக்கி வேகமாய்ச் சென்றார். பின் நடந்ததைக் கூறியாயிற்று.

நிகழ்ந்த விஷயங்களெல்லாம் சென்னை 'ஹைகோர்ட்டாரு' க்குத் தெரிவிக்கப்பட்டன. அவர்கள், ஆதியோடந்தம் இக் 'கேசில்' நடந்த விசாரணைகளையும் குற்றச் சாட்டுக்களையும், தீர்ப்புக்களையும் முற்றும் ரத்துச் செய்து, தண்டனை யடைந்து சிறையி லிருப்பவர்களையெல்லாம் உடனே விட்டு விடும்படிக்கும் அடியிலிருந்து ஜில்லா 'கலெக்டரே' புனர் விசாரணை செய்யும்படிக்கும் கட்டளை யிட்டனர். இதற்குள் வீரமாகாளியைத் தூக்கிலிடும்படி உத்திரவளித்த நியாயாதிபதி, 'ரஜா' வெடுத்துக் கொண்டு இங்கிலாந்துக்குப் போய் விட்டார். வெட்கம் பொறுக்காது தாமே

அவ்வாறு சென்றனரென்றுசிலரும்,'சர்க்காரி' லிருந்து இரகசியமாய் வந்த உத்திரவினால் அங்ஙன்ஞ் சென்றாரென்றும், இனி இந்தியாவுக்குத் திரும்பிவராரென்றும் சிலரும் பேசிக் கொண்டார்கள். உண்மையெவ்வாறிருப்பினும், புனர் விசாரணையாகிக் 'கேசு' 'ஸெஷன்ஸ் கோற்டு' முன் வரும்பொழுது வேறொரு நீயாயாதிபதி அச்சபையில் வீற்றிருந்தார்.

இரண்டா முறை 'கேசு' விசாரணைக்கு வந்தபொழுது, நம்கதாநாயகர், சுதந்தர வயதுவராத ஒரு பெண்ணை அவளுக்குரிய காவலினின்றும் கெட்ட எண்ணத்தோடு கடத்தியதற்கும், கொள்ளைக்கு உடந்தையாயிருந்ததற்கும், அக்கொள்ளையில் இருவருக்குக் கடுங்காயமும், வீட்டில் நெருப்பிடலும் நேர்ந்ததற்கும் குற்றஞ் சாட்டப்பட்டார். வீரமாகாளியும் வடக்கத்தியானும் மட்டும் அவருடன் குற்றஞ் சாட்டப்பட்டார்கள். பொட்டைக் கறுப்பன் சம்பந்தம் வெளிப்பட்டும், அவனாயினும், அவன் கூட்டாளிகளில் எவனாயினும், கொள்ளைபோன சொத்தில் எதாயினும், அகப்படவேயில்லை. தன்னுடன், குற்றவாளிகள் கொட்டடியில் நிற்கும் நம்கதாநாயகரைப் பார்க்கப் பார்க்க, வீரமாகாளிக் குண்டான கோபத்துக்கும் மநக்கசப்புக்கும் எல்லையில்லை. புருஷசிம்மம் போன்ற அவர், கையில் விலங்குடன் அக்கொட்டடியில் கீழ்நோக்கி நிற்கும் பரிதாபத்தை ஒருவரும் தலைநிமிர்த்துப் பார்க்கத்துணியவில்லை. அவரைக் குற்றஞ் சாட்டித் தம் கடமையைச் செலுத்தும் உத்தியோகஸ்தர்களுங் கூட மனம்

நொந்து வருந்தினர். நியாயதிபதியே மட்டுக்கு மிஞ்சிய அநுதாபங் காட்டினுரெனின், பிறரைச் சொல்வதெவன்? பிரபலமான 'வக்கீல்'கள் நால்வர் அவருக்காகப் பணமின்றிப் பேசினர். அவர் நல்லொழுக்கத்தையும் உயர்குணத்தையும் பற்றிப் பல கனதனவான்கள் வந்து புகழ்ந்துரைத்தனர்; சென்னையி லிருந்து இரண்டு பெரிய துரைகள் வந்து அவரை மெய்ச்சிப் புகழ்ந்தனர். அவர் குற்றவாளியா என்று அவரை நியாயாதிபதி கேட்டபொழுது, அவர் தலையை நிமிர்க்காது, மிக்க தாழ்மையுடனும் விசனத்துடனும், "ஆம்; நான் குற்றவாளியே; என்னுடன் நிற்பவர் என்னுல் கெட்டவர்களே; என்னையே அவர்கள் குற்றத்துக்கும் தண்டிக்கப் பிரார்த்திக்கிறேன். ஆனுல் என் எதிரி செல்வத்தைக் கண்டு அழுக்காறுற்றேனும் பணவாசைப் பேய்பிடித்தேனும் நான் இவ்வாறு ஒழுகியதாக ஒருவரும் சொப்பனத்திலும் எண்ணவேண்டாம்" என்று கூறி நின்ருர். "இல்லை, துரைகளே! நானில்லாவிட்டால் மகாராசா ஒன்றுமே நினைத்திருக்க மாட்டார்கள். என்னுல் தான் இவ்வளவும் வந்தது. நானே அவர்களைத் தூண்டினேன். கொள்ளையிடுவது அவர்களுக்கு விருப்பமுமில்லை, அவர்கள் ஒப்பவுமில்லை. வெட்டுக் காயத்துக்கும் நெருப்பு வைத்ததற்கும் நானே உத்தரவாதி. அவர்களுக்கு இப்படி நடக்குமென்று தெரியவே தெரியாது. இப்படியொன்றும் நடத்தக்கூடாதென்று கண்டிப்பாய்க்கட்டளையிட்டிருந்தார்கள். அவர்களைக் கெடுத்ததெல்லாம் நானே. என்னைத்தான் தண்டிக்க வேண்டும்; அவர்கள் ஒரு

குற்றமுமே செய்யவில்லை” என்றான் வீரமாகாளி. 'வீர சங்கிலித்தேவர் வேலையாட்கள் நால்வர் கொள்ளையிற் சம்மந்தப்பட்டவர்களென்று ஏன் முன்பு கூறினாய்' என்று கேட்டதற்கு, அதிற் சிறிதுமே கலக்காத நால் வரை அவர் அநியாயமாய்ச் சேர்த்துப் பிடித்தடைத்த தால், தானும் பழிக்குப் பழி வாங்கும் பொருட்டு அவர் ஆட்கள் நால்வரைப் பிடித்தடைக்கும்படி செய் ததாகச் சொன்னான். வடக்கத்தியான் இப்பொழுதும் வாய் திறக்கவேயில்லை. அவன் ஊர் பெயர் முதலிய வற்றையும் முன்னொரு முறை மூன்று வருஷம் சிறை யிலிருந்ததையும் பற்றிச்சென்னை 'நகர் .போலீசுத்தி யோகஸ்தர்' ஒருவர் கூறியதையே முன் விசாரணையிற் போல ஒப்புக் கொண்டார்கள். நம் கதா நாயகர் அவ் வாறு கூறினும், அவர் 'வக்கீல்கள்' அவர் குற்றத்தை இலகுப்படுத்தித் தண்டனையைக் குறைக்குமாறு சில சாக்ஷிகளை விசாரித்தார்கள். சிவகாமி, 'சர்க்கார்' பக் கத்துச் சாக்ஷியாக, அதாவது நம் கதாநாயகரைக் குற்ற வாளியாக ருசுப்படுத்தும் சாக்ஷியாக விசாரிக்கப்பட் டாள்! அவள் படியேறிப் பிரமாணஞ் செய்தவுடன், அவள் திவ்ய அழகையும், மாசுபடிந்து வாடிய மேனி யையும், இராப்பகல் அழுதலினால் சிவந்து வீங்கிய கண்களையும், பயத்தினாலும் சோகத்தினாலும் அவள் மெல்லிய உதடுகளும் கால்கைகளும் பதறுவதையும், தானாகப் பெருகும் கண்ணீரை அடக்கிக்கொள்ள அவள் படும் கஷ்டத்தையும், அந்த நியாய சபையி லுள்ளார் யாவரும் கண்டு பரிதபித்தனர். நியாயாதி பதி ஒரு நாற்காலி கொடுத்து அவளை யுட்கார்ந்து

கொள்ளும்படி சொன்னார். நம் கதாநாயகர் அவளைத் தலையெடுத்துப் பார்க்கவேயில்லை; அவளும் அவர் நிற்குமிடத்தை நோக்க அஞ்சினாள். முதலிற் சிறிது பயத்தாலும் பதற்றத்தாலும் அவள் வாய்குழறி மெதுவாய்ப் பேசினாள்; ஆனால் வர வரப் பரபரப்பும், மன ஏக்கத்தாலுண்டான தைரியமும் மேலிட்டு, மண்ணையும் கல்லையும் உருக்கவல்ல குரலில், நியாயாதிபதி, 'வக்கில்'கள் முதலிய எல்லோரும் சித்திரப் பதுமைகள்போல் பிரமித்துக் கேட்டுக்கொண்டிருக்க, அவராறியாமலே நம் கதாநாயகர் மநத்தில் ஒருவித மகிழ்ச்சியும் கர்வமும் உண்டாக, கேட்ட கேள்விக்குப் பதிலுரைக்கவந்த சாக்ஷியே தான் என்பதைத் தானும் மறந்து பிறரையும் மறக்கச்செய்து, கடல்மடை திறந்தாற்போல் பிரசங்கஞ் செய்யலானாள்;—"தருமதுரைகளே! நானோ ஒரு ஏழை மறப்பெண், இந்தப் பெரிய நியாயசபை நடுவே வருதற்கும் பேசுதற்கும், சாதி, பால், பயிற்சி, பருவம் முதலிய எல்லா விதத்தானும் தகுதியற்றவள். ஆயினும் ஈசன் திருவருள் இங்கென்னைக் கொண்டுவந்து நிறுத்தியிருக்கின்றது. இச்சபையார் என்னைச் சாக்ஷியாகவே அழைத்து இப்பொழுதென்னைச் சாக்ஷியாகவே பாவிக்கின்றனர். ஆனால் என்மநச் சாக்ஷி முன்னிலையில் யானொருத்தியே இந்தக் 'கேசில்' குற்றவாளி. தருமதுரைகளே! நன்கு ஆலோசியுங்கள்; யானில்லாவிடின் இக்குற்றம் நேர்ந்திருக்குமோ? யானும் என்னுதரும் குழந்தைப் பருவமுதல் தோழர்கள். இப்பாழான பாவியுடலை மட்

டும் எனக்கு என் தாய் தந்தையர் அளித்தனரே யன்றி, பகுத்தறிவிற் சிறந்த மானிட ஜந்மத்தைக் குறிக்கும் மற்ற யாவற்றிற்கும் என்னுதரே தாயும் தந்தையும். நாயனுர் வாக்கு உண்மையாயின், இப்பொழுது நான் பெய்யென்ருல் மழை பெய்யவேண்டும்: ஏனெனின், எனக்கு நன்கு புத்திதெரிந்த நாள் முதல், அவரையே தெய்வமாகப் பாவித்து என் மநத்தில் நான் பூஜயதை செய்துவருகிறேன். அவர் மாட்டு எனக்குள்ள காதலுக்கும் விசுவாசத்துக்கும் பக்திக்கும் இவ்வுல கில் எங்குமே இணைகிடையாதென்று நான் நிச்சய மாகக் கூறுவேன். காதலின்னதென்று அறியாப் பருவத்திலேயே அவர் அழகும் அன்பும் நடவடிக்கை களும் என் மநத்தைச் சூறையாடிவிட்டன. என் காதலைக் கண்டே அவரும் என்மேற் காதலானுர். என்னிலும் அதிக அழகு வாய்ந்தவர்களும், என்னி லும் அதிகமாகக் கல்விப் பயிற்சி முதலியன வாய்ந்த வர்களும் அவருக்கு எத்தனையோ பேர் கிடைத்திருப் பார்கள்; ஆனுல் காதல் விஷயத்தில் மட்டும் என்னி லும் மிக்கவர் ஒருபொழுதுமே கிடைத்திரார். இந் தப் பாழான என் காதலே அவரை யிக்கோலம் கண் டது. தருமதுரைகளே! அவரது அரிய குணங்களை நீங்கள் ஒருவரும் அறியீர்கள். அவரளவு மநநிறை வும், சாந்தமும், பொறுமையும், உதாரமும், நுண் ணறிவும், உறுதிப்பாடும் உள்ளார் துர்லபமே. ஆக வே, ஜமீன் போய்விட்டதால் அவர் சிறிதுமே மநங்க வன்றிருக்கமாட்டார்; அதை ஒரு துரும்பாக நினைக்க வல்லவர். ஜமீன் அவருக்குக் கிடையாதது, ஜமீன்

குடிகளின் துர் அதிர்ஷ்டமென்று கூறவேண்டுமே யன்றி அவர் துர்அதிஷ்டமென்று கூறுதல் பொருந் தாது. தமக்கு வேண்டிய பொருளை அவர் எளிதிற் சம்பாதித்துக்கொள்ள வல்லவரோ. அப்படியே அவ ருக்கு டிப்டிகலெக்டர் உத்தியோகமும் ஆயிற்று. ஆனால் பாவியேன் துர் அதிர்ஷ்டத்தால் முதலில் ஜமீன் தவறியதுபோல், பின்பும் எல்லாம் கோண லாயிற்று. அந்தப்பாவி என்னைக் கல்யாணஞ் செய்து கொள்ள விரும்ப, என் மூடத் தாய்தந்தையரும் பண வாசையால் அதற்கிசைந்தனர். நான் உண்மையுள்ள மகளெனின், அவர்கள் நிச்சயித்த மணத்துக்குடம்பட் டிருக்கவேண்டும்; என் காதலருக்கு உண்மையுள்ளவ ளெனின், அப்பொழுதே உயிரைத் துறந்திருக்க வேண்டும்; இரண்டுமில்லாத பாவியாதலின், என் சுக த்தையே பெரிதெனக்கருதி என்னுயகரைத் தீவழியிற் புகுத்திக் கெடுத்தேன். என் முறையீடுகளினாலும் சாகசத்தினாலும் அவர் மதிமயங்கித் தம் நிறையழிந் தார். இல்லாவிடின், இவ்வுலகெலாம் கிடைப்பதா யிருப்பினும் அவர் ஒருபொழுதும் தீச்செயலொன்றை நினைந்திருக்கவே மாட்டார். நானே கதவைத்திறந்து, போலிக்கூச்சலிட்டுவிட்டு, அவரிடம் வெகு ஆவலாய்ச் சென்றேன்; தலைநோவென்று பொய்யுரைத்து அவ ரிடம் செல்லுமாறு வீட்டிற்குத் திரும்பியதும் நானே; என்னிஷ்ட மில்லாவிடின் எவராலும் என்னைக் கடத் திக்கொண்டு போயிருக்கமுடியாது. ஆதலின், நானே அவரைக் கெடுத்தவள்; என்பொருட்டே இக்கொள்ளை நடந்ததும், அவருக்கு இவ்விதத் துன்பங்கள் நேர்ந்த

தும். நாஜொருத்தி யில்லாவிடின், அவர் இதற்கு முன் நல்லபாக்கியவதி ஒருத்தியை மணந்துகொண்டு, கிருஷ்ணு ஜில்லாவில் டிப்டி கலெக்டரா யிருந்திருப் பார், ஆதலின், தருமதுரைகளே! பண்டம் ஒரு பக்கம் பழியொரு பக்கமாகத் தீர்ப்புச் செய்யாது, நன்கு ஆலோசித்து என்னையே தண்டியுங்கள். அல் லது அவரைத் தண்டிப்பதாயிருப்பின், அவரளவு என்னையும் தண்டித்து, என்னையும் அவருடன் சிறைச் சாலைக் கனுப்புங்கள். தருமதுரைகளே! ஒரு கண மேனும் என்னுதரை யான் பிரிந்திருக்கச் சகியேன். எனக்கு நேர்ந்த கதி தங்கள் மகளுக்கு நேர்ந்தால் எப பாடு படுவாளென்பதை நினைந்து, என்மேற் கிருபை செய்யுங்கள். அங்ஙனமின்றி, என்னுதரைச் சிறை யில் வைத்து, என்னை யென் கொடிய தாய் தந்தை யரிடம் அனுப்பி, மறுபடியும் அந்தப்பாவி முகத்தைப் பார்க்கச் செய்வீர்களாயின், நான் தற்கொலை செய்து கொள்வது நிச்சயம்; அப்பாவம் உங்களையே சூழும். தருமதுரைகளே! இவ்வளவு யௌவநத்திலேயே இவ்வளவு துர் அதிர்ஷ்டத்துக்கும் உள்ளாகி, ஆருயிர்க் காதலரையும் இக்கோலங்கண்ட இந்தப் பாவியின்மேற் சிறிது கருணை செய்யுங்கள்; கரு ணைசெய்யுங்கள்; கடவுள் உங்களுக்குக் கைமாறளிப் பார்" என்று கூறி முடித்தாள்.

அவள் பேசி முடிந்தபின் சில நிமிஷங்களுக்கு நியாய சபை முழுதும் நிச்சப்தமாயிருந்தது; யாவரும் இமை கொட்டாது, இன்னும் ஒருகால் பேச வாய்

திறப்பாளோ வென்று எதிர்பார்த்துக் கொண்டிருந் தனர். பின்பு நியாயாதிபதி பெருமூச் செறிந்து விட்டு, அடுத்த சாக்ஷியைக் கூப்பிடச்சொன்னார். இரண்டாவது நாள் சாக்ஷிகளெல்லாம் விசாரித்து முடிந்தவுடன், நம் கதாநாயகருக்காக 'வக்கீல்'கள் வெகுநேரம் வாதாடினர். கடைசியில் நியாயாதிபதி 'அசேஷர்க' ளுக்குக் 'கேசின்' நியாயத்தையும் தாரதம் மியத்தையும் எடுத்துரைத்து, அவர்கள் அபிப்பிராயத் தை வினவ, அவர்கள் சிறிதுநேரம் ஆலோசித்தபின் னர், முதற்கைதியாகிய நம் கதாநாயகர் 'மைநரை'க் கடத்திய குற்றத்துக்கும் கொள்ளைக்கு உடந்தையா யிருந்த குற்றத்துக்குமே பாத்தியதைப் பட்டவரென் றும், மற்ற இருவரும் எல்லாக் குற்றங்களுக்கு முரிய வரென்றும், முதற்கைதி நியாயாதிபதியின் இரக்கத் துக்கு நற்பாத்திரரென்றும் அபிப்பிராயம் கொடுத் தார்கள்.

பின்பு நியாயாதிபதி நம் கதாநாயகரைப் பார்த் துப் பின்வருமாறு பேசினார்:—"கொட்டடியில் நிற்கும் கைதியே! நீ சட்டமுறைப்படி, கொள்ளையில் கடுங் காயம் நேர்ந்ததற்கும் நெருப்பிட்டதற்கும் பாத்தியப் பட்டவனேயாயினும், நானும் 'அசேஷர்' களைப் போ லவே அபிப்பிராயப் படுகிறேன். விரோதத்தாலும் பணவாசையாலு மின்றி, உன் காதல் வயப்பட்டு மதி மயங்கி நீ விரும்பியவளைக் கடத்துதற் பொருட்டு நீ கொள்ளைக்கு உடன்பட்டாயென்று நீ கூறியதையும், நான் முற்றிலும் நம்புகிறேன். இக்காதல் வெகு வரு

"ஷங்களாக உன் மநத்தில் வேரூன்றி யிருந்திருக்கின் றது; நீயோ யௌவன புருஷன்; சொற்பகாலத்துக்கு முன் வரையும் மிக்க உந்நதபதவியி லிருந்தவன்; திடீ ரென்று நீ யுன் ஸ்தானத்தை யிழந்ததுமன்றி உன் காதலியையும் இழக்க நேர்ந்தது மிகப் பரிதபிக்கத் தக்கதே. சாதாரண மனிதர்களால் எளிதில் பொறுத் தற் கரிதென்றே சொல்லலாம். அன்றியும், கொள்ளை முதலிய குற்றங்களொன்றுமே நடவாமல், நீ யுன்காத லியை அடைய உன்னாலியன்றமட்டும் முயன்று, அது முடியாதென்றறிந்த பின்னரே அதற்கிசைக் திருக்கிறாயென்று தெரியவருகின்றது. ஆயினும் நீ கேவலம் மூடனல்ல; உன்னுடன் நிற்பவரும் நீயும் ஒரு சாதியினராயினும், உனக்கும் அவர்களுக்கும் எவ்வள வோ வித்தியாச முண்டு. நீ நன்று படித்துத் தேறி யவன்; நன்மை தீமை யறிந்தவன்; ஒழுக்கத்தின் தரா தரம் உனக்கு நன்கு தெரிந்திருத்தல் வேண்டும். யௌவன புருஷர்கள், காதலால் அநேக தீச்செயல் கள் நற்செயல்களாய் விடும் என்று நம்புவதுண்டு; காதலிலும், யுத்தத்திலும், நியாயம் அநியாயமென்பது கிடையாதென்று பழமொழி யொன்றுண்டு. அவ் வாறு நம்புபவர்களுங் கூட, நீ செய்தவற்றைப்போன்ற செய்கைகள் சரியென்றுரையார். ஒருவன் தன் காதற் பொருட்டு மற்றொருவன் சொத்தைப் பறித்தலும், எதிர்த்தாரை யடித்துக் காயப்படுத்தலும், வீட்டில் நெருப்பிடுதலும், நியாயமானவை யென்று எவருமே கூறார். இவ்வளவு படித்துத் தேர்ந்த நீ, உன் படிப்

"பை யெல்லாம் எட்டிச் சுரைக்காயாக்கி விட்டு, இவ்வாறு ஒழுகியது மிக விசனிக்கத்தக்கதே. உன் செய்கையால் சாதாரண ஜனங்களுக்குப் படிப்பிலுள்ள நம்பிக்கையும் பக்தியும் கூடப் போய்விடும். மூடர்களிலும் கற்றறிந்தவர் கிரமந்தவறாது யாவருக்கும் முன்மாதிரியாக ஒழுகவேண்டுவது எவ்வளவு ஆவசியக மென்பதை நீ சிறிதுமே நினைத்திலேபோலத் தோன்றுகின்றது. இவ்வுலகம், ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் மனோபீஷ்டத்தை நிறைவேற்றிக் கொள்வதற்கேற்ற பண்டசாலையன் றென்பதையும்; அவ்வண்ணம் நிறைவேற்றிக் கொள்ளக் கோடிப்பெயர்களில் ஒருவனுக்குக்கூட முழுவதும் வாய்க்காதது மன்றி, பெரும்பாலார் எத்தனையோ சௌகரியங்களும், சுகங்களும், அத்தியாவசியக மென்று நினைக்கும் பொருள்களும், உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாத போஜன பானாதிகளும் கூடக் கிட்டாது தவித்து வருத்தமுற்று, உள்ளதில் திருப்தியடைந்து, பொறுமையாலும் தற்பயிற்சியினலும் உயிர்தரித்து வாழவேண்டிய கடுமையானபரிசோதனைச்சாலை இது என்பதையும்; ஒவ்வொருவனும் தனக்குரியதென்று நினைப்பதை யெல்லாம் தானே நேர்வழியினலதல் தீ வழியினலதல் எடுத்துக்கொள்ளவும், தனக்கு நேர்ந்த குறை தகாததென்று தான் நினைத்தால் அதனை யதைத் தன் மனப்படி எங்ஙனமாயினும் சீர்திருத்திக் கொள்ளவும், இவ்விதச் செய்கைகளில் தன்னயமே முதற்காரியமென்று கருதவும் தொடங்கிவிடின், இவ்வுலகம், முற்றும் நாகரிகமற்றுப் புலிகள் வாழும் காட்டிலும் கேடாய் விடுமென்பதையும், நீ

படித்திருந்தும் கருதிலை யென்பது தோன்றுகின்றது. ஆயினும் உன் கல்விப்பயிற்சியும், இதுகாறுமுள்ள நல்லொழுக்கமும் நற்சகவாசமும், முற்றுமே பாழாய்ப் போகாமல், கடைசியிலேனும் சிறிது கையுதவி, அழுக்கினுள்ள மாணிக்கத்தைப் போன்ற இரண்டாவது கைதி, உன் காதற் சுகத்தைத் தன் உயிரினும் பெரிதாகப் பாவித்து, அதைக் கெடுப்பதினும் தன்னுயிரையே விட்டுவிடத் துணிந்தபொழுது, நீயாகவே வெளிப்பட்டு அவனைக் காப்பாற்றி உனக்குரிய தண்டனைக்கு அஞ்சாது, அதைத் தக்கதெனத் தேடும்படி செய்தது, மிகக் கொண்டாடத் தக்கதே. உன் ஒழுக்கத்தையும் குணத்தையும் பற்றி எத்தனையோ பெரிய கனவான்கள் வந்து புகழ்ந்து கூறியிருக்கின்றனர்; உன் காதலி கூறியமொழிகளும், இரண்டாவது கைதி உன்மேற் கொண்டு காட்டிய பக்தி விசுவாசமும் உன் உயர்குணத்தை நன்கு விளக்குகின்றன. உன் 'வக்கீல்'களும் உன் பொருட்டு அதிசாமர்த்தியமாகவும் உருக்கமாகவும்மன்றாடியிருக்கிறார்கள். இக்குற்றங்களைச் செய்ததில் உன் உள்ளக் கருத்தும், உன் இளமையும், நீ இதுவரையுமிருந்த பதவியும், நான் நன்று கவனிக்கத்தக்கனவேயாயினும், உன்பொருட்டு நான மிக்க பரிதாபத்தை யுடையவனாயினும, என் ஸ்தானத்தால் நான் என் மனச்சாக்ஷிக்கும், உனக்கும், உலகத்துக்கும், கடவுளுக்கும் கடமைப்பட்டிருக்கிறேன். அக்கடமையை நான் செலுத்தவேண்டும்" என்று கூறி, அவர்மேல் ருசுவான இரண்டு குற்றங்களுக்குமாக நம் கதாநாயகருக்கு ஐந்து வருஷம் சிறைவிதித்தார். மற்ற இரண்டு கைதி

களும் 'பழைய ஆசாமி' களாதலின், அவர்களில் ஒவ்வொருவனுக்கும் பதினறுவருஷம் சிறையும், அதில் மூன்றுமாதம் இருட்டறைச் சிறையும் விதித்தார்.

தமக்கு விதிக்கப்பட்ட தண்டனையைக் கேட்டவுடன், நம் கதாநாயகர் சிறிதுநேரம் கீழ்நோக்கியே நின்று, பின்பு தம் கண்ணீரைத்துடைத்து விசனத்தை யடக்கிக்கொண்டு, நியாயாதிபதியை நோக்கி, "தருமதுரைகளே! என்னை யிவ்வளவு கருணையுடன் நடத்தியதற்கு நான் என் மநப்பூர்வமாய் வந்தனமளிக்கிறேன். நான் சிறைச்சாலை சென்றபின், என் காதலி இங்கே கூறியபடி நடத்திவிடுவாள். அவளுக்கு மானச்சேதமேனும் உயிர்ச்சேதமேனும் வராதபடி ஓர் ஏற்பாடுசெய்யத் தங்களை மிகவும் தாழ்மையாய்ப் பிரார்த்திக்கிறேன்" என்று கூறினர். இதற்கு நியாயாதிபதி வாய்திறந்து ஒன்றுஞ் சொல்லவில்லையாயினும், அவர் முகம், அவர் மநத்திலும் அப்படிப்பட்ட எண்ணமிருப்பதைத் தெரிவித்தது. உடனே காவலாளர் கைதிகளைச் சிறைச்சாலைக்கு அழைத்துச் சென்றனர்.



உ

# விஜயமார்த்தாண்டம்.

## கற்புப்பத்து.



"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்."—திருக்குறள்.

## முதலாவது அதிகாரம்.



### ஆடுபிழைத்தால் ஆட்டுமயிர்தான் தருவார் யார்?



நியாய சபைக்கு வெளியே, ஒரு மரத்தடியிலே, தெய்வத்தைப் பிரார்த்தித்துக்கொண்டு பதை பதைக்கின்ற நெஞ்சத்துடன் சிவகாமி யுட்கார்ந்திருந்தாள்; சிறிது தூரத்தில் ஒரு கல்லின்மேற் சுந்தரமும் துணையாக இருந் தான். வழியே செல்பவர் அவளைச் சுட்டிக் காட்டி ஒருவரோடொருவர் மெதுவாய்ப்பேசிப் பரிதபித்துக்கொண்டு சென்றனர். அவளது கரை கடந்த சோகத்தினூடே ஒருவரும் வாதாடியவளைத் துன்புறுத்தத் துணியவில்லை; வழியே செல்லும் சில கோழைமனக் கிழவிகளும் வேறு சிலரும் மட்டும்

"ஐயோ! பாவம்! சுவாமி உனக்கிரங்குவார்; அழாதே அம்மா, அழாதே" என்று ஆறுதலாகப் பேசிக் கொண்டே போயினர். சுந்தரம், 'கேசு' முடிவையறியும்பொருட்டு, அடிக்கடி நியாய சபைக்குப் போவதும் வருவதுமாக இருந்தான். இவ்வாறு ஒரு முறை போய் வந்தபின், அவனும் நம்கதாநாயகியும் ஒருவேளை தங்கள் எஜமானரைத் தண்டித்துவிட்டால் என்ன செய்வதென்று பேசிக்கொண்டிருக்கையில், நியாயாதிபதி தம் குதிரைவண்டியிற் சென்றார். அவரைக் கண்டவுடன் நியாயசபையை நோக்கவே, சபை கலைந்து எல்லோரும் வெளியே வந்துகொண்டிருந்தனர். உடனே சுந்தரம் ஓடிப்போய் விசாரிக்கலானான். இதனிடையே, நியாய சபையிலிருந்துவந்த ஒரு சேவகன், சிவகாமியைப் பார்த்து, "அம்மா! உன் விதி யிப்படியாயிற்றே; ஐந்து வருஷம் தண்டித்துவிட்டார்களே" என்று திடீரென்று கூற, அவள் மரத்தின்மேற் சாய்ந்தபடியே மூர்ச்சையாய்விட்டாள்; இதைக்கண்ட சேவகன் கூக்குரலிட, 'வக்கீல்' கள் சிலரும், அவள் தந்தை வேலாயுதத்தேவரும், சுந்தரமும் வந்துசேர்ந்து, அவளைத் தெளிவுறுத்தற்கேற்ற சிகிச்சைகளைச் செய்வாராயினர். நல்லவேளை, அவள் மூர்ச்சை தெளியுமுன், கைதிகள் பிறிதோர் வழியாகச் சிறைச்சாலைபோய்ச் சேர்ந்துவிட்டபடியால், அவள் விரும்பியபடி அப்பொழுது தன் காதலரைக்காண முடியவில்லை. அவளுற்ற துயரத்தையும், வடித்த கண்ணீரையும், பிரலாபித்தழுததையும் கண்டார் கேட்டார் யாவரும் கண்ணீர் சொரிந்து பரிதபித்தனர்.

பொழுது செல்லச் செல்லக் கூட்டம் அதிகமாவதைக் கண்டு, நம்கதாநாயகரது முக்கிய நண்பராகிய 'வக்கீல்' ஒருவர், அவளையும், வேலாயுதத் தேவரையும், சுந்தரத்தையும் தம் வண்டியிலேற்றிக் கொண்டு, தம் வீட்டுக்குச் சென்றார். செல்லும் வழியிலே பின் வரும் சம்பாஷணை நடந்தது.

வக்கீல்: இனி உம்முடைய உத்தேச மென்ன, தேவரே? உம்மகளை யென்ன செய்யப் போகிறீர்?

வேலா: என் உத்தேசந்தான் முன்னமே தெரிந்திருக்கிறதே; அந்த மெத்தப்படித்த அம்மாளையன்றோ கேட்க வேண்டும்?

சிவகாமி: நான் பிச்சை யெடுத்தேனும் பிழைப்பேன்; அல்லது பட்டினியாய்க் கிடந்தேனும் சாவேன் புலிமலையூருக்கு மட்டும் ஒரு நிமிஷமும் வர மாட்டேன்.

வேலா: ஏன அம்மாளு? உன்னை நாங்கள் கடித்துத் தின்று விடுவோமோ? இவ்வளவு பாடுபட்டதும் போதாது போலிருக்கிறதே. இன்னும் புத்திவரவில்லையா உனக்கு?

இதற்குள் வீரசங்கிலித் தேவரால் அனுப்பப்பட்ட போ. பப்பையரும் ஓடிவந்து வண்டியிலேறிக் கொண்டார். அவரைக் கண்டவுடன்,

வேலா: கேட்டீர்களா, ஐயா, இந்த மூதி சொல்கிறதை? பிச்சை யெடுப்பாளாம், சாவாளாம், புலி

யலைக்கு வரமாட்டாளாம். இப்படி ஒரு பிள்ளை இருந்தென்ன, இறந்தென்ன ?

போ. சு. ஏன் அம்மா, சிவகாமி ! நீ நல்ல பெண்ணாயிற்றே. அவ்வளவு உன் பெற்றார் மேல் சூஸ்திரம் வரும்படி இப்பொழுது என்ன நடந்து விட்டது? உனக்கு எது நன்மை யென்று அவர்கள் நினைத்தார்களோ அதையே அவர்கள் தேடினார்கள். நீ ஆயிரங் காலததுப் பயிர், அவர்கள் பாடு இன்றோ, நாளையோ. உன் நன்மையையின்றித் தங்களுக்கேதாயினும் நன்மை வரக்கூடு மென்று அவர்கள் பிரயத்தனைப பட்டார்கள் ? நடந்தது நடந்தாய் விட்டது, இனி யொருவராலும் மாற்றமுடியாது. நீ புததிசாலியாயிருநதும இன்னும் இபபடிப் பேசுதல் சிறிதும் நனறாயிலலை.

வேலா: அவளென்ன செய்வாள், ஐயா, அவள் பேரில் குறறமே யில்லை, சொல்வார் சொனனால் கேட்பாருக்கு மதியில்லையா என்று நினைத்துப் பாராமே, ஊரெலலாம் நாடெல்லாம் சிரிக்க அவளைப படிக்க விட்டேனே, என பேரிலே தான் குற்றம. இன்னொரு மறப்பிள்ளையானால், இப்படிப் போகுமா, இவ்வளவு முன்னுக்கு வருமா, இப்படி யென்னையே தட்டிப் பேசுமா ? ட டு, மனமே, படு, உனக்கிந்தப் புத்தி வேண்டியதுதான்.

வக்கீல்: அப்படிக் கசப்பாய்ப் பேசாதேயும் தேவரே; பேயானாலும் தாய்; நீரானாலும் மோர் என்பார்களே. நீரே யிப்படிப் பேசலாமா ? உலகத்திலே ஒவ்

வொருவருக்கு ஒவ்வொரு மாதிரியாகத் தோன்றும். இப்பொழுது உம்முடைய மகள் சொல்வது, உம்மைத் துன்பப்படுத்த வேண்டு மென்று கருதியா? ஏதோ அவள் புத்திக்கும் மனத்துக்கும் சரியென்று படுவ தையே சொல்கிறாள். சுகமோ, துக்கமோ, அநுப விக்க வேண்டியவள் அவளே; சுப்பையர் சொன்னபடி உங்கள் பாடு இன்றோ நாளையோ. அவள் மனத்துக்கு முற்றும் விரோதமானபடி நீங்கள் செய்துவிட்டுப் போய் விட்டால், அவளன்றோ தன் வாழ் நாள் முழு தும் கஷ்டப்படுவாள்.

வேலா: ஐயா! நீங்கள் படித்தவர்க ளெல்லாம் இப்படித்தானோ? அவர், செயிலுக்குப் போனவர், திரும்பிவந்து பேசுகிறது போலிருக்கிறதே உங்கள் பேச்சு. நல்லது; நல்லது; அவரவருக்குப் பட்டா லன்றோ தெரியும் அந்த வருத்தம்?

போ. சு: நீங்கள் சொல்வது சரிதான், ஐயரவர் களே; ஆனால் ஸ்திரீகளுக்கு ஒருபொழுதுமே தர்ம சாஸ்திரப்படி சுவாதீனம் கிடையாது: அவர்கள் யௌ வன தசையில் மாதா பிதாக்களுக்கு உட்பட்டவர்கள்; கௌமார தசையில் நாயகனுக் குட்பட்டவர்கள்; பின்பு தங்கள் குமாரர்களுக்கே உட்பட்டவர்கள்; ஆகை யினாலே ஒரு ஸ்திரீ சுயேச்சையாய் வாழ்வதாயிருந் தால் சாஸ்திரமும் ஒப்பாது, ஊரும் ஒப்பாது. அப்படியிருக்க, இவ்வளவு சௌந்தரியமும் யௌவன மும் பொருந்திய ஒரு பெண், தன் தாய்தந்தயரை விட் டுத் தனியாயிருப்ப தெப்படி? முதலில் எப்படி ஜீவ

னம் செய்வாள்? ஒருவேளை அதற்குக் குறையின்றி யாராவது உதவி செய்தாலும், அவள் தனித்தேனும், அல்லது சுந்தர பாண்டியனைப்போல் ஒரு வேலைக்கார னோடேனும் இருந்தால் உலகம் ஒப்புமா? இல்லை, தங் களைப் போன்ற ஒரு பெரிய மனுஷர் வீட்டிலே தங்கள் தங்கைமாரோடொருத்தியாய் வாழ்ந்து வருவதாயிருந் தாலும் தான் உலகம் ஒப்புமா? உங்களுக்குத் தெரியாத சங்கதியில்லையே; உடம்புக்குப் பால் குடியாவிட்டா லும் ஊருக்குப் பால் குடிக்க வேண்டுமே, பனைமரத் தின் கீழிருந்து பாலையே குடித்தாலும் கள்ளைக் குடித் ததாகவன்றோ உலகம் மதிக்கும்? ஒருவருமே இல்லா விடின், ஏதோ ஒரு படியாயிருக்கும்; பெற்றதாயும் தகப்பனுமிருக்க, ஒரு பெண் அவர்களைப் பிரிந்து வேறா யிருப்பதெப்படி? நாமெல்லாம் இன்னும் முற் றிலும் வெள்ளைக்காரர் ஆகிவிட வில்லையே.

சிவகாமி: என்னை எவர் என்ன சொன்னாலுமே, நான் இனிப் புலிமலையூரிலே அடியெடுத்து வைக்கமாட் டேன். உலக மதிப்புப் பெரிதே; ஆயினும் எனக்கு அந்த அளவு பெரிதல்ல. எவர் வீட்டிலாயினும் தூப் புக்காரி வேலை செய்தேனும் பிழைப்பேன்.

சேலா: அவ்வளவு வைராக்கியமா உனக்கு? நல் லது.

போ. சு.: ஏனம்மா இவ்வளவு பிடிவாதம்? என்ன, உன் சம்மதமின்றி உன்னை யெதாவது செய்து விடுவோ மென்று பயப்படுகிறாயா? நீ யென்ன பச்

சைக் குழந்தை யில்லையே, கையிலே வாழைப்பழத்தைக் கொடுத்துத் தாலி கட்டுவதற்கு? அல்லது தூங்கும்பொழுது தாலியைக் கட்டி விடுவார்களோ! இதெல்லாம் என்ன வீண் பேச்சு. முதலில் நீ காணாமல் போனபொழுதும், பின்பு நீ கொலை யுண்டதாகக் கேட்ட பொழுதும், உன் தாயும் தகப்பனும் பட்ட துயரத்தை நீ பார்த்திருந்தால் இப்பொழுதிப்படிப் பேச மாட்டாய். இதனால்தான் பெற்ற மனம் புற்று; பிள்ளை மனம் கல்லென்று சொல்கிறார்கள். உனக்கு வேண்டுமானால், உன் சம்மதமின்றி உன்னை யொன்றுமே செய்கிறதில்லையென்று வாக்குக் கொடுக்கிறோம்; அப்படியொன்றும் செய்ய முடியாதென்பது உனக்கே தெரிந்திருக்கவேண்டும். நீ யென்னவோ இப்பொழுது, ஸ்மசான வைராக்கியம், புராண வைராக்கியங்களில் சிலர் பேசுவதுபோற் பேசுகிறாய்; இளங்கன்று பயமறியாது; உனக்கு உலகமே தெரியாது; இந்தச் செஞ்சாலியிலேப் பட்டணத்திலே உன்னாலே ஒரு நாள், ஒரு நிமிஷம், ஒரு விநாடி தனியே இருக்க முடியுமா? வெயிலிலே போனாலன்றோ நிழலின தருமை தெரியும். உன் இஷ்டப்படி நீ யிருக்கக்கூடாதென்றாவது, எங்களிஷ்டப்படி உன்னைப் பலவந்தப் படுத்தி ஏதாவது செய்து விட வேண்டு மென்றாவது, நாங்கள் இவ்வளவு வருந்தி யழைக்க வில்லை. நீ யென்ன நினைத்தாலுமே சொன்னாலுமே, உன் மேலுள்ள வாஞ்சையாவது உன் நன்மையை நாடும் கருத்தாவது உன் தாய் தந்தையருக்கும், என் போல்வருக்கும் ஒரு நாளும்

மாறுது. நீ பெண்ணுயிற்றே, மெல்லிய பூவுக்குச் சம மானவளாயிற்றே, உலக சுபாவந் தெரியாத பேதையா யிற்றே, இட்பட்டணத்திலே தனித்திருந்தால் ஒரு நிமி ஷத்திற் கேடுற்று விடுவாயே, ஒன்றுமேயின்றி உன் கற்புக்குப் பழுதாக ஒரு பொய் வார்த்தை பிறந்துவிடி னும், அது தலைமுறை தலைமுறையாக விடாது தொடர் ந்து அவமானத்தை யுண்டுபண்ணுமே, என்றே அஞ்சு கிறோம். நீயே சிறிது கோபமும் விசனமும் தணிந்த பின் ஆலோசித்துப் பார். சாக்ஷாத் ஸ்ரீ லக்ஷ்மியே அவதாரஞ் செய்து, திருஷ்டியின் விஷம்போற் கற் பைக் காத்து வந்த சீதாப்பிராட்டியாரைக்கூட, இவ் வுலகத்திலே ஒரு வண்ணான் பழித்ததாகச் சொல்லு வார்கள். அவசர மொன்றுமில்லை; நீயே நன்று ஆலோசித்துப் பின்பு நிச்சயஞ் செய்.

வேலா: அது மறப்பிறவி, ஐயா, மறப்பிறவி: பிடித்தாற் குரங்குப்பிடி, பேய்ப்பிடிதான். தகப் பனே யென்று எள்ளளவாவது மட்டு மரியாதை யிருக்கிறதா பாருங்களேன்; பெற்று வளர்த்த தகப்பன் துரும்பாகவும் நேற்று வந்த மாப்பிள்ளை மலையாகவு மன்றோ தோன்றுகிறது.

டோ. சு: தேவரவர்களே! அப்படிப் பேசாதேயுங் கள். இப்பொழுது அவள் துக்கத்திலாழ்ந்திருக்கிறாள்; அதனாலே தன் வயமழிந்து பேசுகிறாள். உங்கள் விஷயத்திலே அவள் சிறிதும் அவமரியாதையாக நடக்கவேமாட்டாள்; அப்படியே அவள் அறியாமை

யால் நடந்துவிட்டாலும் நீங்கள் பொறுத்துக்கொள் வதே தகுதி. "பொல்லாத சேயெனில் தாய் தள்ளல் நீதமோ? புகலிடம் பிறிதுமுண்டோ?" என்று தாயு மானவர்கூடச் சொல்லியிருக்கிறார், ஒருவேளை ஆண் பிறவியா யிருந்தால், தனியே பட்டுப்பட்டுத் தேறட் டும்; துஷ்டப் பிள்ளைக்கு ஊரார் புத்திசொல்வ ரென்று விட்டுவிடலாம், அப்படியுமில்லையே. தெரி யாது கண்ணைக்குத்திய விரலைத் தறித்துவிடுகிறோமா? எல்லாம், நல்லபுத்தி வரவேண்டும், நன்றாக முடிய வேண்டும், என்று குமரக்கடவுளைப் பிரார்த்தித்துக் கொள்ளுங்கள். அவர் மேலே பாரத்தைப் போட்டு விட்டுச் சும்மா இருங்கள்.

வேலா: அப்படித்தான் இருக்கிறேன், ஐயா, அப் படித்தானிருக்கிறேன். எல்லாம் திருவுளச் செயல் போல நடக்கட்டும்; நம்மாலென்ன செய்யலாம்?

இதற்குள் வண்டி 'வக்கீல்' வீடுவந்து சேர்ந்தது. அவர் வீட்டு மேல்மாடியில் மறுபடியும் வாக்குவாதம் நடந்தது.

அப்பொழுது ஜில்லா கலெக்டருடைய சேவகன் ஒருவன் அந்த வக்கீலுக்கு ஒரு கடிதம் கொண்டு வந்து கொடுத்தான். அதை வாசித்துப்பார்த்ததில், வீரசங்கிலித் தேவரையும் வேலாயுதத்தேவரையும் அழைத்துக் கொண்டு தம்மிடம் உடனே வரும்படி அந்த வக்கீலுக்கு, துரை, அந்தரங்கமாயெழுதி யிருந் தார். அவ்வண்ணமே, அவர், வேலாயுதத்தேவரை யும், வழியிலே ஒரு 'பங்களா' விலிறங்கியிருந்த வீர

சங்கிலித் தேவரையும் அழைத்துக்கொண்டு, துரை யைச் சென்று கண்டார். துரை மிகக் கோபமாயிருந் தார். அவர்கள் மூடத்தனமாயும் முரட்டுத்தன மாயும் செய்த செய்கைகளினாலேயே இவ்வளவும் நேர்ந்ததென்றும், அவர்களைத் தண்டிக்கச் சட்டம் இடந்தராததைப்பற்றித் தாம் வருந்துவதாயும், ஜட்ஜ் தாரிடத்தும் வேலாயுதத்தேவரிடத்தும் சொன்னார். சிவகாமியின் மனப்பூர்வமான சம்மதமின்றி, இனி ஏதாவது செய்யத்துணிந்து அவளை உபத்திரவப் படுத்தினால், அவர்களை எங்ஙனமாயினும் தண்டித்து விடுவது நிச்சயமென்று பயமுறுத்தினார்; தமது நண்ப ராகிய 'ஸெஷன்ஸ் ஜட்ஜி'யும் அவர்களை யழைப் பித்து இவ்வாறு எச்சரிக்கும்படி தமக்கு எழுதியிருப் பதாகச் சொன்னார்; அவளை ஊருக்கு அழைத்துச் சென்று வெகு ஜாக்கிரதையாயும், ஆதரவாயும், அன் பாயும் நடத்திக் காப்பாற்றும்படிக்கும், தன்னுதவி யின்வாழ்ந்ததாலுண்டாகும் துயரத்தை அவ்வித அன்பால் அவரும் அவர் மனைவியும் ஆற்றி மறக்கச் செய்தாலன்றி, அவள் ஒரு வேளை தற்கொலை செய்து கொள்ளுதலும் கூடுமென்றும், அவ்வாறு நேரிடின் அவர்களையே தாம் உத்தரவாதிகளாக்கி மேல் நடத்து வரென்றும், வேலாயுதத் தேவருக்குக் கூறினார். இவ் வாறு பயமும் பயமுமாகப் பலபுத்தி மொழிகளை யுரைத்து, முடிவில், தன்னுதவிக் கடைசியாக ஒரு முறை பார்க்கச் சிவகாமி ஒருவேளை விரும்பினால் தமக்குத் தெரிவிக்கும்படிக்கும், அதற்குவேண்டிய ஏற்பாடு தாம் செய்வதாயும் சொல்லியனுப்பினார்.

அவர்கள் சிவகாமியை நடத்தும் விதத்தைப்பற்றி அடிக்கடி விசாரித்தறிந்து, ஏதாவது தகாததுசெய்தால் தமக்குத் தெரிவிக்கும்படி வக்கீலிடத்தில் அந்தரங்கமாய் இங்கிலீஷில் சொன்னர்.

இந்தச் சங்கதிகளைக் கேட்டவுடன் சிவகாமிக்குச் சிறிது மனதைரியமுண்டாயிற்று; அந்த 'வக்கீலும்', பயப்படாமல் தன் தகப்பனுடன் வீட்டுக்குச் செல்லும்படி அவளுக்குப் புத்திசொல்லி, தாம் அடிக்கடி புலிமலைக்குச் சென்று விசாரிப்பதாகவும் வாக்களித்தார். இதன்மேல் அவள் புலிமலைக்குச் செல்ல உடம்பட்டாள். ஆனல், எப்பொழுதும் சுந்தரம் தன் வீட்டோடிருக்கும்படி அநுமதி கொடுக்கவேண்டுமென்றும், தன்னுடன் கலியாண விஷயமாக ஒருபேச்சும் பேசக்கூடாதென்றும், அரமனைக்குத் தன்னைப் போகச் சொல்லவாவது, தன் வீட்டிற்கு வீரசங்கிலித்தேவர் வருதற்கு இடம் கொடுக்கவாவது கூடாதென்றும் தன் தந்தையிடம் வாக்கு வாங்கிக்கொண்டாள். பின்பு ஊருக்குப்போகுமுன், தன்னுதரை யொருமுறை எங்ஙனமாயினும் பார்க்க விரும்புவதாக வெளியிட, அவள் மனேபீஷ்டத்தை, 'வக்கீல்' 'கலெக்டர்' துரைக்குத் தெரிவித்தார்; மறுநாள் மாலை மூன்று மணிக்குச் சிறைச்சாலைக்குச் சென்றுப் பார்க்கலாமென்று துரை பதிலனுப்பினர்.

இச்சம்பாஷணைக்குப்பின் வேலாயுதத்தேவரும், போ. சுப்பையரும் தனித்து வெளியே பேசிக்கொள்

"காய்மாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகினெற் றிப் பூமாண்ட தீந்தேன் தொடைகீறி வருக்கை போழ்ந்து தேமாங்கனி சிதறி வாழைப்பழங்கள் சிந்தும்" என்ற வருணனை அச்சோலைக்கே தகும். இக்கவி கூறிய கனிகளன்றி, கொடிமுந்திரிப்ப ழம், 'ஞ்ஞாஞ்சு'ப் பழம், விளாம்பழம், 'பம்பிளிமாசு'ப் பழம், 'சீமை நவ்வற்' பழம், 'சீமை இலந்தைப் பழம், 'அன்னாசி'ப்பழம், 'மெலன்' பழம் முதலிய பல கனிவர்க்கங்களும்; பலவருண இலைகள் தழைத்த அலங்காரச் செடிகளும்; நெல்லி, தேக்கு, மருது, பலா, ஆல், சந்தனம், கடம்பு, வேம்பு, அசோகு, பனைமுதலிய பல விருக்ஷங்களும்; ஏலம், கிராம்பு, சாதிக்காய் முதலிய வாசனை திரவியங்களைத் தரும் தருக்களும்; சித்தரத்தை, திப்பிலி, மூலம் முதலிய ஔஷதப் பூண்டுகளும்; மல்லிகை, ரோஜா, பிச்சி, சம்பங்கி முதலிய பூஞ்செடிகளும்; உயர்ந்தோங்கிய மரங்களைத் தழுவிப் படர்ந்தேறித் தழைத்து வெகு மனோரம்மியமாக விளங்கி, காண்பவர் மனங்களில் ஆலிங்கனத்தை நினைப்பூட்டும் கொடிவர்க்கங்களும்; அல்லியும் தாமரையும் ஆம்பலும் கலந்து வாழ்ந்து உலகவாழ்க்கையின் சுபாவத்தை விளக்காநிற்க, அவ் வுலகத்திலிருப்பவர் கடைத்தேற விரும்பின் எங்ஙனம் பற்றின்றி வாழவேண்டுமென்பதைக் குறிப்பது போற் கொடிப் பாசிகள் வேரின்றிப் படர்ந்து விளங் கும் தடாகங்களும், அப்பூங்காவனத்தின் கண் உண் டாயிருந்தன. மாலையிலேனும் காலையிலேனும் அச்சோலைக்குட் சென்று, கதிரவனது பொன்னையுருக்கி மழை பொழி

க்தாலனைய கிரணங்கள் பலவருண இலைகளின் மீதும் புஷ்பங்களின்மீதும் விளையாடுவதையும், தடாகங் களைப் பொன்மயமாக்குவதையும் கண்களிக்கக் கண்டு; கிள்ளையும், குயிலும், வானம்பாடியும், நாகணவாய்ப் புள்ளும், கூவிக்கூவிக் குதூகலிப்பதையும், மரத்தழை களினூடே காற்றுப் பாடுவதையும், வண்டினங்கள் ரீங்காரஞ் செய்வதையும், காதுகுளிர கேட்டு; தத்தம் மனோரதப்படி ஆங்குள்ள பொருள்களைத் தம் ஐம்பு லன்களுக்கும் விருந்தூட்டிச் சுகிக்கக் கிடைப்பின், முற்றுந் துறந்த துறவிகளும் ஒருகால் மனந்திகைப் பாரன்றோ! கடவுள் ஆணைகடந்தொழுகி ஆதிமனிதர் இழந்ததாகக் கிறிஸ்தவர் கூறும் சுவர்க்கப் பூங்கா வனம் இதுதானோ என்று மருளும்படித் திகழும் இச் சோலையின் நடுவே, கயிலையங்கிரியென்று சந்தேகிக்கு மாறு வெண்சுதை தீற்றிய பெரிய மாளிகை யொன் றிருக்கின்றது. இம்மாளிகைக்கு மாதம் முந்நூறு ரூபா குடிக்கூலி. இத்தகைய மாளிகையை, தான் அநு பவியாது பிறர்க்குப் பொருட்குதவும் இதன் சொந்தக் காரனே, ரஸிகசிகாமணி யென்ற பெயருக்குரியவனோ? அன்றேல், மாதம் முந்நூறு ரூபா கொடுத்து இதைக் கைக்கொண்டும், இதை அநுபவிக்கத் தெரியாது, இதைச் சூழ்ந்துள்ள தடாகங்களையும் சோலைகளையும் விட்டு விட்டு, இதன் மூன்றாவது மாடியிலே ஓர் அறைக்குள்ளே வெந்நீரிலே ஸ்நாநஞ் செய்துகொண் டும், மற்றோரறையிலே எப்பொழுதும் இழுக்கப்படும் 'பங்கா'வின் கீழ் 'ஸோஸ்' என்று அரிதிற் பொழுது போக்கிக்கொண்டு மிருக்கும் விரசங்கிலித் தேவரோ

ரஸிகசிகாமணி யென்ற பட்டத்துக்குரியவரா? ஆனால் பிற்கூறியவர், செஞ்சாலியிலே நகரிலே எந்தப் 'பங் களா'வுக்கு அதிகமான வாடகை என்பதை மட்டும் விசாரித்து இதைத் திட்டஞ் செய்தாரேயன்றி வேறன்று; தம்மதினும் அதிக வாடகையுள்ள 'பங் களா'வே ஊரிலிருக்கக் கூடாதென்பது அவர்கருத்து; அங்ஙனமொன்றிருந்து விடின், அவர் கௌரவத் துக்கு அது குறைவாம்.

இரவு மணி ஒன்பதிருக்கும்: இம்மாளிகையின் முற்றத்திலே வீரசங்கிலித் தேவர் ஒரு சாய்வான நாற்காலியிலே படுத்திருந்தார்; இருவர் வேலைக்காரர், மயிலிறகால் அலங்கரிக்கப்பெற்ற விசிறிகளாலே வீசிக் கொண்டிருந்தார்கள்; மற்றொருவன் அருகே அடை ப்பமேலை செய்து நின்றான்; அவன் கொடுக்கும் சுருள் களைவாங்கி வாங்கி வாயிற்போட்டுக் கொள்வதும், வாய் நிறைந்தவுடன் கீழே வைத்திருந்த வெள்ளிப்படிக்கத் திற் துப்புவதுமாயிருந்தார் ஜமீன்தார்; மைந்நாகம் போன்ற அவர் தொந்தியும், கருமேனி முழுவதும், அடை அடையாய்ச் சந்தனம் பூசப்பட்டிருந்ததால், அவர், வெண்சேற்றிற் புரண்டெழுந்த எருமைக்கடா வைப் போலத் தோன்றினர். அவரெதிரே மூன்று வக்கீல்களும் சட்டாணித்தேவரும் நாற்காலிகளிலே உட்கார்ந்திருந்தனர். பின்வரும் சம்பாஷணை நடந் துக்கொண்டிருந்தது.

ஜமீன் : என்னமோ போங்கள், சயித்துப் போட் டீர்கள்; பயல் பட்டுக் கொண்டான்; இனி மீளமாட்

டான். அஞ்சுவருசம் மண்சுமந்து அவன் பிழைக்க மாட்டான்.

1-வது வக்கீல் : எல்லாம் அவ்விடத்து மனம் போல முடிந்தது. இந்தப் போலீஸ்காரருக்கு மட்டும் எங்கள் உதவியில்லாவிட்டால், கேசு முடிகிற விதம் வேறு. ஜட்ஜுக்கும் கலெக்டருக்கும் அவர் மேல் வெகு நல்ல அபிப்பிராயம்; அவர் வக்கீல்களும் வெகு சமர்த்தர்; அவருக்கு ஆப்தமான சிநேகிதர்கள். அவர்களிடத்திலும் ஜட்ஜுக்கு மதிப்பதிகம். ஆனால், நாங்கள் பொடி வைத்து எங்கள் கையைக் கொஞ்சம் காட்டியபின்பு, ஒருவராலே அசைக்க முடியுமா? நீங்கள் பார்த்துக் கொண்டிருந்தீர்களே, எதிர்க்கட்சி வக்கீல்கள் எவ்வளவு தொண்டையைக் கிழித்துக்கொண்டார்கள்; என்ன போராட்டஞ் செய்தார்கள்; நாங்கள் எப்பொழுதாவது வாயைத் திறந்தோமோ? எல்லாம் முதலிற் சரியானபடி பொடி வைத்து வேலைசெய்துவிட்டால், அப்புறம் யாராலே என்னசெய்ய முடியும்? ஏதோ எங்களாலானதைச் செய்து விட்டோம். முதலிற் பேசினபடி பணம் உத்திரவாய்விட்டது, பெற்றுக்கொண்டோம்; ஆனால் அப்பொழுது, கேசு இவ்வளவு கஷ்டமாயிருக்குமென்றாவது, எம். எல். ஐயரவர்கள் எதிர்க்கட்சியிலே வருவார்களென்றாவது, கலெக்டரும்ஜட்ஜியுமே இவ்வளவு முனைப்பாய்க் குற்றவாளி பக்கம் சாய்வார்களென்றாவது, தெரியவே தெரியாது. ஆயினும் ஏற்றுக்கொண்டதை நிறைவேற்றினால், பின்பு, தாங்களே

கஷ்டமறிந்து வெகுமதி செய்வீர்களென்று நாங்கள் மறுபேச்சுப் பேசவில்லை. இனம் தெரியாத இடம், லோபமுள்ள இடம் என்றாலன்றோ முன்னதாகவே பேசவேண்டும்?

2-வது வக்கீல்: அன்றியும் விஜயமார்த்தாண்டத் தேவருக்கு விரோதமாக விருந்தில் பலர் அப்பிரிய மும் நேரிட்டிருக்கிறது. துரைகூட முன்போலே சுமுகமாயில்லை. அநேகருக்கு மனவருத்தம். ஆனு லிதற்கெல்லாம் நாங்கள் பயப்படவில்லை; தாங்களிருக் கும்பொழுது எங்களுக்கு ஒருகுறைவும் வராது.

3-வது வக்கீல்: என், இந்தக் கேசில் அப்பிரியம் வருமென்றெண்ணியே, மற்ற வக்கீல்கள் ஒருவரும் இதை எடுத்துக்கொள்ளாமல் மறுத்துவிட்டது அவ் விடத்திலே தெரியுமே; கடைசியாகத்தானே நம்மிடம் வந்தது.

சப்பாணி: ஆமாம், ஐயா; அதெல்லாம் சரிதான். அதற்குத்தான் ஐயாயிர ரூபா கொடுத்தாச்சே; இன்னும் என்னவேணும்? சமீனையே எழுதித் தந்து விடுவார்களா?

1-வது வக்கீல்: ஐயாயிரரூபா தங்களுக்குப் பெரிதாயிருக்கலாம். மஹாராஜா அவர்களுக்கு அது பெரிதல்ல; எங்கள் சிரமத்துக்கும் அது பெரிதல்ல. ஏதோ மஹாராஜா அவர்கள் சந்தோஷப்பட்டு ஒரு துரும்பைத் தந்தாலும், வெறுந்தாம்பூலம் தந்தாலும்

வாங்கிக்கொள்ள இஷ்டமே; அவர்கள் கையாலே தருவதுதான் பெரிது. ரூபா என்ன? இன்றைக் கொருவனிடம், நாளை யொருவனிடம்.

ஜமீன்: அடே, சொக்கு! மேலேபோய்க் கைப் பெட்டியை எடுத்துக்கொண்டுவா.

கைப்பெட்டி வந்தவுடன், ஜமீன்தார், தாம்பாளத் திலே வெற்றிலை பாக்குடன் ஒரு ஐந்நூறுரூபா 'நோட்டை'யும் வைத்து, ஒவ்வொரு வக்கீலுக்கும் கொடுத்தார். அதை யவர்கள் வெகு வணக்கமாய்ப் பெற்றுக்கொண்டு, ரூபா செலவழிந்து போய்விடுமாத லால், எப்பொழுதும் ஞாபக மிருக்கும்படி, தங்களுக்கு ஏதாவது ஒரு அடையாளம் கொடுக்கும்படி அவரை வெகு சாதுரியமாய் வேண்டினராக, ஜமீன்தார், ஒரு வருக்கு ஒரு தங்கக் கடியாரமும் சங்கிலியும், மற்ற இருவருக்கும் ஒவ்வொரு வைரமோதிரமும் கொடுத் தார்.

1-வது வக்கீல்: எப்பொழுதும் தங்களை நினைப் பூட்டுவதால் எங்களுக்கு இதே பெரிது. என் சொந்த கிராம மாகிய பண்ணையூரிலே ஒருவீடு கட்டப்போகி றேன்; ஜமீனிலிருந்து பத்துவண்டி தேக்குமரம் உத்திரவாகவேண்டும்.

ஜமீன்: அதற்கென்ன, தருகிறேன்.

1-வது வக்கீல்: முன்பத்திக்கு வேண்டிய கற் றூண்களும் உத்திரவாகவேண்டும். எங்கள் ஊர்ப்

புறம் வண்டிகிடையாது; என்ன வாடகை கொடுத்தா லும் கிடையாது.

ஜமீன்: அதற்கென்ன, எல்லாம் வீட்டுவாசலி லே வந்து சேர்ந்துபோம்? விசாரப்படவேண்டாம்.

2-வது வக்கீல்: எனக்கு ஒரு சின்ன உபகாரம்: அடுத்தமாதம் என் புத்திரிக்கு விவாக முகூர்த்தம் வைத்திருக்கிறேன். தாங்கள் விஜயஞ்செய்து கூட வே இருந்து நடப்பித்துத் தரவேண்டும். கங்கிகா தான பலன் தங்களுக்கே கிடைக்கும்.

ஜமீன்: அதற்கென்ன வருகிறேன்; கல்யாணத் துக்குவர என்ன தடை?

2-வது வக்கீல்:—முன்னதாகவே கொஞ்சம் பந்தல் சாமான்களுக்கும் பத்துவண்டி நெல்லுக்கும் உத்திரவாக வேண்டும். மற்ற சாமான்கள் இப்பொ ழுது அவசரமல்ல.

ஜமீன்: சரி; அதற்கென்ன, செய்கிறது.

பின்பு முதலிரண்டு வக்கீல்களும் விடைபெற்றுச் சென்றனர். மூன்றுமவர்மட்டும் ஜமீன்தாருடன் தனித்துப் பேச விரும்புவதாகச் சொன்னார். அவர் வேண்டுகோளின் படி வேலைக்காரர்க ளெல்லாம் அனுப்பிவிடப்பட்டார்கள். சப்பாணித்தேவர் கூடவே யிருந்தார். பின்வரும் சம்பாஷணை நடந்தது.

3-வது வக்கீல்.—தங்களிடம் வெகுமதி பெறு வதற்காக நானின்றிரவு புறப்பட்டு வரவில்லை. அவர்

களிருவரும் முதலில் என்னைக் கூப்பிட்டபொழுது நான் வரவில்லை யென்று சொன்னேன். அதற்குப் பின் ஒரு சங்கதி கேள்விப்பட்டு உடனே புறப்பட்டு வந்தேன்.

ஜமீன்:—என்ன, அப்பீல் செய்யப்போகிறார்களோ?

வக்கீல்:—இல்லை; அதில்லை. ஒருவேளை அப்பீல் செய்தாலும், தண்டனை கூடத்தான் செய்யும். எம். எல். ஐயரவர்களுக்கு அது நன்றாய்த்தெரியும். ஆகை யினாலே அப்பீலுக்குப் போகவேமாட்டார். நான் கேட்டசங்கதி வேறுவிஷயம்: முதற்கேசைப் பற்றியது. அதில் தாங்களும், தங்கள் வேலைக்காரர் இரு வரும், வேலாயுதத் தேவரும், அவர் மனைவியும், அந்தத் தட்டானும், இரண்டு பண்டாரங்களும், பொய்ச்சாக்ஷியம் உண்டு பண்ணினதாகவும் சொன்னதாகவும் கேசு நடக்கப்போகிறதாம். இன்றுமாலை, தீர்ப்பானபிறகு, போலீஸ் ஸூப்பிரண்டெண்டு பங்களாவில் பிரஸ்தாபம் நடந்ததாம். இந்தக் கேசு முடிவதற்காகவே இதுவரையும் காத்திருந்தார்களாம். கலெக்டரும் மும்முரமாயிருக்கிறாராம். இன்ஸ்பெக்டர், துரை வீட்டிலிருந்து இரவு எட்டுமணிக்குத்தான் திரும்பிவந்தார். வழியிலேயே என் வீட்டுக்கு வந்து சங்கதிகளையெல்லாம் சொன்னார்; உடனே புறப்பட்டுவந்தேன்.

ஜமீன்:—இதென்ன, ஐயா, இடிவிழுந்தால்போலிருக்கிறது? நமக்கென்ன இப்பொழுது கட்ட கால

மோ? சாதகமும் இல்லையே இளவு, பார்ப்போமென்றால். ஆமாம், அப்பொழுது கொஞ்சம் பொய்தானே சொன்னோம். ஆனால், அவர்களும் உடம்பட்டுத்தானே இருந்தார்கள். சுப்பையனெங்கே? அந்தப் பாப்பான் பேச்சைக் கேட்டன்றோ மோசம்போனோம். அடே, வெள்ளையா! சுப்பையனையும் வேலாயுதத்தேவரையும் கூட்டிக்கொண்டு வா. ஏன், ஐயா, குற்றம் ருசுவாய் விட்டால் அபராதம் போடுவார்களோ?

வக்கீல்: ஜீவாந்தம் வரையும் தீவாந்தரக் கடுஞ்சிறை சட்டப்படி விதிக்கலாம்.

ஜமீன்: எப்படி? எப்படி? இது மெய்தானா?

வக்கீல்: இன்னும் இரண்டு வக்கீல்களைக் கேட்டுக் கொள்ளுங்கள். சட்டப்புஸ்தகத்தை வேண்டுமானால் காட்டுகிறேன்.

ஜமீன்: அடே, கறுப்பா! டாக்காற்று வண்டியைப் போட்டுக்கொண்டுபோய் இனிஸ்பெக்டர் ஐயரவர்களை உடனே அழைத்துவா. அம்மான்! நீங்கள் போங்கள்; ஆனால் தான் உடனே வருவார்கள்.

சப்பாணித்தேவரும் ஒரு வேலைக் காரனும் உடனே போலீஸ் இனிஸ்பெக்டர் வீட்டுக்குப்புறப்பட்டார்கள். போனவர் திரும்புமுன், வக்கீல், தம்மாலியன்றமட்டும் ஜமீன்தாருக்குப் "பேதிக்குக் கொடுத்தார்." கொஞ்சநேரத்தில், தம்மை யறிந்தவர்களுக்குள் "பழையபெருச்சாளி" என்ற பட்டப்பெயர் பெற்ற போலீஸ் இனிஸ்பெக்டர் வந்து சேர்ந்தார்.

பின்னடந்த சம்பாஷணை, யாம் முற்று மறிந்த தேயாயினும், இங்கு விவரிக்கத்தக்கதன்று. நம்மை ஆளும் அங்கிலேயர், இந்நாட்டாராகிய நமக்குப் பல உயர்ந்த உத்தியோகங்களைக் கொடுத்திருக்கிறார்கள். இதற்கு, நம்மை நியாயமாயாள வேண்டுமென்ற கருத்தும், நமக்களித்திருக்கும் உத்தியோகங்களிலே மிகச் சில வற்றைத் தவிர ஏனையவற்றிற்கு நம்மையன்றிப் பிறர் கிடையாமையுமே முக்கிய காரணங்களாம். இது நிற்க, சர்க்கார் உத்தியோகத்திலும் அதிகமாகப் பணவருமானமுள்ளதை தரவல்ல தொழில்கள் இந் நாட்டிலே மிகச் சிலவே, அதாவது, இப் பொழுது உத்தியோகஸ்தரா யிருப்பவரிற் பெரும் பான்மையார் ஆதிதொட்டு வேறொரு தொழிலைக் கைக் கொண்டிருப்பினும், சர்க்கார் நிவேதனமாக அவர்கள், மாதந்தவறாது, தேதி தவறாது, வளர்விளைந்தாலும் காய்ந்தாலும், அகவிலை தெரியாது, பெறும் சம்பளத் தில் ஒரு சிறுபாகத்தையே அத்தொழிலின் ஊதிய மாகப் பெற்றிருப்பரென்பது திண்ணம். மாதம் பத்து ரூபா சம்பளத்துக்கு மேற்பட்டவருள், நூற்றிலே தொண்ணூற்றொன்பது உத்தியோகஸ்தரைப் பற்றி இதை வற்புறுத்திக் கூறலாம். இங்ஙனமிருக்க, "ஆசைக்கோரளவில்லை: அகிலமெல்லாங் கட்டியாளினும் கடல் மீதிலே ஆணைசெலவே நினைவர். * *" என்று தாயுமானவர் பாடிய பாட்டுக்குத் தாமே யுதாரணமாக, நம்மவருட் பலரொழுகுவது மிக்க பரிதாபமே. நம் மிற்குறைந்த பாத்தியதையுடன் நம்மிலும் அதிகச் சம்

ளத்தைப் பெறும் அங்கிலேய உத்தியோகஸ்தரிற் சிலரும் அவ்வாறே ஒழுகுகின்றனரென்பது, நம் குற்றத்தை நீக்காது. ஆங்கிலேயர் நம்மை வென்று ஆளுபவர். ஆதலின், பொதுவான உலகநீதி முறையாலன்றி நமக்குக் கடமைப்பட்டாரிலர். நாமோ, சகல விதங்களிலும் ஒருங்குச் சுகதுக்கங்களைப் பகிர்ந்தனுபவிக்கற்குரிய ஒரே நாட்டார். நம்முட் கல்வியிற்றேர்ந்துள்ளார், அப்பாக்கியம் பெறுமாந்தர்க்கு ஒரு முன் மாதிரியாக வொழுகி, அவரை மேம்படுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். நமது நன்னடக்கையால் இராசாங்கத்தாரிடமிருந்து இன்னும் பல பெருஞ்சுதந்தரங்களைப் பெறற்குரியோம். கல்வியுற்றாரிற் பெரும்பாலார் சர்க்காருத்தியோகஸ்தராக, நாட்டு விருத்தி இருதிறத்தாலும் அவர் பொறுப்பாக விருக்கின்றது. இவ்வளவுமன்றி, ஆங்காங்குள்ள சில மக்கட்பதடிகளைத் தவிர்த்து, அங்கிலேய உத்தியோகஸ்தர் நமக்குத்தக்க எடுத்துக் காட்டுக்களாக நம் கண்முன் நாடோறும் ஒழுகுகின்றனர். பின்னை என்னே நம் உத்தியோகஸ்தரிற் பலர், பேராசையால், ஏழைகளையும் குற்றமற்றாரையும் ஏனையரையும் துன்புறுத்திப் பரிதானம் வாங்குகின்றனர்! தாம்பெறும் கிரமமான சம்பளத்துக்குத்தக்கபடி கிரமப் பட்டுழையாதது மன்றி, நியாயத்தை விற்றுப் பணந்திரட்டுகின்றனர்! தாமடைந்திருக்கும் கல்வித்தேர்ச்சியின் பயனாக, கேவலம் பசுக்களுக்குச் சமதையாய் அரிதில் வயிறுவளர்த்துக் காலத்தைப் போக்கும் தம்முடன் பிறந்தாராகிய மூட ஜனக் கோடிகளின் பெருக

ட்டு இராசாங்கத்தாரோடு மன்றாடிப் பூசலிட்டு அவர்களுக்குப் பல சுதந்தரங்களையும் அநுகூலங்களையும் சம்பாதித்துக் கொடுக்கற்குக் கடமைப்பட்டுள்ளவர்கள், தாமே அம்மூடமேலைமைகளைப் பலவாறு முன்புறுத்தி, இராசாங்கத்தாராக அளித்திருக்கும் சௌகரியங்களையுங்கூட த் தந்நயங்கருதிக் கெடுத்து விடுகின்றனரே! கற்றறிந்தாரிற் பலர் ஒழுக்கம் இங்ஙனமாயின், நம் தேயம் விருத்தியடைந்து முன்போல் விளங்கும் நாள் எந்நாளோ? அம்ம அம்ம! இதை நினைக்குங்கால் எம் மனம் பதைக்கின்றது. 'மனிதர், தம் சகோதரராகிய பிறமனிதர் விஷயத்தில், மிருகத் தன்மையோடு ஒழுகுவதே, பல்லாயிரம் மனிதரின் துக்கத்துக்குக் காரணம்' என்று ஒராங்கில கவி கூறியிருப்பது கேவலம் உண்மையே. பிறர் குணங்களுரைப்பதுவும் நீதாதலின், இதை இம்மட்டோடு நிறுத்துவாம்.

முடிவில், வக்கீலும போலீஸ் இனிஸ்பெக்டருமாகப் பதினையிர ரூபாவுக்கு வழி செய்து விட்டுச் சந்தோஷமாய் வீடு சென்றனர். பின்னவர், தம் எஜமானராகிய பெரிய துரை பெயரை ரூபா விஷயமாக ஜமீன்தாரிடம் வெளியிடச் சிறிதும் கூசவில்லை. ஜமீன்தாரும் வெகு சந்தோஷமாகவே நித்திரை போயினர்: ஏனெனின், இவ்விபத்தை வெகு சுலபமாகவும் அதிகப் பணச் செலவின்றியும் தாம் நீக்கிவிட்டதாகக் கொண்ட மனமகிழ்ச்சியுடன், சிவகாமி புளிமலைக்குச்செல்ல உடம்பட்டு விட்டதால் எவ்வாறாயினும் அவளை யடைந்து 'கேசி'ல் தாமுற்றவெற்றிக்கு முடிசூட்டலாமென்று

போ. சுப்பையர் கூறிய சமாசாரமும் மிக்க குதூகலத்துக்கு இடமாயிற்று. அன்றிரவு அவர் கலியாணக் கனவுகூடக் கண்டார்.

---

## மூன்றாவது அதிகாரம்.

ஊக்கமது கைவிடேல்.



தம் காதலி தம்மைச் சிறைச் சாலையில் வந்து கடைசியாக ஒரு முறை காண விரும்புவதாகவும், அதற்குக் 'கலெக்டர்' அநுமதி கொடுத்திருப்பதாகவும், அன்று மாலை மூன்று மணிக்கு அவள் வருவதாகவும், விஜயமார்த்தாண்டத் தேவர் கேள்வியுற்றபொழுது, அவர் சிறிது பின் வாங்குபவராகவே தோன்றினார். அவளைக் காணுவதில் அவருக்கு அளப்பரிய சந்தோஷமேயெனினும்; தாம் சிறையினின்றும் மீண்டுவரும்வரை அவள் பிரிவாற்றாது ஏக்கமுற்றுத் தற்கொலை செய்து கொள்ளவாவது, அல்லது துக்கத்தாற் பட்டினியும் பசியுமாயிருந்து தேகசௌக்கியத்தைக் கெடுத்துக் கொள்ளவாவது செய்யாமலும் அவள் நடந்து கொள்ள வேண்டிய விதத்தைப் பற்றியும், அவளுக்குப் புத்திமதி கூறி, அவள் மனத்தைத் தேற்றி, அவளுக்கு ஊக்கமும் உற்சாகமும் அளிக்கத் தாம் மிக்க ஆவலுடையவரா யிருப்பினும்; அவள் தம்மைச் சிறைச் சாலையிற் கண்ணுற்ற

வுடன் அடையக்கூடும் அபரிமிதமான துக்கத்தைத் தம்மாற் கண்டு சகிக்க முடியாதென்று அஞ்சினார். ஆயினும், தாம் எங்ஙனமாயினும் தம் முள்ளநிகழ்ச்சியை வெளிக்காட்டாது அடக்கிக் கொண்டு, அவள் மனோபீஷ்டத்தை நிறைவேற்றி, அவளைத் தேற்றி, புத்தி புகட்டி அனுப்புவதே தகுதியென்று கருதி, அவளைப் பார்க்கச் சம்மதித்தார். அவர், ஒரு வேளை அச்சமயத்தில் தம் பிராணனுக்கேனும் அவளுக் கேனும் ஏதாவது முரட்டுத்தனமாய்ச் செய்து விடின் தம் உத்தியோகத்துக்கே கேடு வந்துவிடுமென்று சிறைச்சாலை அதிகாரி வெளியிட்ட பயத்தை, அங்ஙன மொன்றுமே நிகழாதென்று வாக்களித்துத் தீர்த்து விட்டார். ஆனால், தாம்அவளைச் சந்திக்கும்பொழுது, தமக்கு, விலங்கு, சிறைச்சாலையுடை, ஒன்றுமேயின்றிச் செய்தாலன்றித் தாம் அவளைப் பார்ப்பதில்லையென்று ஓரே பிடிவாதமாகக் கூறினார். அவர் குணத்தையும் முன் அந்தஸ்தையும், வாக்குத் தத்தத்தையும், 'கலெக்டர் ஜட்ஜ்' முதலியவர் அவர் விஷயத்திற் காட்டிய அநுதாபத்தையும் உத்தேசித்துச் சிறைச் சாலை யதிகாரி அப்படியே உடம்பட்டார்.

மாலை மூன்று மணிக்கு, 'வக்கீல்' ஐயர் வண்டியில், அவரும், வேலாயுதத்தேவரும், சிவகாமியும், சுந்தரமும் சிறைச்சாலைக்கு வந்து சேர்ந்தார்கள். அப்பொழுதே சிவகாமி முகமும் செய்கைகளும் அடங்காத் துக்கத்தையும் மனப்பதற்றத்தையும் காட்டுதுகாட்டின. சிறைச்சாலை யதிகாரி 'ஆபீசு'க்குப் பக்கத்திலுள்ள

ஒரு காலியறைக்குள், சிவகாமி யனுப்பப்பட்டாள். அவ்வறையில் இரண்டு நாற்காலிகளைத் தவிர வேறொன்று மில்லை. அவள் உட் சென்றவுடன், அறையை ஒரு தரம் நாற்புறமும் நோக்கி விட்டு, நிற்கமுடியாமல் ஒரு நாற்காலியில் ஆழ்ந்து விட்டாள்; கண்ணீர் தாரை தாரையாய் வழிந்துக் கொண்டிருந்தது; ஒவ்வொரு நிமிஷம் செல்வதும் ஒரு யுகம் போலிருந்தது. அவள் அறைக்குட் செல்லுமுன்னமே, சிறைச்சாலை யதிகாரி, விஜயமார்த்தாண்டத்தேவர் வந்தபின் பதினைந்து நிமிஷங்களுக்குமேல் அவர் தாமதிக்க முடியாதென்றும், 'கலெக்டர்' உத்திரவும் அவ்வளவே யென்றும், தாமொரு மணிகிலுக்கியவுடன் அவர் வெளியே வந்து விடாவிட்டால், தாம் உள்ளே நுழைந்து அவரை அழைத்துப் போக நேரிடு மென்றும், தம் கடமையைச் செலுத்தும் பொருட்டுத் தாம் கூறியதைத் தயை செய்து மன்னித்துக் கொள்ளும்படிக்கும், கண்டிப் பாய்ச் சொல்லி விட்டார். ஆகவே, தன் மனத்தி லுள்ளவற்றை யெல்லாம் தன் காதலருக்கு எடுத் துரைக்கப் பதினைந்து பதினைந்து வருஷங்களும் போ தாவென்று தோன்றா நிற்க, எங்ஙனம் அவ்வளவையும் பதினைந்து நிமிஷங்களுக்குட் கூறிமுடிப்பதென்றும், எதை முன் சொல்வது எதைப் பின் சொல்வது எதைச் சொல்லாதொழிவது என்றும், சிவகாமி ஆலோசித்துக் கொண்டு உட்கார்ந்திருக்கையில், நம் கதாநாயகர் கதவைத் திறந்து கொண்டு திடீரென்று அவ்வறைக் குட் பிரவேசித்து, கதவை மூடி விட்டு, அவளை நோக் கித் திரும்பினர். அவரைக் கண்டவுடன் எழுந்த சிவ

காமி, அவளை நோக்கி அவர் "என் கண்ணாட்டி" என்று கூப்பிட்டுக்கொண்டு தழுவுதற்கு விரித்த கைகளுடன் செல்லாநிற்க, அச்சிறைச்சாலை முழுவதும் நடுங்கி எதிரொலிக்கும்படியான பெருங்குரலில், "அத்தான்" என்று கூவிக் கொண்டு எதிரோடிச் சென்று, அவர் ஆலிங்கநத்திற் சோர்ந்து விட்டாள். அவர் அவளை மெதுவாய் அணைத்துத் தூக்கிச் சென்று, ஒரு நாற்காலியிலிருந்து தம் மடிமீதிருத்திக் கொண்டார். இருவரும் சற்று நேரத்துக்கு ஒன்றுமே பேசாமல் முகமேல் முகம் வைத்துக் கண்ணீரைப் பெருக்கிக் குழந்தைகளைப்போல் தேம்பித் தேம்பி அழுதுக் கொண்டிருந்தனர். தாம் தமது மனத்துயரத்தை வெளிக் காட்டாது உள்ளடக்கிக் கொண்டு, என்ன என்ன கூற வேண்டுமென்பதைப் பற்றி வெகு நேரமாக நினைந்து செய்திருந்த சித்தாந்த மெல்லாம், எங்கேயோ பறந்து போயிற்று. சிறிது பொழுதுக்குப் பின், நம் கதா நாயகர், ஒரு வாறு தம் துக்கத்தை யடக்கிக் கண்ணீரை துடைத்துக் கொண்டு, அவள் கண்ணீரையும் தம் முத்தங்களாற் போக்கி, அவளை மிக மதுரமான சல்லாப வசனங்களால் தேற்றத் தொடங்கியவுடன், அவள், "எனக்கோ இவ்விதி வர வேண்டும்? ஐயோ! அத்தான், நான் என்ன செய்வேன்? நான் என்ன செய்வேன்?" என்று புலம்பி, முன்னினும் அதிகமாகப் பிரலாபிக்கலானாள்.

வியஜுமா: சோமி! என் கண்ணே! நீ யிப்படி அழுது கொண்டிருந்தால் நாமிப்பொழுது சந்தித்தது

பிரயோசனமின்றிப் போய் விடும். இப்பொழுதே ஐந்தாறு நிமிஷங்களுக்கு மேலாய்விட்டன. இன்னும் பத்து நிமிஷங்களுக்குமேல் நான் இங்கிருக்க முடியாது. நீ இவ்வாறு துக்கப் படுவா யென்று பயந்தே, நான், முதலில் இதற்குச் சிறிது மனமிசையவில்லை. ஆயினும் நீயாகவே இதை விரும்பியதால், உன் துயரத்தையெல்லாம் ஒருவாறு அடக்கிக் கொண்டு மேல் நடக்கவேண்டிய சங்கதிகளைப் பற்றிப் பேச விரும்பியே இதைக் கோரினேனென்றெண்ணினேன். என்ன! ஐந்து வருஷங்கள்தானே: ஐந்து நாட்போல் கழிந்து விடும். சீதாப்பிராட்டியார், எவ்வாறு தம் அருமை நாயகரைப் பிரிந்திருந்தா ரென்பதை நினைத்துப்பார். எனக்குற்ற அவமானத்தைப்பற்றி நீ சிறிதுமே விசனப் படுவது நியாயமல்ல; இப்படி வரலாமென்று நான் முன்னறிந்து, நன்கு யோசித்து, மனமிசையத் துணிந்த விஷயமே அது. நம் காதலுக்கும் அதற்கும் சம்பந்தமேயில்லை; உலக மதிப்பை அவ்வளவு விரும்புமவனும் நானல்ல. ஒரு வேளை நான் ஐந்துவருஷங் கழித்துச் சிறைமீண்டு வருவேனோ வென்றும் நீ சிறிதும் சந்தேகப்பட வேண்டாம். அப்படியோ, இப்படியோ, என்ற ஒரு தீர்மானமின்றி உழன்று கொண்டிருந்த மனோ வியாகுலத்தால் உடம்பு சிறிது இளைத்திருக்கிறதேயன்றி, இனி ஒரு அணுவேனும் என் தேகம் வாடாது. ஆகாரம் ஏதேயாயினும், வேலையேதேயாயினும், கடைசியில்என் கண்ணாட்டியுடன் சுகமாய்வாழலாமென்ற ஒரு நம்பிக்கைப்பலமே, ஐந்துவரு-

ஷமில்லை, ஐம்பது வருஷமேயாயினும், எனக்கு ஊக்க மளித்து, என்னை வடுவின்றிக் காப்பாற்றும். இதைப் பற்றி உனக்கு அணுவேனும் கவலையே வேண்டாம்; என் மனத்திற் சிறிதும் பயமுமில்லை, சந்தேகமு மில்லை. ஆகவே, இப்பொழுது நம் கவலை யெல்லாம், இந்த சொற்பகாலத்தை நீ எவ்வாறு சௌகரியமாய்க் கழிக்கலாம் என்பதே. நீ உன் தகப்பன் வீட்டிலேயே இருக்கிறதென்று ஏற்பாடாயிருப்பதாகவும், கலெக்டர் துரையவர்கள் உன் தகப்பனிடத்திலும் வீரசங்கிலித் தேவரிடத்திலும் அதைப் பற்றிப் பேசியிருப்பதாகவும் கேள்விப் பட்டேன், என் நண்பரும் உனக்கு ஒரு கேடும் நேராதவண்ணம் தாம் அடிக்கடி விசாரித்துக் கொள்வதாக வாக்களித்திருக்கிறார். அவர் நல்ல யோக்கியர், எனக்கு மிகவும் கடமைப் பட்டுள்ளவர். சுந்தரமும் உன்னுடனிருப்பான். ஆகவே, புளிமலை யிலேயே இச்சிறு காலத்தைக் கழித்து விடுவது அவ் வளவு அசாத்தியமல்லவென்று தோன்றுகின்றது. எவருனக்கு என்ன போதனை செய்யினும், நீ யொரு நிமிஷமேனும் மனம் மாறுவா யென்று நான் சொப்ப னத்திலும் சந்தேகிக்க வில்லை.

சிவகாமி: அத்தான்! எந்தக் கஷ்டத்தையும் சகித்துக் கொள்ளலாம்; ஆனால், தங்கள் மனத்தில் அப்படிப்பட்ட சமுசயம் மட்டும் உண்டானால், பின்பு என் பாழுயிரை மாய்த்துக் கொள்வதைத் தவிர வேறொன்றுமில்லை.

விஜயமா: அப்படியே நானும் சொல்கிறேன்.

எனக்குச் சந்தேகமேயில்லை. நாயனார் என்ன சொல்லி யிருக்கிறார்?

"சிறைகாக்குங் காப்பெவன் செய்யும்? மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை."

ஆயினும், உனக்கு இரண்டொரு புத்திமதிகள் மட்டும் சொல்ல நினைந்தேன். முதலில், நீ புலிமலையி லிருப்பது பதனக்குறைவே. உலகவதந்திக்குப் பய ந்து வேறுவிதியின்றியே அப்படிச் செய்ய நேர்ந்திருக் கிறது. கலெக்டர் கூறியதையும், என்னண்பர் வாக் கையுமே முக்கிய ஆதரவாகக் கொண்டிருக்கலாகாது: அவர்களோ தூரத்திலிருப்பவர்; வேறு பல வேலைகள் உள்ளவர்; முற்றிலும் மறந்து விடக்கூடும்; அல்லது கலெக்டர் வேறிடத்துக்கு மாறிப் போய்விடக்கூடும். கற்போ, ஓராயுள் முழுதும் காப்பாற்றப்பட்டு வந்திருப் பினும், ஒரு நிமிஷத்தில் மீளாவண்ணம் அழிவுறக் கூடியது. ஆகவே, உன் மனோதைரியமும் திடமுமே உனக்கு முக்கியகாவல். புலிமலையில் உன்னை நய மாகவும் பயமாகவும் பலவிதமாய்த் தொந்திர வுசெய்து வலாற்காரஞ் செய்வார்களென்பதிற் சந்தேக மேயில்லை; ஒருவிஷயத்தை மட்டும் நீ திடமாய்க் கொள்: எவராயினும் உன்னை மானபங்கஞ் செய்யத் துணிந்து நெருங்கினால், அவரைக் கொலை செய்தே னும் உன் மானத்தைக் காப்பாற்றிக்கொள்ள, உனக் குச் சட்டப்படி முழுச்சுதந்தரமுண்டு. இவ்விஷயம் நம் ஸ்திரீகளுக்குப் பொதுவாய்த் தெரியாமலே, அநே கர் முரட்டுக் காமத்துக்கு இரையாகி அழிகிறார்கள்.

யாவராயினும் பயப்படாதே. தன்னுயிரினும் அருமையான தன் கற்பைக் காப்பாற்றிக் கொள்ள, ஒருபெண் என்னவேண்டுமாயினும் செய்யலாம். நீயோ மறப் பெண்; நெஞ்சுத்துணிவுடையவளோ; ஆகவே, புலிமலையில் உன் பிறந்த வீட்டிலில்லை, அரமனையிலேயே நீயிருப்பினும்,உனக்கு மனோதைரியமுள்ளமட்டும் பயமேயில்லை. ஒருவேளை எதனாலாயினும் புலிமலையை விட்டு வெளிப்பட நேர்ந்தால், சுந்தரத்துடன் செஞ்சாலியினையிலே ஒரு வீட்டிலிரு. உனக்குச் செலவுக்கு வேண்டிய பணத்தைக் கூசாமல் என் நண்பரிடமிருந்து பெற்றுக்கொள். இப்பொழுது பார்! இந்தச் சிறுகாலத்தை நீ கழிப்பது எவ்வளவு சுலபமாயும், நம்முடைய கவலையும் துக்கமும் எவ்வளவு வீணாயும் தோன்றுகின்றன! ஐந்து நாட்களில் திரும்பிவந்து விடுவேன்; பின்பு நம் சுகத்தை யாருமே தடுக்க முடியாது.

சிவகாமி: ஐயோ! அத்தான்! இப்பொழுது நாம் பிரிந்திருந்த இந்த சிலதினங்களும் அத்தனை யுகங்கள் போலிருந்தனவே: நாம் பருந்துக்கூட்டிற் கூடியிருந்தது அனேக யுகங்களுக்கே முன்னிகழ்ந்த ஒரு கனவுபோல் தோன்றுகிறதே: நானெவ்வாறு தங்களை ஐந்து வருஷகாலம் பிரிந்திருப்பேன்? ஐயோ! என் பாழ்விதியே! நீங்கள், செஞ்சாலியினை, சென்னை முதலிய இடங்களுக்குப் போயிருக்கும்பொழுதெல்லாம், பிரிந்திருப்பதாகவே தோன்றவில்லை: சீக்கிரம் வந்துவிடுவீர்கள் என்றெண்ணியும், தங்கள் கடிதங்

களைக் கண்டும், எளிதிற் காலங்கழித்தேன். அன்றி யும், தாங்கள் புலிமலைக்கு வந்தபொழுதும் கூட, தாங் கள் அரமனையிலும் நான் என் வீட்டிலும் இருந்து வந்தோம். இப்பொழுது இரண்டு மூன்று வருஷங் களாக, ஒருவரை யொருவர் அடிக்கடி காணுவது மில்லை, பேசுவதுமில்லை. ஆனால், இப்பொழுது தங்க ளுடன் கூடிச் சிலநாட்களைச் சில நிமிஷங்களைப் போற் கழித்துப் பிரிந்தபின்பே, தங்களைப் பிரிந்திருப்பது இன்னதென்பதை உண்மையில் அறிந்தேன். என்ன நம்பிக்கை இருந்தென்ன, என்னசௌகரியமிருந் தென்ன, தங்களைப் பிரிந்தபின் ஐந்து மாதமேனும் என்னுயிர் தங்குமென்று நான் நம்பவில்லை; தாங்கள் எவ்வளவு தைரியமாய்ப் பேசினும், சிறைச்சாலையில் ஐந்து வருஷங்களுக்கு ஓய்வொழிவின்றி வேலைசெய்து, கேப்பைக்களியைத் தின்று, தங்கள் மெல்லிய சரீரம் பிழைத்திருந்து, தாங்கள் வெளிவருவீர்களென்று நான் நம்பவுமில்லை. நானும் தங்களுடன் சிறைச்சாலை யில் அடைபடுதற்கான உபாயம் ஏதாயினும் இருந் தாற் சொல்லுங்கள்; இல்லாவிடின், நாம் கொடுத்து வைத்தது இவ்வளவு தான். தாங்கள் என்பொருட் டுச் சிறையில் இழிவான மரணத்தை யடையவும், நான் தங்கள் பிரிவாற்றாமையால் ஆவியையிழக்கவுமே பிரமன் நமக்கு விதித்தது. ஐயோ! பாவி! போன ஜன்மத்தில் என்னபாவம் செய்தேனோ யான்.

விஜயமா: சோமி! நீ இவ்வாறு பிதற்றித் திரும் பவும் அழத்தொடங்குதல் சரியல்ல: நீ யிவ்வளவு

புத்தியீனமாய் நடந்துகொண்டால், உன் கல்விப் பயி
ற்சி விஷயத்தில் நானெடுத்துக்கொண்ட சிரமமும்
வீணையாகும். நமது பரஸ்பர ஸ்நேகத்தையொரு
வருக்கொருவர் கடிதமூலமாய்த் தெரிவித்துக்கொள்
ளக் கூடுமென் றெண்ணுகிறேன். நானிங்கிருந்து
வேறு சிறைச்சாலைக்குச் சென்ற பின்பு, அதற்கு
வேண்டிய ஏற்பாடுசெய்து, உனக்குக் கடிதம் எழுது
கிறேன். அப்பொழுதாவது நான் கூறுவதன் உண்மை
துலங்கி, என் ஸ்நேகத்தை நீ யறிவாய். நீ யேதாவது
முரட்டுத்தனமாய் உயிரைவிடும் பக்ஷத்தில், நானிவ்
வாறு என்னைச் சிறைப்படுத்திக் கொண்டது முற்றும்
வீணும். எங்ஙனமாயினும், சிறைமீண்ட பின் உன்
னுடன் சுகமாய் வாழலாமென்று நம்பியே, நானிவ்
வாறு வெளிப்பட்டது. உன் மனமுரண்டால் என்
ஆசையைக் கெடுப்பாயா? நான் இறந்துவிட்டே
னென்று உனக்கு நிச்சயமாய்த் தெரியும் வரை, நீ
யொன்றும் செய்வதில்லை யென்று எனக்குச் சபதம்
செய்து கொடு. இதே நானுன்னை வேண்டுவது.

சிவகாமி: ஆனால் தாங்கள் மீண்டுவந்து என்
னுடன் வாழ்வதற்கு நானோ தடை? உங்கள் க்ஷேம
சமாசாரம் கிடைத்துக்கொண்டிருக்கும் வரை என்னை
யாரேனும் வெட்டினாலும், என்னுயிர் போகாது.
தாங்களே என்னுயிர், அது என் கட்டையே.
ஐயோ! நான் என்னசெய்வேன்? என் மனம் பதறு
கின்றதே.

**விஜயமா:** என் கண்ணே! நீ சிறிதும் பயப்பட வேண்டாம்; தைரியமாயிரு; நீ யெப்பொழுதும் என்னைப்பற்றியே நினைத்துக்கொண்டிருந்தால், உன் துக்கம் அதிகரித்துக் கொண்டே யிருக்கும், உன் உடம்பும் கெட்டுப்போம். மனக்கவலையைத் தடுப்பதற்கு, மனத்துக்கு வேறு வேலையைக் கொடுப்பதைப்போல் நன்மருந்தொன்றுமில்லை. ஆகையால் நீ உன்மனத்தைப் படிப்பிற் செலுத்து; இராமாயணத்தையும் நைடதத்தையும் அரிச்சந்திர புராணத்தையும் வாசித்தால், சீதை தமையந்தி சந்திரமதி முதலியோர் உன்னிலும் எம்மடங்கு அதிகமான துயரத்தைச் சகித்திருந்து, கடைசியிற் சுகம்பெற்றனரென்பது உன் மனத்திற் பதியும்; அவர்கள் துயரங்களுக்குஅநுதாபப் படுவதில் உன் துக்கம் மறக்கப்படும், நீமட்டும்—,"

இதற்குள் வெளியிலிருந்து மணிகுலுக்கியசத்தம் செவியில் விழுந்தது. உடனே நம் கதாநாயகர், "ஸார், இதோ வந்துவிட்டேன்" என்று சொல்லிக் கொண்டே எழுந்து, சிவகாமி இன்னதென்றறியுமுன், அவளைத் தம்மார்புற இறுகத் தழுவி முத்தமிட்டு, "நான் திரும்பிவந்து முத்தமிடும் வரையும், இந்த முத்தத்தையே நினைந்து கொண்டு, தைரியமாயிருந்து, ஐந்து நாள்களாகக் கழித்துவிடு. என் கண்ணுட்டி! நான் போய் வருகிறேன்" என்று சொல்லிக் கொண்டே, அவளை நாற்காலியில் மெதுவாய் விட்டு விட்டு, "ஐயோ! அதற்குமுன் போகிறீர்களா, அத்தான்?" என்று அவள் கூறி முடியுமுன், கதவைத் திறந்து, வெளியே போம்

பொழுது திரும்பவும் கதவை மூடி விட்டுப் போய் விட்டார்.

"போய் வருகிறேன்!" ஆ! ஆ! இந்த வார்த்தை யை எங்கெங்கு எவரெவர் கூறினாலும், அது குறிக் கும் மனோதைரியத்தோடும் நம்பிக்கையோடும், மன வேக்கமும் அவநம்பிக்கையும் கூடவே கலந்து தொனி க்கின்றனவே! உலகத்திலே நெல்லறுக்கவும் புல்லறுக் கவும் காலம் ஏற்பட்டது போல, மனிதராகிய பயிரை யறுக்க நமனுக்கு ஒரு குறித்த காலமும் ஏற் படவில்லையே! ஒய்வொழிவின்றி, இராப் பகலின்றி, அவன் தன்னிஷ்டம் போல் அறுத்துக் கொண்டிருக் கிறானே! இவ்வண்ணம், காலை யிருந்தார் மாலையிறத் தலையும், முன்னொடி யிருந்தார் பின்னொடி யிறத்தலை யும், நாம் கண்டு கொண்டே இருக்கின்றோமாயினும், நாம் அவ்வாறு இறக்கமாட்டோமென்ற முழு நம்பிக் கையோடேயே, நம்மில் ஒவ்வொருவரும் ஒழுகுகின் றோம். இந்த நம்பிக்கையே, பிரஞ்சப் பிரவர்த்தியாகிய சக்கரம் ஓயாது சுழலுவதில் நழுவிவிடாது நிலை நிறுத் தும் அச்சாணியாம். சிருஷ்டியிற் பகுத்தறிவோடொ ழுகும் ஜீவகோடிகள் யாவும், இம்மாயை வயப்பட்டே வாழ்கின்றன. ஆகவே, நம் கதாநாயகர், தாம் சிறை யினின்றும் மீண்டு வரலாம் என்ற முழுநம்பிக்கை யோடேயே போனார்; அவர் காதலியும் அதை யொரு வாறு நம்பவே செய்தாள்.

வெளியே வந்து கடியாரத்தைப் பார்க்க, அவர் உட்சென்று அரை மணி நேரத்துக்கு மேலாயிருந்தது.

சிறைச்சாலை அதிகாரிக்குத் தம் வந்தனங்களை அளித்த பின்பு நம் கதாநாயகர், தம் நண்பராகிய வக்கீலோடும் சுந்தரத்தோடும் வேலாயுதத்தேவரோடும் தம் காதலியைப் பத்திரமாய்ப் பாதுகாத்துத் தாம் மீளும் வரையும் ஆதரிக்கும் விஷயத்தைப் பற்றி வெகு ஆவலுடன் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார். முதலில் வெகு நயமாயும் உருக்கமாயும் வேண்டிக் கொண்டதுமன்றி, தம்காதலியை மானமறுவன்றித் தாம் திரும்பிவந்த பின் தம்மிடத்தில் ஒப்புக் கொடுக்காவிடின், நியாயத்தையும் நல்லொழுக்கத்தையும் முற்றும்மறந்து, எப்பொழுதுமே மரணத்தைச் சிறிதும் அஞ்சாத தம் மறநெஞ்சின் வன்மைக்கியன்ற மட்டும் அவர்மேல் பழிவாங்குவது நிச்சயமென்று சபதம்செய்து, வேலாயுதத் தேவரைப் பயமுறுத்தினர்; ஆனால் இதற்கொன்றும் அவர் பதிற் பேசவேயில்லை; கடைசியில் மட்டும் "அப்பாட! எனக்கில்லாதது உமக்கு வந்திட்டுது" என்று முணுமுணுத்தார். இதற்குள் சிறைச்சாலை அதிகாரி துரிதஞ் செய்யவே, நம் கதாநாயகர், "சுந்தரம்! எல்லாரிலும் நீயே எனக்கு முக்கிய உத்தரவாதி; உன்னை நம்பியே என் சோமியை விட்டுவிட்டுப் போகிறேன்" என்று சொல்லி விட்டு விரைவாய்ச் சிறைச் சாலைக்குள் மறைந்து விட்டார். வக்கீலும், சுந்தரமும், கண்களில் நீர்ததும்ப, அவர் செல்வதைப் பார்த்துக் கொண்டே நின்றனர்; அறைக்குள்ளிருந்த சிவகாமியும், சன்னல் வழியாகத் தன் காதலர் செல்வதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தோ!

அவள் கண்ணீர் அவரை நன்றாகப் பார்க்கவும் இடந்தராது மறைத்தது. பின்பு அவள் மூர்ச்சையானவள் போல் ஒரு நாற்காலியில் ஆழ்ந்து விட்டாள். அவள் தந்தை, நம்கதாநாயகர் சுந்தரத்தோடு கூறிய கடைசி மொழிகளுக்குப் பதிலாக, "ஆமாம், ஆமாம்; இல்லாவிட்டாற் கூடவே கூட்டிக் கொண்டு போய் விடுவீர்" என்று தமக்குள் முணுமுணுத்துக் கொண்டார்.



## நான்காவது அதிகாரம்.



புலிபசிக்கினும் புல்லைத்தின்னுமா ?

புக்ககத்துக்குச் சென்ற ஒரு மாதத்திற்குள் மணவாளன் மடிந்தனனாக, பிறந்த வீட்டுக்குத் திரும்பி வந்து அளப்பரிய துயரத்தோடு அரிதிற் காலந்தள்ளும் வாலிபக் கைம்பெண்ணைப் போலவே, சிவகாமி தன் தாய்தந்தையரோடு வசித்து வந்தாள். கழுத்தில் ஒரு மஞ்சள் நூலிற்கோத்த சில கருமணிகளும், கையில் தன் காதலர் அணிந்த ஒரு சிறிய பொன் மோதிரமும் தவிர, வேறு நகை ஒன்றுமே கிடையாது! பட்டுச்சீலை கட்டுகிறதேயில்லை; தலைவாரிக் கொள்கிறதுமில்லை, நெற்றியில் பொட்டிட்டுக் கொள்ளுகிறதுமில்லை; புகுமனைக்குத் திரும்பி வந்து வீட்டுட்சென்றவன்று தன் வீட்டு வாசலைப் பார்த்தவள், மறுபடியும் அவ்வாசற் பக்கம் வரவே

யில்லை; முன் போல் வாசனை திரவியங்கள் மஞ்சள் முதலியன பூசி நீராடுகிறதில்லை; எண்ணெய் கூட அவள் தாயின் கட்டாயத்தின் பேரில் எப்பொழுதாவது மாதம் ஒரு முறை தேய்த்துக் குளிப்பதே துர்லபம்; அவளுக்குக் குழந்தைப் பருவம் தொட்டுத் தாம்பூலத்தின் மேல் மிகப் பிரியமே யெனினும், தன்னையகருடன் பருந்துக்கூட்டில் "தேன்மதி" கழிக்கும் பொழுதுகூட வெற்றிலையில்லாமையை ஒரு பெருங் குறையாக மதித்தனளெனினும், இப்பொழுது மிக சேர்த்தியான வெற்றிலையை வைத்துக் கொண்டு அவள் தாய்தந்தையர் எவ்வளவு கெஞ்சினபோதிலும், அதை முகமெடுத்துப் பார்க்கிறதேயில்லை; எப்பொழுதும் மூன்று வேளை போஜனமும் இருமுறை சிற்றுண்டிகள் பால் முதலியனவும் சாப்பிட்டு வளர்ந்தவள், இப்பொழுது ஆகாரத்தை இரண்டு வேளையாகக் குறைத்து விட்டாள்; அதுவும் நன்றாகச் சாப்பிடுகிறதுமில்லை, கண்ணீருடன் கலப்புறாத நாளும் கிடையாது; ஒருவருடனும் சரியானபடி பேசுகிறதில்லை: தன் தாய் தந்தையர் எவ்வளவு துக்கத்துடனும் அன்புடனும் தன்னுடன் பேசினும், அவர்கள் செய்யும் உபசாரத்துக்குப் பதிலாகத் தானும் அவர்களிடத்து அன்பு காட்டலே தகுதியென்று தானே பலதரம் நினைக்கினும், தனக்கும் தன் காதலருக்கும் நேர்ந்த கஷ்டங்களெல்லாம் அவர்களாலேயே விளைந்தவென்பதையும், அவர்கள் மட்டும் நியாயப்படித் தன்னை அவருக்கு விவாகம் செய்து கொடுத்திருப்பின் தானிப்பொழுது கிருஷ்ணாஜில்லாவில் ஒரு டிப்டிகலெக்டர் மனைவாட்டி

யாக அவருடன் வெகு சுகமாய் வாழ்ந்திருக்கக் கூடு மென்பதையும், அவளால் ஒரு கணமும் மறக்கமுடிய வில்லை, அவர்களைக் கண்டபொழுதெல்லாம் அவளுக்கு அடங்காக் கோபமும் மனக்கசப்பும் உண்டாயின; அவர்கள் செய்யும் உபசாரங்களும் கூறும் அன்புரை களும் தன்னைத் தங்களிஷ்டப்படி இணங்கச் செய்யும் பொருட்டான பொய்யுபசாரமும் மாயமொழிகளுமே யென்று வெறுத்தாள். இப்பொழுது அவள் திவ்விய சரீரம்,

"தேவு தெண்கடல் அமிழ்து கொண்டனங்கவேள்செ ய்த | பூவியம்புகை பொன்டதே யனையதாம மெய்யாள்"

என்ற வருணனையை ஒத்திருந்தது. செய்கைகளோ, பித்தர் செய்கைகளையே யொத்திருந்தன: கையிலிருந்த புஸ்தகம் நழுவி மடியிற் கிடக்க, கண்ணீர் தாரை தாரை யாக அதன்மேல் விழுந்து அதை மாசுப்படுத்த, எங் கேயோ வெகுதூரத்தில் இருக்கும் வஸ்துவைப் பார்ப் பாள் போல் முகமும் கையுமாய் வெறித்துப் பார்த் துக்கொண்டே யிருப்பாள். அப்பொழுது அங்கு வந்து போகுமவர்களைக்கூட அவள் கண்டதாகத் தோன்றாது. உண்மையில் அவள் நினைப்பெல்லாம் தன் நாதருடன் பருந்துக் கூட்டிற்கழித்த சில தினங் களைப் பற்றியே எப்பொழுது மிருந்தது. அவர் சொன்ன ஒவ்வொரு பிரிய வசனத்தையும், செய்த ஒவ்வொரு சரசலீலையையும் நினைந்து நினைந்து உருகாத வண்ணம் உருகினாள்; அப்பொழுது சில சமயங்களில் தான் வண்டத்தனமாய் ஊடினதையும், எதற்காயினும்

அவரைப் பழித்துப் பொய்ப்பூச விட்டதையும், தன் குழந்தைக்குறும்பால் அவருக்கு ஒருகால் உண்மையான மனவருத்தத்தைக் கூட உண்டுபண்ணினதையும் எண்ணி எண்ணிப் பரிதபித்தாள், வாய்விட்டு வெளி வந்த சொல்லையும், தெரிந்தோ தெரியாமலோ செய்த செய்கையையும், பின்பு எவ்வாறாறனும் ஒரு பொழுதுமே மாறமென்று தென்பதை நன்கறிந்து வருந்தினள். "ஐயோ! இவ்வாறு நிகழுமென்று கனவிலேனும் சமுசயித்திருந்தால், நான் எவ்வளவு அன்பும் ஆதரவும் பணிவுமாக நடந்திருப்பேன்; ஒருவிநாடியையேனும் வீண்போக்காது அவருடன் எவ்வளவு உல்லாசமாய்க் கழித்திருப்பேன், பாவியேன் தூக்கமே பெரிதாகச் சில நாட்களில் நான் அவர்க்குமுன் தூங்கியபடி செய்திருப்பேனே? அவர் தூங்கும்பொழுது கூட நான் இராமுழுக்க விழித்திருந்து அவர் மனமதவடிவழகைக் கண்குளிர மனம்பூரிக்கப் பார்த்துக்கொண்டே காலத்தைக் கழித்திருப்பேனே, பின்பு பாவியேன் தூங்குதற்கு இவ்வைந்து யுகங்களும் போதாவோ?" என்று பலவாறாக நினைந்து மனம்நொந்தாள். இக்கதி முன்னமே தெரிந்திருப்பின், அக்காலமும் கூடக் கண்ணீரும் கம்பலையுமாகவே கழிந்திருக்குமென்று அவளுக்குத் தோன்றவேயில்லை. அவள் தன் காதலருடன் கழித்தது சில தினங்களே யெனினும், அத்தனை வருஷங்களுக்கு இப்பொழுது அவகாசமிருப்பினும் நிகழ்ந்தனவற்றை யெல்லாம் போதுமானவாறு நினைந்து நினைந்து களிப்புறவும் துக்கிக்கவும் காலம் போதாதென்று தோன்றிற்று.

சில சமயங்களில் தான் கடைசியாகத் தன்னுடைய கணவரைச் சிறைச்சாலையிற் சந்தித்ததையும், அப்பொழுது நிகழ்ந்ததைப் பற்றியும் சிந்திப்பாள். முற்றிலும் கஷ்டப்படுபவர் அவராகவும் அக்கஷ்டங்களுக்கு ஏது தானாகவுமிருக்க, அவர் மனத்தைத் தேற்றுதற்குத் தான் ஆறுதல் செய்யாமல், தன் துயரகஷ்டத்தையும் துக்கத்தையும் பெரிதாக எடுத்துப் பாராட்டிச் சுயநயச் சிந்தையிலும் மமகாரத்திலுமே ஆழ்ந்தவளாய், அவர் துயரத்தைத் தான் மிகவும் அதிகரித்ததாக நினைந்து கிலேசமுறுவாள், அவர் அப்பொழுது கூறிய பிரிய மொழிகளுக்கேனும், தன்னிடம் விடைபெற்றுச் செல்லும்பொழுது அவர் தன்னைத் தழுவிக்கொண்டு முத்தமிட்டதற்கேனும் பதிலாகத் தன் காதலைத் தான் சிறிதுமே வெளியிடாது, மழையால் நனைப்புண்ட மண்சுவர்போற் கரைந்துகொண்டு சும்மா நின்றதை எண்ணியெண்ணி மனங்கரைவாள்; அவ்வரை மணிநேரமும் செக்குப்போலத் தான் அவர்மடிமீதே வீற்றிருந்து அவரைத் துன்புறுத்தியதாகக்கூட நினைந்து பரிதபிப்பாள். எச்சமயத்தை நினைந்தாலும், தான்செய்த தவ்வளவும் தவறாகவும் அவர் செய்த தனைத்தும் அளப்பரிய காதலையும்அன்பையும் குறிப்பனவாகவுமே தோற்றிற்று: ஆகவே, அவள் கரைகடந்த பரிதாபத்தையும் துயரத்தையும் அடைந்தாள்.

இவ்வாறு இரண்டுமூன்று மாதம் கழிந்த பின், காலக்கிரமத்தில் அவள் துக்கத்தின் தீவிரம் சிறிது மட்டுப்பட்டு, அவருரைத்த புத்திமதிகளும் தன்னிடம்

வேண்டிய சபதமும் அவள் நினைப்புக்குவந்து, தன் புஸ்தகங்களிலும் தன் சிறிய தம்பியிடத்திலும் அவள் சிறிது கவனத்தைச் செலுத்தத்தொடங்கியதுமன்றி, கடந்துபோனதை ஒருவராலுமே மாற்றமுடியாதென்ற உண்மை அவள் மனத்திற் பதியப்பதிய, தன் தாய் தந்தையரிடத்து முன்போலன்றிச் சிறிது மனக்குறைவுடன் பேசத் தொடங்கினாள். இதுகாறும் அவளது அளப்பரிய துயரத்தையும் பித்தரைப் போன்ற செய்கைகளையும் கண்டு அவளுக்கு ஒருவேளை இதே யேதுவாகப் பைத்தியம் பிடித்துவிடுமோ, அல்லது ஒருவேளை இறந்துபோவாளோ, அல்லது தற்கொலைசெய்துகொண்டு தன்னுயிரையும் துறந்து தங்களுக்கும் ஆபத்தை விளைத்துவிடுவாளோ என்று அவள் தாய் தந்தையர் மிகவும் பயந்திருந்தனர். இக்காரணத்தால் வேலாயுதத்தேவர் ஜமீன்தாருக்கு அதிக நம்பிக்கைக்கு இடங்கொடாமலும், தாம் அடிக்கடி அரமனைக்குப்போகாமலும், போ. சுப்பையர் தம் வீட்டுக்கு வந்தால் அவரை வீட்டினுள் வரவிடாமலும் வெகு கவலையுடன் நடந்துவந்தார். இப்பொழுது தம் மகள் துக்கம் சிறிது தணிந்து நடவடிக்கைகளும் சிறிது நிதானப்படவே, அவருடைய பழைய பேராசை கிளர்ந்தெழுந்தது; தம்பேரன் புலிமலை ஜமீன்தாராக வேண்டுமென்று மறுபடியும் விரும்பத் தொடங்கினார். அவர் மனைவி மருதியும் வெள்ளித்தாம்பாளங்களையும் பவுன் முடிப்புக்களையும் பனாரிஸ் பீதாம்பரங்களையும் விதம் விதமான நகைகளையும்பற்றி அடிக்கடி நினைக்கவும் பேசவும் ஆரம்பித்தாள். வீட்டில் நடக்

கும் ஒவ்வொரு பேச்சிலும் கலியாணமும் நகையும் கொண்டுவரப்பட்டன. யாதாலும் ஒரு விஷயத்தின் மேல் ஸ்திரீகள் மனம் வைத்துவிட்டால், அதையடை யும் வரையும் அவர்கள் அதைப்பற்றிப் பேசி அலட் டும் சாதுரியம் மிக வியக்கத்தக்கது. மனிதசுபாவத் தை மயக்கற நன்குணர்ந்த ஆங்கில நாடக கவியாகிய ஷேக்ஸ்பியர், இச்சாதுரியத்தை ஒரு பெண்ணின் வாய்மொழிமூலமாகவே நன்கு வருணித் திருக்கிறார். ஒதெல்லோ நாடகத்தில், குற்றவேற்பினி மித்தம் உத்தியோகத்தினின்றும் நீக்கப்பட்ட உப சேனாபதி காஸியோவுக்காகத் தன்னுடைய சேனா பதியிடம் 'சிபார்ச' செய்து வேலையைத் திரும்பவும் வாங்கித் தருவதாகக் காஸியோவுக்கு வாக்களிக்கும் டெஸ்டிமோனா என்பவள், தன்னுடையவரை இணங்கச் செய்யும் விதத்தைப் பற்றிப் பின்வருமாறு கூறு கிறாள்:—"என்னுடையவரை இடையறாது அலட்டுவேன்; அவர் படிபுமவரையும் தூங்கவிடாது, பொறுக்கமுடி யாமல் இணங்கும் வரையும் வாதாடுவேன், அவர் சய னத்தை ஒரு பள்ளிக்கூடம் போலவும், ஊண்மேசை யைப் பாவத்தை ஒப்புக்கொள்ளும் குருபீடம் போல வும் ஆக்குவேன், அவர் செய்கைகள் ஒவ்வொன்றி லும் காஸியோவின் முறையீட்டைக் கலப்பேன்: ஆகையால், காஸியோ, நீர் சந்தோஷமாயிரும்; உம்மு டைய வக்கீல் உம்முடைய கட்சியை இழப்பதினும், தான் சாகவேணுஞ் செய்வாள்."

நாகரீகமற்ற நாட்டுப்புறத்து மறத்தியாகிய மருதி, கலியாணத்தைப் பற்றித் தன்மகளை உபத்திர

வப்படுத்துவதில், மூடத்தனமாகவும், முரட்டுத்தன மாகவும், தன் மகளது உள்ள நிகழ்ச்சிகளையும் எண் ணங்களையும் மென் தன்மையையும், தற்காலத்தில் அவள் நெஞ்சு புண்பட்டுத் துயரக்கடலில் ஆழ்ந்தி ருப்பதையும், சிறிதுமே நினையாமலும் நடந்துகொண் டாள். சில சமயங்களில் அவள் சூளாகக் கூறிய சொற்கள், சிவகாமியின் மனத்திற் பாணம்போற் பாய்ந் தன. குழந்தை பால் வேண்டுமென்று அழுதால், "இம், ஒரு பசுவிருக்குது, அதுவும் உதைத்துவிட் டது; ஏழைக் குடும்பத்திலே பாலுக்கென்ன செய் கிறது? அன்னப்பால் கிடைப்பதே வருத்தமாயிருக் குது. எல்லாம் சிவகாமி மனசுவைத்தால் ஆயிரம்பசு வரும், வீடெல்லாம் பாலாயோடும். அவள் காலிலே போய் முட்டு, சனியனே" என்று சொல்லிக் குழந் தையைப் பிடித்துத் தள்ளித் திட்டுவாள். ஒருநாள் சிவகாமியின் தமையன் ஆறுமுகம் சாப்பிட்டுக்கொண் டிருக்கையில், திடீரென வானங்கறுத்துச் சிறிது நேரம் கோடைமழை பெய்யாநிற்க, பனையோலைகள் வேய்ந்த கூரையினின்றும் அவன் தலையில் இரண் டொரு சொட்டு மழை நீர் சொட்டிற்று. அதைக் கண்டு அவன் "சீக்கிரம் சோறு போடு, ஆத்தா(ள்) எளவுமழை ஒழுகுது" என்றான். உடனே மருதி "இம்! எல்லாம் அம்மாளுதயவில்லாமல் தான் இப் படிக் கட்டப்படவேண்டியிருக்குது. இல்லாவிட்டால் அப்போதே இந்தப் பாழுங்குடிசையை இடித்து அரமனை கட்டியாயிருக்கும். இன்னும் தானென்ன தவறியாபோச்சு? உன் தங்கச்சி தயவு வைத்தால்,

அடுத்தமாதம் அரமனையாய்விடும். தனக்கும் தெரியாமே, சொன்னாலும் கேளாமே உள்ள பிள்ளையை என்ன செய்யலாம்? பிள்ளை யென்றால் எல்லாம் பிள்ளையாமா? இதெல்லாம் அணிற்பிள்ளை தென்னம் பிள்ளை தான். 'அடீ! நம்மைப் பெற்றவர்களுக்காவது நம்கூடப் பிறந்தவர்களுக்காவது நம்மாலே என்ன சுகம்?' என்று மனசிலே தோன்றவேண்டாமா" என்று பல்லவி பாடத்தொடங்கினள். இம்மாதிரியான பேச்சுக்கள் ஒன்றுக்கும் சிவகாமி பதிற்பேசுகிறதேயில்லை. முதலில் சுந்தரம் எதிர்த்துவாதாட யத்தனித்ததைக்கூட அவள் தடுத்துவிட்டாள். ஆனால் அவள் மனத்துக்குள் மிகவும் நொந்து புண்பட்டாள். இதுவுமன்றி, அவள் தகப்பன், அரமனையையும் மகாராசாவையும்பற்றி அடிக்கடி பேசத்தொடங்கியதுமன்றி, விவாகத்தைப் பற்றியே மறுபடியும் விருப்புடன் அலட்டிப் பேசி, பே. சுப்பையரையும் தம்மகளுக்குப் புத்திகூறும்படி வீட்டுக்குள் அழைத்து வரத்தொடங்கினர். என்செய்வாள் சிவகாமி? தன் தாய்தந்தையரே தன் துக்கத்தைச் சிறிதும் கவனியாது இவ்வாறு ஒழுகினல், பின்பு யாரே தனக்கு ஆதரம், யாரிடம் சென்று முறையிடுவது? ஒவ்வொரு நிமிஷமும், ஓய்வொழிவின்றி, பொழுது புலர்ந்ததுமுதல் இரவில் நித்திரை போமளவும், காய்ச்சிய சலாகைகளைப் போற் காதுகளிற் பாயும் சூளுரைகளை எவ்வாறு எத்தனைநாள் சகித்திருப்பது? செஞ்சாலையினை 'வக்கீலுக்கு' எழுதுகிறதென்றால், அவர்

கள் பேச்சைத்தவிர வேறு குற்றமாகக் குறிப்பிடு தற்கோ ஒன்றுமில்லை; அன்றியும், தன் தாய்தந்தை யரைப் பழித்து அந்நியரொருவருக்கு எங்ஙனம் எழுதுகிறது? அவ்வாறு செய்வதினும் பிராணனை விடுவதே உசிதம். ஒருவேளை மானத்தைத் துறந்து எழுதினும், அவரால் என்ன செய்யக்கூடும்? ஆகவே, சுந்தரத்தைத் துணையாகக்கொண்டு வேறெங்காயினும் சென்று, கூலிவேலை செய்தாயினும் பிழைப்பதே சரி; ஏனெனின், தன்னுதர் தன்னிடத்துக் கடைசியாக வேண்டிய சபதத்தையும், அவர் சிறையினின்றும் அனுப்பிய கடிதத்தில் கூறியிருக்கும் புத்திமதியை யும் மறந்து, உயிர்துறத்தல் முழுமூடத்தனமே. சுந்தரத்துடன் தனியே சென்றால் உலகம் பழிக்கும் என்ற எண்ணம் அவள் மனத்தில் தோன்றவேயில்லை.

இவ்வண்ணம் பலவாறாக ஆலோசனைசெய்து, சிவ காமி, நாளொரு யுகமாக அரிதிற் காலங்கழித்து வரு கையில், தமது கோரிக்கை விரைவிற் கைகூடாததால் ஆத்திரமுற்ற வேலாயுதத்தேவரும் போ. சுப்பை யருமாக ஓர் ஆலோசனை செய்து, அவ்வாறு காரி யத்தை முடித்துவிடத் தீர்மானித்தார்கள். சிவகாமி சந்தேகமுறாதபடி, அவள் கடைசித்தம்பியின் இரண் டாவது பிறந்தநாளையே தங்கள் எண்ணத்தை நிறை வேற்றுதற்கேற்ற தினமாகக் கொண்டார்கள். சுந்த ரத்தால் ஏதாயினும் தடையுண்டாகாமல், வேலாயுதத் தேவர், அதற்கு முதல்நாளே அவனைக் குறவனூ ருக்கு ஒரு வேலையின்மேல் அனுப்பிவிட்டார்.

குழந்தை பிறந்த நாளன்று சுக்கிரவாரம். மாமிச பக்ஷணங்களுடன் வீட்டில் விருந்துச் சமையல் நடந்து கொண்டிருந்தது. எப்பொழுதுமே மாமிசத்தில் அதிகப் பிரியமில்லாதவளும், தன்னைத் சிறைப்பட்ட பின் அதை முற்றிலும் விலக்கியிருந்தவளுமாகிய சிவகாமி, அஃதொன்றையும் கவனிக்காமல், குழந்தையை மஞ்சன நீராட்டி, அதன் குஞ்சியை வாரிப் பின்னி, அதற்கு அலங்காரஞ் செய்துகொண்டிருந்தாள். வேலாயுதத்தேவரும் அவர் மனைவியும் குழந்தையுடன் முருகன் குன்றுக்குச் சென்று சுவாமிதரிசனம் செய்து வரவேண்டுமென்று பேசிக்கொண்டிருந்தார்கள். சிவகாமியை அழைத்ததற்கு, அவள், தான் வரவில்லையென்று சொல்ல, அவர்களும் அவளை உபத்திரவப்படுத்தவில்லை. காலையிற் பத்து மணி சுமாருக்கு ஆலயத்துக்குச் செல்லுமாறு, மருதி, சிவகாமி வைத்திருந்த குழந்தையை வாங்கித் தன் இடுப்பில் வைத்துக்கொண்டு புறப்படாநிற்க, குழந்தை, வீட்டுவாசல் தாண்டும்பொழுது திடீரென்று கதறி அழுதது. அதை அவசகுனமாகக் கொண்டு வீட்டுள் மீண்டுவந்து, குழந்தையைச் சமாதானப்படுத்த, சிவகாமி எடுத்துக்கொண்ட பின்புதான் அது சமாதானமாயிற்று. சற்றுநேரம் பொறுத்து மருதி மறுபடியும் குழந்தையை வாங்கிக்கொண்டு புறப்படவே, மறுபடியும் அவசகுனம்போல் வாசற்படி தாண்டும்பொழுதே குழந்தை அழத் தொடங்கிற்று. யாரும் அறியாமல் அடித் தொடையை நிமிட்டி

னால் எக்குழந்தைதான் அழாது? திரும்பவும் சிவகாமி வாங்கிச் சமாதானப்படுத்தவேண்டியதாயிற்று. மூன்று முறை தன்தாயினிடம் போவதற்கே விருப்பமின்றிக் குழந்தை அழாநிற்க, வாசலில் நின்று, பொழுதாயிற்று என்றும் கோவில் நடை யடைத்துவிடுவார்களென்றும் வேலாயுதத்தேவர் அவசரப்படுத்தா நிற்க, மருதி, தானே குழந்தையை எடுத்துவரும்படி சிவகாமியை வருந்தி வேண்டினாள். வெளிச்செல்வதில் மிக்க வெறுப்புடையவளாயினும், தற்கால முகாந்தரத்தையும் அவசரத்தையும் நினைத்தும், தன் தம்பிமேலுள்ள வாஞ்சையால் தூண்டப்பட்டும், காரியம்சுவாமிதரிசனமே என்பதைக்கருதியும், சிவகாமி ஒருவாறு உடம்பட்டுக் குழந்தையுடன் புறப்பட்டாள். அவள் வேறு சேலை கட்டிக்கொண்டு சில நகைகள் அணிந்து கொள்ளவேண்டுமென்று அவள் தாய் சொன்னதையும், ஒரு வண்டி கொண்டுவருவதாக அவள் தகப்பன் சொன்னதையும், மறுத்துத் தடுத்துவிட்டு, கால்நடையாகவே அவர்களுடன் குமரன் கோயிலுக்குச் சென்றாள். தெருவழியே போகையில், தன்னைத் "தாதவிழ் கூந்தல் மாதர் தனித்தனி நோக்கத் தான் அப், பூதலம் என்னும் நங்கை தன்னையே நோக்கிப் புக்காள்." வெகு நாட்களாக வீட்டுள்ளேயே இருந்து வெளிப்போந்தது அவளுக்கு வெட்கத்தையும் பயத்தையும் உண்டுபண்ணிற்று; பலவீனத்தாலுங் கற்கள் உறுத்துவதனாலும் அவள்நடை தளர்வுற்றது; அவள் கோயிலைச் சென்றடைவது அரிதாயிற்று. அர்ச்சகர்

களைத் தவிர, கோயிலில் பேர. சுப்பையரும், புளிமலைப் புரோகிதரும், இரண்டொரு வைதிகப்பிராமணரும், அரமனை வேலைக்காரர் இருவரும் இருந்தார்கள். சுவாமி தரிசனார்த்தமாக அவர்கள் வந்திருந்தார்க ளென்று சிவகாமி நினைத்தாள். வழி நடந்து வந்த இளைப்பாறும்பொருட்டு முன் மண்டபத்தில் எல்லா ரும் உட்கார்ந்தவுடன், சுப்பையரும் இவர்கள் பக்கத் தில் வந்துட்கார்ந்தார். உடனே அவரும் வேலா யுதத் தேவரும் சிவகாமியின் கலியாணப் பேச்சைப் பற்றிப் பேசத் தொடங்கி, சிறிது நேரத்தில் சிவ காமியை வீரசங்கிலி மகாராசாவுக்கு மணம்புரிவது சரியா இல்லையாவென்று குமரக்கடவுள் பாதத்தில் பூக்கட்டிப் போட்டுப் பார்க்கிறதென்று நிர்மானித் தார்கள். சிவகாமி வாய்திறக்கவேயில்லை. அப் படியே பூக்கட்டிப்போட்டுப் பார்க்க, விவாகம் உத்தம மென்று கடவுளது உத்திரவு கிடைத்தது. அதுகூட இல்லாவிடின், சுப்பையர் முன்னதாகவே கோயிலுக்கு வந்ததின் பயன்தானென்ன? இதற்குள், இரண்டு குதிரைகள் கட்டிய அரமனைவண்டியொன்று கோயில் வாசலில் வந்து நின்றது. வண்டியைக் கண்டவுடன் யாவரும் எழுந்திற்க, அதிலிருந்து ஜமீன்தார் வீரசங் கிலித்தேவர் இறங்கிவந்தார், ஒரு வேலைக்காரன் ஒரு பெரிய உருக்குப்பெட்டியை எடுத்துவந்து அவர் முன்பு வைத்தான்.

ஜமீன்தார்: என்ன, அம்மான்! உங்கள் மகளுக் குச் சம்மதந்தானே?

வேலாயுதத்தேவர்: இப்பொழுதுதான் பூக்கட்டிப்போட்டுப் பார்த்தோம். நல்ல உத்திரவே கிடைத்திருக்குது. இனி அவள் தடைசொல்ல நியாயமில்லை.

ஜமீன்: என்ன, சுப்பையரே! எல்லாம் தயாராயிருக்குதா?

போ. சு: சந்நிதானம் வரவேண்டியதுதான் பாக்கியாயிருந்தது. வாத்தியார் இரண்டு நாழிகைக்கு முன்பே தயார். மகாராசாவும் சிவகாமசுந்தரி நாச்சியாரும் திருக்குளத்தில் ஸ்நாநம் செய்து வரலாம்" என்றார்.

இதனிடையே, ஜமீன்தார், பெட்டியைத்திறந்து தமக்கு ஒரு சரிகைப் பீதாம்பரமும், சிவகாமிக்கு ஒரு விலையுயர்ந்த பீதாம்பரமும் ரவிக்கையும், இருவருக்கும் அனேக ஆபரணங்களும், மற்றுமுள்ளவர்களுக்கு வேஷ்டிகளும் எடுத்து வெளியே வைத்துவிட்டு, மங்கள ஸ்நாநத்துக் கெழுந்தார். மருதி, தன்மகளை நோக்கி, "அம்மா சிவகாமி! இனித் தாமதிக்கக்கூடாது; சாமிகூட உத்திரவு கொடுத்துவிட்டது; மகாராசா குளத்துக்குப் போய் விட்டார்கள்; உச்சிப்பொழுதுக்கு முகூர்த்தம் பார்த்திருக்கிறார்களாம்; பொழுதாச்சு, வா, குளத்துக்குவா" என்று கையைப்பிடித்து மெதுவாயிழுத்தாள். இவ்வளவையும் இடியுற்ற அரவம்போலப் பிரமித்துப் பார்த்துக்கொண்டிருந்த சிவகாமி, தன் தாய் தன்னை இழுப்பதையும், தன்னை மோசஞ்செய்து கொண்டுவந்திருப்பதையும், தன்

அபிப்பிராயத்தையே கேளாது காரியங்களை மேல் நடத்துவதையும் கவனித்து, தன்னை யொருகால் வலாற்காரமாகப் பிடித்து உபத்திரவப்படுத்தித் தாலியைக்கட்டி விடுவார்களோ என்றுநினைந்து,மனமேங்கித் திடீரென மூர்ச்சையாகி, அடியற்ற மரம்போல் கிழே விழுந்துவிட்டாள். அவளை யுடனே குளக்கரைக்குத் தூக்கிச் சென்று, முகத்தில் நீரைவீசிக் களைப்பாற்றினார்கள். சிறிது மதிதெளிந்து அவள் கண்களைத் திறந்தவுடன், எருமைக்கடாப்போல் வீரசங்கிலித்தேவர் குளத்தில் நின்று நீராடுவதையும், வைக்கோற்போர்போன்ற அவர் மயிர்செறிந்த தொந்தியை ஒரு வேலைக்காரன் அழுக்குத் தேய்ப்பதையுமே கண்டு, மறுபடியும் கண்களை மூடிக்கொண்டுவிட்டாள். அவள் வாடிமெலிந்த அழகிய தேகத்தையும், சோர்வையும், வீரசங்கிலித்தேவரையும், அப்பொழுது யாவரே பார்க்கினும், அவளுக்காக அநுதாபப்பட்டு இரங்குவார்களென்பதிற் சந்தேகமில்லை. அவளைப் பெற்றோர்க்கும் சுப்பையருக்கும் அங்கு வந்திருந்த வைதிகர்களுக்கும் மாத்திரம் சிறிதேனும் இரக்கமுண்டாகாமைக்கு, எமக்கு ஒரு முகாந்தரமும் தோன்றவில்லை. அவள் மறுபடியும் கண்ணை விழித்தவுடன், வீரசங்கிலித்தேவர், அவள் தம்மைக்கண்டு மோகமுற்றே சோர்ந்தவளென நினைந்தவர்போல, தம்மை அவள் நோக்குகின்றனளோவென்று அவளைத் திரும்பித் திரும்பிப் பாரப்பதும், தாமே தம்மைப்பார்த்து மகிழ்ந்துகொள்வதுமாகவிருந்தார். உலகத்தில் மாந்தர்

உட்பட்டுழலும் பல மாயைகளுள், தம் குறைகளைத் தாமறியாமை ஒன்று. எவ்வளவு விகாரரூபியாயிருப்பினும், கண்ணாடியைக் கண்டவுடன் தம் அழகைப் பார்த்துத் தாமே சந்தோஷமடைவது இருபாலார்க்கும் பொதுவான வழக்கம்.

"சுருக்கவிழ்ந்த முன்குடுமிச் சோழியா, சோற்றுப்
பொருக்குலர்ந்த வாயா, புலவா,—திருக்குடந்தைக்
கோட்டானே, நாயே, குரங்கே, உனையொருத்தி
போட்டாளே வேலையற்றுப் போய்!"

என்று, தன் முகத்தைக் கண்ணாடியிற் பார்த்துத் தன்னையே பழித்துக்கொண்டதாக, ஒரு புலவனைப் பற்றிக் கதை கேட்டுளோமேயன்றி, அத்தகையாரை நேரிற் கண்டிலேம். அம்மட்டுமோ, பொறுத்தற்கரிய நோவைப் பொறுத்துக் கொண்டு நரைமயிரை ஒவ்வொன்றாய் மூட்டோடு பிடுங்கி யெறியும் வாலிபக் கிழவரையும், நவ்வற்பழம் போன்ற நிறத்தினராயிருந்துங்கூடச் சாந்துப் பொட்டிட்டுக் கொள்பவரையும், சுருக்குவிழுந்து கிழமாகிய முகம் பளபளப்பாகக் காணவேண்டுமென்று வெளியே செல்கையில் முகத்திற் சிறிது தைலத்தைத் தடவிக் கொள்பவரையும், பலவிதமாகவும் தம் கிழத்தனத்தை மறைத்துச் சிங்காரஞ்செய்து கொள்பவரையும், தம்மைக்காணும் பெண்களெல்லாம் தம்மேற் காதலுறுவதாக நம்பியொழுகுபவரையும், "நான் கிழவன்" என்று பரிகாசமாக விபரீத அர்த்தம்படும்படி பேசுபவரையும், வாலிபம் நீங்கியும் வாலிபருக்குரிய சின்னங்களை விடாது

கைப்பற்றி வருபவரையும், எங்கெங்கும் ஏராளமாய்க் காண்கின்றோம். இம்மயக்கநோய், ஸ்திரீ புருஷர் இருவருக்கும் பொதுவானதே. ஆகவே, புருஷ மோகினிபோன்ற விஜயமார்த்தாண்டச் சேவகனுடன் மதனுடன் ரதியைப்போல அநுபவித்துப் பிரிவாற்று மையால் உயிரைத் துறக்கத் துணிந்துகொண்டிருக் கும் மாதுசிரோமணி, தம் திவ்ய சொரூபத்தையும் காந்தியையும் குணாதிசயங்களையுங்கண்டு தம்மேற் காதலுறக் கூடுமென்று வீரசங்கிலித் தேவரெண்ணு வதும், இயற்கைவிரோதமன்று.

சிவகாமி மறுபடியும் கண்ணைத்திறக்குமுன், தான் இன்ன செய்வதென்று தனக்குள் தீர்மானித்துவிட் டாள். அவளுக்குப் பலவிதமாய்ப் போதித்து அவள் தாய் அவளை நீராட அழைத்தவுடன், மனமிசைந்த வள்போலெழுந்து குளத்துப் படிக்கட்டிலிறங்கினாள். அதைக் கண்டு யாவரும் உள்ளங்களித்தனர். ஆனாற் சிவகாமியோ, மஞ்சளைத் தேய்த்தும், உடம்பிலுள்ள அழுக்கைத் துடைத்தும், மெய்யாகவே நீராடுபவள் போற் பாசாங்கு செய்து, ஒருவரும் தன்னைக் கவ னிக்கவில்லை யென்று தானெண்ணியவுடன், திடீ ரென்று தன்னால் நிலைக்கமுடியாத அளவு ஆழமான நீரிற் பாய்ந்துவிட்டாள். அவளுக்கோ நீந்தத்தெரி யாது. சற்று நேரத்துக்குப்பின், அவள் ஆழமான நீரிற் கடைசியாக ஆழ்வதைச் சுப்பையர் கண்டு, கூக் குரலிட்டுக்கொண்டு குளத்துட்குதித்தார்; சில வேலைக் காரரும் அவருடன் குதித்து, எல்லாருமாகச் சிவ

காமியைப் பிரேதம்போல் வெளியே இழுத்துவந்த னர். அவள் தாய்தந்தையர் கோவென்றலறி வாயி லும் வயிற்றிலும் அடித்து அழுததையும், தமக்கே தானும் தண்டனை வந்துவிடுமோ என்று நடுநடுங்கி ஜமீன்தார் வாய்குழறிப் பிதற்றியதையும், எம்மால் விவரிக்கமுடியாது. சுப்பையர் மட்டும் மனதைரியத் தைக் கைவிடாது, சிவகாமியை ஜமீன்தார் குதிரை வண்டியிற் போட்டுக்கொண்டு, அவள் பெற்றாருடன் குயவன் வீட்டுக்கு வேகமாய்ச் சென்றார். ஆகவே, வேலாயுதத்தேவரும் அவர் மனைவியும் கோவிலுக்குச் செல்லும்பொழுது எண்ணி எதிர்பார்த்திருந்தவாறு, அவர்கள் மகள், கோவிலைவிட்டுத் திரும்பும்பொழுது மகராசா குதிரைவண்டியிலேறியே சென்றாள்; ஆனால், முற்றிலும் அவர்கள் நினைத்த வண்ணம் மட்டுமில்லை. ஒரு மூடு பல்லக்கை வரவழைத்து, ஜமீன்தார், அதி லேறி அரமனை போய்ச்சேர்ந்தார். வைதிகப் பிரா மணரும் கோவில் வேலைக்காரரும் 'கைக்கெட்டியது வாய்க்கெட்டவில்லை' என்று பலவாறாகப் பேசிக் கொண்டு, கோவில் நடையை மூடிவிட்டு, ஏமாந்தவர் களாய் ஊரைநோக்கிப் புறப்பட்டனர். புரோகிதர் மட்டும், ஒருவேளை அபரகிரியைகளுக்கு அழைக்கு முன் பகற்சாப்பாட்டை முடித்துக்கொள்ளாவிடின் அன்று ஏகாதசியாகிவிடுமென்று பயந்து, ஓட்டமாய்த் தம் வீடு போய்ச்சேர்ந்தார்.

## ஐந்தாவது அதிகாரம்.

### வேலியே தின்றால் தெய்வமே காவல்.



சிவகாமி பிழைத்தது மறு பிறப்பென்று யாவரும் ஆச்சரியப்பட்டார்கள்; நிகழ்ந்த விருத்தாந்தம் ஊரெங்கும் ஒன்று பத்து நாளாகப்பரவி, அவள் தாய் தந்தையரையும் ஜமீன்தாரையும் கூடப் பழித்தார்கள்; சுந்தரம் குறவளூரிலிருந்து திரும்பிவந்து சமாசாரத்தைச் செவியுற்றவுடன், செஞ்சாலியிளைக்குச் சென்று 'கலெக்டர்' துரையிடத்தும் 'வக்கீலி'டத்தும் தெரிவிப்பதாகப் புறப்பட்டான்; ஆனால், சிவகாமியே அவனைத் தடுத்து விட்டாள். தன்னெண்ணம் நிறைவேறாமற் போனதைப்பற்றி அவள் மிக்க கிலேசத்தை யடைந்தாள். ஒவ்வொரு பேச்சிலும், அவள் தாய்தந்தையர், தம் மனக்கசப்பையும் அதிருப்தியையும் வெகு சூளாகக் காட்டத்தொடங்கினர். இனி அவர்களுடன் ஒரே கூரையின் கீழ் வாழ்ந்துவருவது முடியாதென்று, அவள் மனத்திற்பட்டது. ஆகவே, நிகழ்ந்ததைச் செஞ்சாலியிளைக்குத் தெரிவித்து, அசங்கியமான உபத்திரவங்களை அவர்களுக்கு விளைப்பதினும், சமயம் பார்த்துத் தான் வெளியேறிவிடுவதே உசிதம் என்று நிச்சயித்தாள். தன்னாயகரிடமிருந்து முதலிற்கிடைத்த ஒரு நிருபத்தைத் தவிர, பின்பு ஒன்றுமே தெரிய வரவில்லை. அந்தச் சமாசாரம் போ. சுப்பையருக்

கன்றோ நன்குதெரியும். சுப்பையர் வந்த கடிதங் களைத் தன்னிடம் தராது மறைத்திருப்பாரென்று, சிவகாமிக்குச் சந்தேகமுண்டு. அதன் நிமித்தமும், செஞ்சாலியிலேக்குச் சென்று தன் காதலாது நண்பர் மூலமாக அவர் க்ஷேமத்தை அறிதல் நலமென்று நினைத்தாள். ஆயினும், தன்னை விட்டு ஒரு கணமேனும் பிரியச் சம்மதியாத தன் சிறிய தம்பியின்மேலுள்ள வாஞ்சையும், கையிற் காசின்றி அயலூர் சென்று பிறர் கையை எதிர்பார்த்துப் பிழைப்பதைப்பற்றிய மன வெறுப்பும், பயமும், அவளைச் சில நாட்களாகத் தடுத்துத் தங்கச்செய்தன; பிற்கூறும் வர்த்தமானத் தாற் கடைசியில் உத்தேசம் நிறைவேறிற்று.

வைகாசி விசாகத்தன்று, இப்பொழுது சிலவரு ஷங்களாகத் தடைப்பட்டிருந்த பழைய வழக்கம் போல, அரமனையில், ஜமீன் குடிகளுக்கெல்லாம், பெரிய விருந்து மறுபடியும் நடந்தது. அயலூரிலிருந்து பல குடிகள், அவ்விருந்துக்கும், அன்று நிகழும் குமரன் திருவிழாவுக்கும் வருவதுமன்றி, ஊரிலுள்ள குடிகள் அனைவரும் ஆண்பெண் என்ற வித்தியாசமின்றி, அர மனையிலேயே, அன்று இருபொழுதும் விருந்தாடுவது வழக்கம். அவ்வாறு அரமனைக்குச் செல்ல விரும்பா தார், அத்தினம் அவ்வூரிலிராமல் வெளியூர்களுக்குப் போய்விடுவதுண்டு. இவற்றை யெல்லாம் சிவகாமி அறிந்தவளாயினும் முன்னடந்த வத்திற்குப் பின்புத் தன்னை யாரும் கட்டாயப் படுத்தமாட்டார்களென்று எண்ணியிருந்தாள். அவ்வாறின்றி, அவள் தாய்தந்

தையர், புராதன வழக்கமென்றும், சாதிக் கட்டென்றும், வெகுநாளைச் சுதந்தரமென்றும், தமக்குத் துன்பம்நேருமென்றும், பலவாறாக உபத்திரவப்படுத்தினது மன்றி, ஜமீன்தார் மூத்தமனைவியாகிய பெரியநாச்சியாரே, ஒருநாளும் வழக்கமில்லாதபடி, அவள் வீட்டுக்கு வந்து, சிவகாமியை வருந்தியழைத்துச் சென்றாள். ஆயினும், சுடுபால்குடித்த பூனையைப்போல, என்ன நேருவதாயினும் தான் போவதில்லையென்று சிவகாமி சாதித்துவிட்டாள். ஜமீன் குடிகள் அனைவரும் வந்திருக்கும் பெருங்கூட்டத்தில், வேண்டுமெனினும் அவளை யொருவராலும் ஒன்றுஞ் செய்யொண்ணாதென்று அவள் தாய்தந்தையர் கூறியதையும், அவள் நம்பவில்லை. முடிவில், அவளைமட்டும் தனியாக வீட்டில் விட்டுவிட்டு, மற்ற யாவரும் அரமனைக்குப் போய் விட்டார்கள். சுந்தரம், கோயிலும் வீடும் ஊருமாக வேடிக்கையாய்த் திரிந்து கொண்டிருந்தான். அரமனையிலிருந்து தனக்குச் சாப்பாடு அனுப்புவதாகத் தன் தாயசொன்னதை முற்றிலும் மறுத்துவிட்டு, சிவகாமி தனக்கு இருபொழுதுக்கும் போதுமான அளவு பகலிலேயே சமையல் செய்துகொண்டாள். வீட்டில் ஒருவரும் இல்லாமையால், அதிலும் தன் சிறியதம்பி இல்லாமையால், அவளுக்குப் பொழுது போகவில்லை. வாசற்கதவைத் தாளிட்டுவிட்டு, தன்னையகர் அனுப்பிய கடிதத்தை எடுத்து வாசிப்பதும், அவரைப் பற்றியும் தன் தற்காலநிலைமையைப் பற்றியும் சிந்திப்பதும், அழுவதும், சந்தோஷப்படுவதுமாக, சிறிது

நேரத்தைப் போக்கினாள். பின்பு, சுந்தரம் ஒருமுறை வந்து, திருவிழாவையும் வந்திருப்பவர்களையும் பற்றிச் சிறிது பேசிக்கொண்டிருந்துவிட்டுப் போனான். இவ்வாறாக அரிதிற் பகற்பொழுது கழிந்தது. விளக்கேற்றியவுடன், இராவூண் கழித்துவிட்டு, குறைப்பொழுதையும் படித்துப் போக்குவதென்று தீர்மானித்தாள். ஏனெனின், குமரன்கோயிலில் வள்ளிநாடகம் பார்த்துவிட்டு, தன் வீட்டார் விடியற்காலம்தான் வருவார்களென்று அவளுக்குத் தெரிந்திருப்பினும், தனக்கு வாக்களித்துச் சென்ற தன் அண்ணி பத்துமணிக்கு வந்துவிடுவாள், அவள் வரும்வரை வாசித்துக்கொண்டிருக்கலாமென்பது, அவள் உத்தேசம். ஆகவே, "கம்பராமாயண"த்தை எடுத்துத் திருப்பினாள்;

"பஞ்சமங்கு தீயின் ஆவி பற்றுசீறு கொற்றவில்
வெஞ்சரங்கள் நெஞ்சரங்க வெய்யகாமன் எய்யவே
சஞ்சலம் கலந்தபோது தையலாரை உய்யவந்து
அஞ்சல் அஞ்சல் என்கிலாத ஆண்மையென்ன ஆண்மையே"

என்று பிராட்டியார் விரகதாபத்தால் வருந்தும் செய்யுள், முதலில் தென்பட்டது. உடனே அதை மூடியெறிந்துவிட்டு, சிறிதுநேரம் தன் நாயகனை நினைந்து அழுது கொண்டிருந்தாள். பின்பு, கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, தன் துயரத்தை மறக்க எண்ணி, வேறொரு புஸ்தகத்தை எடுத்தாள். அது 'கலிங்கத்துப்பரணி" யாயிருந்தது. அதைத் திருப்பியவுடன்,

"வருவார் கொழுநர் எனத் திறந்தும்
வாரார் கொழுநர் என அடைத்தும்
திருகு குடுமி விடியளவும்
தேயும் கபாடம் திறமினோ"

என்ற பாட்டுத் தென்பட்டது. உடனே அதை எறிந்து விட்டு "தனிப்பாடல்" என்ற புஸ்தகத்தை எடுத்துத் திருப்பினாள்:

'ஆழிவாய்ச் சததம் அடங்காதோ, யான்வளர்த்த
கோழிவாய் மண்கூறு கொண்டதோ,—ஊழி
திரண்டதோ கங்குல், தினகரன்தன் தேரும்
உருண்டதோ பாதாளத் துள்"

என்ற கவியைக்கண்டு, அதையும் எறிந்துவிட்டு, வேறொரு புத்தகத்தை எடுத்துத் திருப்பினாள். இதென்ன சாபமோ!

"கழலா வளையும் கனலா மதியும்
உழலா மனனும் பெறுநாள் உளதோ
மழவே றனையான் மருவா விரகத்
தழலால் உருகும் தமியேன் இனியே"

என்ற பாட்டு அகப்பட்டது. உடனே புஸ்தகத்தை எறிந்துவிட் டெழுந்துபோய், முற்றத்தில் ஒரு நார்க் கட்டிலின் மேலுட்கார்ந்தாள். நிலவெறிப்பதைக் கண்டு மேல்நோக்க, தம்மிருகைகளையும் தழுவிக்கொள் வதற்கு இசைவாக நீட்டிச் சிறிது வளைத்துக்கொண்டு, சந்திரனைநோக்கி, "ஏ தாராபதி! நீயோ இருபத்தேழு நாளுக்கு ஒருமுறையே எங்களை முகமெடுத்துப் பார்க் கின்றாய்; அவ்வொரு நாள் நிகழும் சல்லாபசுகத்தை.

நினைந்து நினைந்து. யாம், மற்ற இருபத்தாறு நாட்களை யும் போக்கவேண்டி யிருக்கின்றது; அப்படியிருக்க, எமக்குள் வந்துசேர்ந்து நிகரற்ற ஆலிங்கனசுகத்தை எமக்களியாது, நீ, எமக்குரிய இத்தினத்திலும், ஸ்திரீ முகமே பார்த்தறியாச் சிறுவன் போல், நாணி யொ துங்கிச் சிறிது தூரத்தில் நிற்பது ஏனோ? இது தகுமோ? இது சரியோ? இது தருமந்தானோ? விரை விற் பொழுது வீண்கழிவதை எண்ணி, நீ இரங்கா யோ? இவ்விருபத்தாறுநாட்களையும், நாளொருயுகமாக, ஒன்றுகழிந்தது, இரண்டு கழிந்தது, இன்னும் ஆறுநா ளே இன்னும் நாலு நாளே என்று, எண்ணாத எண்ண மெல்லாம் எண்ணியெண்ணி யாம் எதிர்பார்த்திருந்த தெல்லாம், இதற்கேயோ? அடா பாவி! பழி காரா! பஞ்சமகா பாதகா! உனக்கேது இரக் கம்? பிறந்த வீட்டையே குழப்பிக்கலைக்கி, உடன் பிறந்தாள் வீட்டையும் அடைக்கச்செய்து, பிரி வுற்ற பேதைப் பெண்களின் பாவங்களை யெல்லாம் கொட்டிக்கொண்டு, அவமே அமுதகதிரோன் என்று பேர்பூண்டு திரியும் கரிநெஞ்சக் கயவனன்றோ நீ? அன்றேல், ஒருகால் இன்றெம்முடன் கூடிச் சுகித்தால், நாளை உன்னைத் தெற்ககத்து வில்லிவீட்டுக் குச் செல்லவிடமாட்டோ மென்று, அஞ்சுகின்றனை யோ? பிரிவாற்றுமையின் கொடுமையை நன்கறிந் துள்ள யாம், ஒரு பொழுதும் அவ்வாறு செய்யேம். யாம் ஓரவஞ்சகம் செய்வதில்லை. ஆகையினால், எப்ராணேசா! வந்துவிடு, ஓடிவந்துவிடு" என்று

சொல்லி அழைப்பனபோல் விசாக நக்ஷத்திரங்கள் பிரகாசித்துக் கொண்டிருந்தன. அம் புலியோ "பெண்கள் மாயப் பேச்சை யெல்லாம் நான் வெகுநாளாக அறிவேன். ஒருபொழுதும் நும் மாய வலைக்குள் நான் சிக்கிக்கொள்ள மாட்டேன். ஐயோ! பெண்கள் நிமித்தம் யான் பட்டபாடு யாவரே பட்டார்? நான் தேய்ந்து வளர்ந்து கொண்டிருக்குமளவும், சூடு போட்டாற்போல், எனக்கு ஒருநாளும் அது மறந்து போகாது. தயவிருந்தாற் போதும்; முழும்போட்டே பேசுவோம்" என்று பதிலுரைத்துச் சிரிப்பான்போல், அதிதாவள்ளியமாய்த் தன் வெள்ளிய சில்லெனும் கதிர்களை எங்கும் பரப்பிக்கொண்டிருந்தான்.

ஆகாசத்தின் அழகைக் கண்ணுற்றவுடன், பருந்துக் கூட்டில் தன் காதலருடன் தான் கழித்த கடைசி இரவு, சிவகாமிக்கு நினைவுவந்தது. அப்பொழுது நிகழ்ந்ததை யெல்லாம் எண்ணி யெண்ணி மனம்பூரித்தும் தியங்கியும் பெருமூச்செறிந்து உருகினாள். அவர்மட்டும் தன்னுடனிருந்தால், மனக்கசப்பையும் துன்பத்தையுமே தரும் அந்நிலவு எவ்வளவு மனோரம்மியமா யிருக்குமென்பதையும், அவ்விஷயமாக அவருரைத்ததையும்பற்றி யுன்னினாள்., அவர்மட்டும் தன்னுடனிருந்தால்! ஆகா! அந்நினைவெழவே, ஒரு விநாடிக்கு அவர் தன்பக்கத்திலிருப்பதுபோலக் கண்ணுக்குத் தோற்றிற்று; அளப்பரிய ஆசையுடன் ஆகாயத்தை அணைத்துக்கொண்டாள். அச்சமயத்தில் யாவரோ வாசற்கதவைத் தட்டிய சத்தம் கேட்டது.

உடனே எழுந்து சென்று, தன் அண்ணியென் றெண்ணி, கதவைத் திறந்தாள்; வீரசங்கிலித்தேவர் பொருக்கென உள்ளே நுழைந்து, கதவைத் திரும்ப வும் தாளிட்டுக்கொண்டார். அவளுக்கு அப்பொழு துண்டான கோபத்தை எம்மால் எடுத்தெழுத முடி யாது. ஐந்தாறு வருஷங்களுக்கிடையில், அவள் அவருடன் நேரிற் பேசினதேயில்லை. அப்படியிருந் தும், காலம் இரவாகவும் தான் தனியாகவும் இருந் தும், அவளுக்கு அணுவேனும் மனத்திற் பயம் தோன் றவில்லை; கோபமும் மனக்கசப்பும் இகழ்ச்சியுமே கொதித்தோங்கின. அவரைக் கண்டதாலுண்டான ஆச்சரியம் சிறிதடங்கியபின், அவரை வெறித்து நோக்கி, இன்னாரென்று இனமறியாதவள் போல், "யாரடா திருடன், பெண்கள் தனித்திருக்கையில் பூனைபோல் வந்து வீட்டுள் நுழைபவன்? யாரடா நீ?" என்று உரத்தகுரலில் உசாவினாள்.

வீரசங்கிலி: என்ன, சிவகாமி, நம்மை உனக்குத் தெரியாதா என்ன? சத்தம் போடாதே, தெருவில் கேட்கும்.

சிவகாமி: சீ, நாயே, வெளியேபோ. கெட்ட கேட்டுக்கு நாமென்னவந்தது "நாம்"? என்ன நீயும் உன் அறியாமையுமோ? இறங்கு வெளியிலே, இல்லா விட்டால் விளக்குமாற்றுப் பூசைகிடைக்கும்: வீட் டில் யாராவது வருமுன்னே மரியாதையோடு வெளி யே போய்விடு.

வீரசங்கிலி: இல்லை, யாரும் வரமாட்டார்கள்; நான் வந்திருக்கிறது தெரியும். கொஞ்சம் உன்னைக் கண்டு பேசிவிட்டு,—"

சிவகாமிக்கு கோபம் அதிகரித்துவிட்டது. தான் முன்னுரைத்ததை நிறைவேற்றப் புகுவதுபோல், அங் கொருமூலையிற் சார்த்தியிருந்த துடைப்பத்தைக் கையி லெடுத்துக்கொண்டு, "மரியாதையோடு போகிறாயா, கொடுக்கட்டுமா?" என்று, சிறிது முன்சென்று நெரு ங்கினாள். கதவைத் திறந்துகொண்டு மாயமாய்ப் பற ந்துவிட்டார், வீரசங்கிலி மகாராசா.

கதவைத் தாளிட்டபின், துடைப்பத்தை எறி ந்துவிட்டு, கட்டிலில் உட்கார்ந்துகொண்டு, சிவகாமி, விழுந்து விழுந்து சிரிக்கத்தொடங்கினாள். தன் காத லரைப் பிரிந்தபின், அவள், அம்மாதிரி ஒருநாளும் சிரித்ததேயில்லை. அதிகச் சிரிப்பாற் கண்ணீர் பெருகிற்று. ஆனாலது சற்றுப்பொழுதில் மட்டுப்பட, நிகழ்ந்ததைப்பற்றி ஆலோசிக்கலானாள். "யாரும் வரமாட்டார்கள்: நான் வந்திருக்கிறது தெரியும்" என்று வீரசங்கிலித்தேவர் கூறியது ஞாபகத்துக்கு வந்து, தன்வீட்டிலுள்ளார் யாவரும் மனமிசைக் திணங்கியே தன்னை யிவ்வாறு அவர் வந்து உபத்திர வப்படுத்தி அவமானஞ்செய்ய விட்டிருக்கிறார்களென் பது, அவள் மனத்திற் பதிந்தது. சட்டப்படியும் உலக நீதி முறைப்படியும் தன் கற்பைக் காத்தற்குக் கடன் பட்டுள்ள தன் தாய்தந்தையரும் உடன்பிறந்தாருமே

இவ்வண்ணம் செய்தால், இனிக் கடவுளைத்தவிரவேறு துணை யேது? கொள்கொம்பொன்றுமேயின்றித் தான் முற்றிலும் அனாதையாயிருப்பதை உணர்ந்து, சிறிது இரத்தக்கண்ணீர் வடித்தாள். கடைசியில், தன் வீட்டையும் ஊரையும் நீக்கி வேறெங்காயினும் கூடிய சீக்கிரத்திற் செல்லாவிடின், தன் கற்புக்குப் பங்கம் செய்துவிடுவார்களென்று பயந்து, அதைப்பற்றி ஆலோசித்துக்கொண்டிருக்கையில், சுந்தரம் வந்து கதவைத் தட்டினான். அவன் உள்ளேவந்தபின், நடந்ததை அவனிடம் வெளியிடாமல், தான் அப்பொழுதே புளிமலையைவிட்டு வெளியேறிவிட விரும்புவதாகத் தெரிவிக்க, முன்பொருதரம் சொன்னதுபோலவே அவன், இவ்வைந்து வருஷங்களையும் கரிவீரன் முதலியவர் உதவியுடன், மற்றியாரும் அறியாமல், சிரமமின்றி, பருந்துக்கூட்டிற் கழித்துவிடலாமென்றுரைத்தான். தன் காதலருடன் சிலநாள் ஆநந்தக்கடலில் திளைத்தாடிக் களித்த இடத்துக்கு இப்பொழுது செல்ல, அவள் மனம் இசையவேயில்லை. முடிவில், செஞ்சாலியிலைக்கு முதற்கண் செல்வதென்று நிச்சயித்து, தன் சாதாரண ஆடைகளில் இரண்டொன்றையும், மிகப் பிரியமான சில புஸ்தகங்களையும் மாத்திரம் ஒரு சிறுமூட்டையாகக் கட்டியெடுத்துக்கொண்டு, வீட்டைப் பூட்டித் திறவுகோலை வாசல் மேற்படியில் வைத்துவிட்டு, அந்நடுநிசியில், இருவரும் ஊரினின்றும் வெளியேறிவிட்டனர். தற்காலச் செலவுகளுக்கு, சுந்தரத்தினிடம் கொஞ்சம் பணமிருந்தது. அவர்கள் நல்லதிர்ஷ்டத்தால், சிறிதுதூரத்தில்,

செஞ்சாலியிலேக்குச் செல்லும் வெறும் வண்டியொன்றைச் சந்தித்தனர், விசாகத் திருவிழாவின் பொருட்டு அதில் ஏறிவந்த தேவடியாளை ஒருவாரம் தங்கிப் போம்படி மகாராசா திருவாய் மலர்ந்தருளி விட்டதனால், வண்டிக்காரன் ஊருக்குத் திரும்பிச் சென்றுக் கொண்டிருந்தான். சொற்ப வாடகைக்கு அதைத் திட்டஞ் செய்து, வண்டிக்குள் நம் கதாநாயகியும், முன் பெட்டியிற் சுந்தரமுமாக ஏறிக்கொண்டு, செஞ்சாலியிலேக்குச் சென்றனர்.

இதைவாசிக்கும் நண்பரே! இவ்வதிகாரத்தில் நீர் முக்கியமாய்க் கவனிக்கவேண்டியது ஒன்றிருக்கிறது: சிலர் புத்திக்கு அது மிகவும் இயற்கை விரோதமாகவும் நடக்கத்தகாததாகவும் தோற்றலாம். என்ன, பதினறு வயதுக்குட்பட்ட ஏழைப்பெண், இராக்காலத்திலே, யாருமில்லாத தனிவீட்டிலே, மறவர் குலதிலகரும்வீர சங்கிலியென்ற திருநாமம் படைத்தவரும் நாற்பத்தைந்து வயது ஆண்பிள்ளையுமாகிய புலிமலை மகராசாவை, நாயென்றும் பேயென்றும் சீயென்றும் ஏசியதுமன்றி, விளக்கு மாற்றுப்பூசையும் கொடுக்கத் துணிவாளா? சில சமயங்களில், போ. சுப்பையர்கூட அவர் முன்பு நடுங்குகின்றனரே; பழமொழிப்படி, பட்டப்பகலிற் பத்திரகாளி படும்பாட்டுக்குப் பாதி ராத்திரியில் ஓச்சத்தி எம்மட்டு? அன்றியும், அவ்வளவு வாலிபமான பெண், நடு நிசியில், இருபத்தைந்து வயது ஆண்பிள்ளை யொருவனே துணையாகத் தனிவழிச் செல்வாளா? இவையெல்லாம் சிறிதும்

நம்பத்தக்கவை யன்று என்று சிலர் நினைக்கலாம். அவ் விதச் சந்தேகம் அற்பமும் ஆகாதென்று வற்புறுத் திக் கூறுவோம். அதிமேதாவியான ஆங்கிலகவி யொருவர், "கற்பானது, தன்னையுடைய பெண்ணை ஒருருக்குக் கவசம்போற் சேமமாய்க் காக்கின்றது" என்று சொல்லியிருப்பது, உலகானுபவத்துக் கொத்த உண்மையே. அவர் கூறியபடி இது பெண் கற்புக்கு மாத்திரமன்றி, "கற்பெனப்படுவது சொற்றிறம் பாமை" என்ற மொழிக் கிணங்க, பொதுவாய்ச் சத் தியத்துக்கே பொருந்தும். அங்ஙனம் பொருந்தா விடின், உலகமும் உயிர்வாழ்க்கையும் பாழ்ங்குழுப் பமே; தர்மக் கடவுள் ஒருவரால் தாங்களிக்கப் படுவன வாகா. சிற்சில சமயங்களில்,

> "நல்லவன் தோற்பதே நரகன் வெல்வதே
> வெல்வதும் பாவமோ வேதம் பொய்க்குமோ
> இல்லையோ அறமென இரங்கி யேங்கி"

சந்தேகிக்கும் அளவு: உலகத்தில் தீமை மேலுற்றுத் தழைக்கினும், "தர்மமே ஜயம்" என்பதுதான் ஆன்ற பேருலகங்களுக் கெல்லாம் அச்சாணி. நாடாளும் ராஜாதிராஜனாயினும், நன்னெறியி னின்றும் நழுவி யுளனேல், அந்நெறி வழியொழுகும் அறுதை யொரு வன் முன்பு நடுங்கவேண்டியதே.

> "ஊனுயர் தோற்றம் எவன் செய்யும் தன்னெஞ்சம்
> தானறி குற்றப் படின்"

என்றார் நாயனாரும். இராமாயணத்தில், "தேவர்க்

கும் திசைக்கரிக்கும் சிவனார்க்கும் அயனார்க்கும் செங் கண் மாற்கும் ஏவர்க்கும் வலியான்" என்றும், "அருந் தவத்தின் பெருங்கடல்" உடையான் என்றும், "கிடந்த போர்வலியார் மாட்டே கெடாத வானவரை யெல்லாம், கடந்துபோய் உலகமூன்றும் காக்கின்ற காவலாளன்" என்றும், "கோளொத்த சிறைவைத் தாண்ட கொற்றவன்" என்றும், பலவாறு புகழ்ப் பெற்ற பத்துத்தலை அரக்கனை, அவன் நாட்டு மத்தி யிலேயே, அவனாற் சிறைவைக்கப் பட்டுத் தன்னந் தனியளாய்ப் பலவாண்டுகள் கழித்த ஒரு மானிடப் பெண், "மென்மருங்குல்போல் வேறுள அங்கமும் மெலிந்து" வாடி, "மருந்து முண்டு கொல்யான் கொண்ட நோய்க்கென மயங்கி," "மானினம்பேடை அயிலெயிற்று வெம்புலிக் குழாத்து அகப்பட்ட தன் னாள்" ஒருத்தி, துரும்பெனக்கனன்று,

> "ஆயிரந் தடக்கையால் நின் ஐந்நான்கு கரமும்பற்றி
> வாய்வழிக் குருதிசோரக் குத்திவான் சிறையில்வைத்த
> தூயவன் வயிரத்தோள்கள் துணித்தவன் தொலைந்தமாற்றம்
> நீயறிந் திலையோஏகு நெறியறிந் திலாதநீசா"

என்று நிந்தித்துப் பேசியதும்; பாரதத்திலே, பாரா ளும் பார்த்திபர் சூழ்ந்த பெருஞ்சபையிலே, தனது "ஐம்புலன்களும் போன்ற" பர்த்தாக்கள் ஐவரும் வறிதே பார்த்திருக்க, அரிவையர்க்கு அருங்கலமா கிய மானத்தை அழிக்க வெண்ணித் துச்சாதனன் அணுகிய அமயத்திலே, அருந்ததியன்ன பாஞ்சாலி, ஆதரமேதுமற்ற தன்னிலைமையை அறிந்து,

"ஆருகி இருதடங்கண் அஞ்சனவெம் புனல்சோர, அளகம் சோர, வேறான துகில்தகைந்த கைசோர, மெய்சோர வேறோர் சொல்லும், கூறுமற், கோவிந்தா கோவிந்தா என்ற ஏற்றிக் குளிர்ந்து, நாவில், ஊறாத அமிழ்தூற, உடல்புளகித் துள்ளமெலாம் உருகி"

யகாலத்திலே, சபாநாயகனுய் வீற்றிருந்த வணங்கா முடி மன்னர் மன்னனை நோக்கி,

"புன்தொழிலோன் யானிருக்கக் காட்டியதன் தொடை வழியே புள்வாய் குத்தச், சென்றிடுக ஆருயிரென் றெவரும் வெருவுறச் சபித்து;"

"அரசவையில் எனையேற்றி அஞ்சாமல் துகில் தீண்டி அளகம் தீண்டி, விரைசெய் அளி யினம்படிதார் வேந்தர் எதிர் தகாதனவே விளம்புவோரைப், பொருசமரில்முடி துணித்துப் புலால் நாறும் வெங்குருதி பொழிய வெற்றி, முரசறை யும் பொழுதல்லால் விரித்தகுழல் இனியெடுத்து முடியேன்" என்று

சபதம் கூறியதும், தம் கற்பின் வலிகொண்டோமற் ருெரு வலிகொண்டோ? ஆகவே, அவ்வரக்கனுக்குப் பிராட்டியார் கூறியவண்ணம், 'மீளருந் தருமந்தன்னைப் பாவம் வெல்லாது.' இம்மட்டோ, தருமத்தை நேரிற் சந்தித்த பொழுதெல்லாம், கருடனைக் கண்ட கட்செவியையும், சூரியனைக்கண்ட கூரிருளையும்போல, பாவம் பதுங்கியோடவே செய்யும். சத்தியத்தைப் போல், மனதைரியத்தையும் நிலைகலங்கா வன்மையையும் தரவல்ல பொருள், ஒன்றுமேயில்லை. இவ்வுலக வாழ்க்கையில் இன்பத்தை யடைதற்கு இன்றியமை

யாக் கருவியாக நாயனாராலேயே புகழ்ப்பெற்றதாகிய பொருட்செல்வமும் கூட, அற நெறிபிறழ்ந்தாரகத்த தாயின், பேடிகைப்பட்ட போராயுதங்களைப் போற் பேறற்றழியும். பாவமே வெல்வது போல் முதற்கண் தோன்றினும், அதன் ஆட்சியெல்லாம் அறமாகிய ஆதித்தன் வெளிப்படும் அளவே.

## ஆறுவது அதிகாரம்.

### பெண்ஜந்மமோ புண்ஜந்மமோ?

சுந்தரமும் சிவகாமியும் புருஷனும் பெண்சாதியு மென்று வண்டிக்காரன் முதலில் நினைத்தான். ஆனால், அவள் வண்டிக்குள்ளும் அவன் முன்பெட்டியிலும் ஏறிக்கொண்டவுடன், அவனுக்குச் சந்தேக முண்டாயிற்று. இந்நாட்டாராகிய நமக்குள்ள குணக் கேடுகளை எடுத்துரைக்கையில், ஒரு வித்துவான், தமக்குச் சிறிதும் சம்பந்தமில்லாத பிறர்காரியங்களை யும் இரகசியங்களையும் அறிய விரும்பும் அவா ஒன் றென்று, கூறியிருக்கிறார். கற்றுணர்ந்த கனதன வான்களிடத்திலும் இத்துர்க்குணத்தைக் காணலாமா யின், ஒருமூடனாகிய வண்டிக்காரனிடம் அஃதிருப்பது வியப்பன்று. ஆகவே, சிறிதும் மறைப்பு மரியாதை யின்றி, அவன், சுந்தரத்தையும் சிவகாமியையும் பரீ க்ஷிக்கத் தொடங்கினான். சிவகாமி தன் தங்கை

யென்றும், செஞ்சாலியிலேக்குச் சமீபமான ஒரு கிராமத்திலுள்ள அவள் கணவன் வீட்டுக்கு அவளை அழைத்துச் செல்வதாகவும், சுந்தரம் பதிற்கூறியும், அக்கிசிவேளையிற் பிரயாணம் புறப்பட்டதற்குச் சரியான சமாதானம் சொல்ல முடியவில்லை; செல்லும் ஊரைப்பற்றியும், செஞ்சாலியிலேயில் தங்கும் தெரு வீடு முதலியவற்றைப்பற்றியும், அவன், விபரமாய்க் கேட்ட கேள்விகளுக்கும் தக்கபடி விடையளிக்க முடியவில்லை. இதையறிந்த வண்டிக்காரன், ஏதோ கெட்ட கருத்தோடு ஒரு குலமகளைக் கடத்திச் செல்வதாக நிச்சயித்துக் கொண்டான்; அம்மட்டோடன்றி, செஞ்சாலியிலேயில் ஒரு வீதியில் அவர்கள் இறங்கி வாடகையைக் கொடுத்து விட்டுச் செல்லும் பொழுது, அக்கம்பக்கத்திலிருந்த தன் சிநேகிதர் சிலரிடத்தும் தன் அபிப்பிராயத்தையும் சமுசயங்களையும் வெளியிட்டான். அவர்களில், தூர்த்தருக்குத் தொண்டு புரியும் தொழிலுடையான் ஒருவன், இவர்களைப் பின் பற்றிச் சுந்தரத்துடன் சம்பாஷிக்கத் தொடங்கினான். சிவகாமி இவற்றையெல்லாம் ஒருவாறுணர்ந்து, மிக்க வெட்கத்தையும் கிலேசத்தையும் அடைந்தவளாய், ஒருவருடனும் பேசாமே, தன்னைத் தன் காதலரது நண்பராகிய 'வக்கீல்' வீட்டுக்கு அழைத்துச் செல்லும்படிக் கோபமாய்ச் சுந்தரத்தினிடம் சொன்னாள். அந்த வக்கீலுக்கும் சில சமயங்களில் உதவி செய்து அவர் குணத்தை அறிந்துள்ளவனான அத்தூர்த்தர் தொண்டன், சந்தேகம் பலப்பட்டு, தனக்கு அவரைத் தெரியுமென்றும், அவர் வீட்டைத் தானே காட்டுவதாகவும், முன்

சென்றான். சிறிது தூரம் கழிந்தபின், அவன் திரு ம்பி நின்று, இரகசியமாய் நனமதிகூறுவான் போல், அவ் 'வக்கீல்' மனைவி பொல்லாத வம்பியென்றும், அவள் சந்தேகியா வண்ணம் அவர் வீட்டுக்குச் செல் லாமல் 'ஆபீஸ்'க்குச் செல்வதே நலமென்றும், கூறு நிற்க, அடங்காக் கோபத்துடன், சிவகாமி, "யாரடா அயோக்கியப்பயல், தில்லும் பில்லும் பிதற்றுகிறாய்? உன்னை யார் கேட்டது; யார் கூப்பிட்டது? மரியாதை யோடு போய் விடு" என்று சொன்னாள். இதைக் கேட்டவுடன் அவன சிறிது பயமுற்று, "ஊஸ்! ஊஸ்! புதுச்சரக்கோ? எல்லாம் மலையிலே விளைந்தாலும் உரலிலே வந்து தான் மசிய வேணும்; பறக்காதே, அம்மாளு; தனியே வருவாய், சங்கரலிங்கத்தைத் தேடிக் கொண்டு; அப்பம் சொல்லுகுறேன் உனக்கு" என்று சொல்லிக் கொண்டே போய் விட்டான். அவ னுடன் சண்டையிட எத்தனித்த சுந்தரத்தைத் தடு த்துவிட்டுச் சிவகாமி, தளும்பும் கண்ணீரை அடக்கிக் கொண்டு, மேற் செல்வாளானாள்.

அவர்கள் 'வக்கீல்' ஐயர் வீடு போய்ச் சேரும் பொழுது, அவர் 'கோற்டி' லிருந்து வரவில்லை. தெரு வாசல் திண்ணையிற் போயுட்கார்ந்தார்கள். வெளியே வந்த ஒரு குழந்தையை, "ஐயர் எப்பொழுது வருவார்?" என்று சுந்தரம் வினவிய சத்தத்தால், யாவரோ வந்தி ருப்பதையறிந்த அவ்வையர் சம்சார பாக்கியம், வாசற் படியில் வந்து நின்று சிவகாமியையும் சுந்தரத்தையும் மாறிமாறிச் சிறிது நோக்கியபின், நிந்தையும் சினமும்

சொலிக்கும் முகத்துடன், உள்ளே திரும்பி விட்டாள். அவள் தாய், "யார் வந்திருக்கிறது?" என்று கேட்ட தற்கு, "எவனோ ஒரு கரியாய்ப்போவான், எவளோ ஒரு சிக்களத்தியைக் கூட்டிக் கொண்டு வந்திருக்கிறான்: அவர்கள் கட்டையிலே போக! என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்கிறது போதாதென்று, வீட்டுக்கே வர ஆரம்பித்து விட்டார்கள், வெட்கங்கெட்ட வேசி கள்!" என்று, அந்த அம்மாள் உரத்த குரலிற் பதிற் சொன்னாள். "ஒரு சட்டியிலே சாணியைக் கரைத் தெடுத்துத் தலைவழியே கொட்டு" என்றாள் அவளைப் பெற்றெடுத்த பெண்மணி. இச்சம்பாஷணை, வாசலி லிருந்த இருவர் செவிகளுக்கும், பேசியவா உத்தேசப் பிரகாரமே, தெளிவாயெட்டியது, இதைக் கேட்ட வுடன், வீட்டிலுள்ள குழந்தைகள் மூவர், வேடிக்கை பார்க்க வெளியே வந்து, இருந்தவர் இருவரையும் இமைக்காது நோக்கி, "எந்தவூர்?" என்றும், "என்ன காரியம்?" என்றும், "ஐயர் வீட்டிலில்லை; வெளியே போங்கள்" என்றும், "அபிஷேகத்துக்கு சந்தனம் தயாராகிறது! சற்றிருங்கள்" என்றும், பேசலானார்கள். சிவகாமிக்குண்டான துக்கத்துக்கும் சுந்தரத்துக்குண் டான கோபத்துக்கும் எல்லைவரம்பில்லை; இருவருக்கும் கண்ணீர் பெருகிற்று; சுந்தரம், அவ்வீட்டார் அனைவ ரையும் கடித்து விழுங்கிவிடுவான் போல் துடிதுடித் தான். பின்பு, ஒன்றும் பேசாமல் இருவரும் எழுந்து தெருவழியே போய் விட்டார்கள். தன் கணவன் வந்து 'ஏது திண்ணையிற்சாணி' யென்று கேட்டால்,

அநிமித்தமாக நிகழ்ந்ததைக் கூறித் தன் கோபத்தை வெளியிடலாமென்று கருதியோ, அன்றேல், சிவகாமி வீற்றிருந்ததால் தன் வீடு அசுத்தமாய் விட்டதென் றெண்ணியோ, அவள் எழுந்து போனபின், ஐயமுடையாள், அவளிருந்த விடத்தைச் சாணியைக் கரைத்துத் தெளித்துச் சுத்தி செய்தாள்.

இருக்க இடமின்றி வீதிவழியே ஏகும் இருவரும், காலை முதல் ஆகாரஞ் செய்யாமையாலும், மனவருத்தத்தாலும் மிகக் களைத்தவர்களாய், அவ்வூர்க் கோயில் முன்பை அடைந்தார்கள். தான் அங்கு மூட்டையுடன் இருந்துக் கொண்டு, ஒரு சிறிய வீட்டை வாடகைக்குத் திட்டம் செய்துவிட்டுப் பின்பு வந்து தன்னை அழைத்துப்போம்படி, சிவகாமி, சுந்தரத்தை அனுப்பினள். அவன் போனபின், தன்னிலைமையை நினைந்து மனம்நொந்துகொண்டு அவளிருக்கையில், அவள் தனிமையையும் திவ்ய சௌந்தரியத்தையும் கண்டு போக்கிலிகளான விடபுருஷர் இருவர், மெதுவாய் அவளுடன் பேசவந்தார்கள். உலக அநுபவமில்லாதவள் ஆதலின், அவர்கள் வாக்கு நயத்தையும் மனமிரங்கி அநுதாபப் படுவதுபோல் நடித்த நடிப்பையும் கண்டு மருண்டு, சிவகாமி, தனக்குப் புலிமலை யென்றும், ஒரே வேலைக்காரனுடன் 'வக்கீலி'டத்திற் காரியமாக வந்திருப்பதாகவும் அவன் வீடு திட்டஞ் செய்யச் சென்றிருப்பதாகவும், சொன்னாள். உடனே, அவர்கள், சொற்ப வாடகையுள்ள நல்ல வீடொன்று இருப்பதாகவும், அதில் ஒரு கிழவிமட்டும் இப்பொழுதிருப்பதாக

வும் தெரிவிக்க, வேலைக்காரன் திரும்பியபின் அவ்வீட்டுக்குச் செல்வதாகச் சொன்னாள். அவர்களில் ஒருவன், தான் முன்பு போய் வீட்டைத் தயார் செய்வதாகப் போய் விட்டான்; மற்றவன் அவளுடன் பேசிக் கொண்டிருந்தான். சிறிது நேரத்தில், அவன் வாய் மொழிமூலமாகவே இவன் தீச்சிந்தை வெளிப்படாநிற்கச் சிவகாமி பயமுற்று, அவனுடன் மறுபேச்சுப் பேசாமல், கோவிற் பக்கத்திலிருந்த "போலீஸ் ஸ்டேஷன்" வாசற்படிக்கட்டிற் போய் உட்கார்ந்தாள். அவ்விடத்தில் தன்னை ஒருவருமுபத்திரவஞ்செய்யத் துணியாரென்று எண்ணினாள். அந்தோ! எலிக்குப் பயந்து வீட்டில் நெருப்பிட்டது போலாயிற்று. எங்ஙனெனின், சற்றுநேரத்திற்குப்பின், 'இன்ஸ்பெக்டர்' குதிரைமேல் வந்திறங்கினார். அவளை ஒருநிமிஷம் உற்றுநோக்கி இன்னாளென்று இனந்தெரிந்துகொண்டார். ஒன்றையும் ஒளிக்காமல் நடந்ததை அவரிடம் உரைக்கவேண்டியதாயிற்று. கோயிலிலும் சிவகாமிவீட்டிலும் நிகழ்ந்தனவற்றைக் கேட்டவுடன், ஜமீன் சொத்துக்கு இன்னும் தம் பாத்தியதை தீரவில்லையென்று, அவர் உள்ளூர மகிழ்ச்சியடைந்தார். உடனே, ஒரு சேவகன், புலிமலைக்கு ஓட்டமாய் அனுப்பப்பட்டான். சுந்தரமோ, திரும்பி வந்த நிமிஷமே, தற்சுதந்தரமில்லாத ஒரு பெண்ணை அவளுக்குரிய காவலினின்றும் கடத்தி வந்த குற்றத்திற்காக, மெய்காவலில் வைக்கப்பட்டான்; சிவகாமி என்னசொல்லியும் பிரயோசனப்படவில்லை. அவளுக்கு ஒருகாரியம் மட்டும் சௌகரியமாக முடிந்தது: அவள் நிலைமைக்கிரங்கியோ, ஜமீன்தாரிடமிருந்து அதிகக்

காசுபறிக்கலாமென்றெண்ணியோ, வேறு போக்கின்றி யோ, இம்மூன்றும் சேர்ந்ததினலோ, அவனை, 'இன் ஸ்பெக்டர்' தம்வீட்டுக்கே அழைத்துச்சென்று, அவளுக்குத் தனிமையான இடமொன்றுதவி, நல்ல குணவதியாகிய தம் மனைவியை அவளை அன்பும் ஆதரவுமாக நடத்தும்படி கட்டளையிட்டார். அவர் கிழவரானதனுலும், ஸ்திரீ விஷயத்தில் யோக்கிய ரானதனுலும், சிவகாமி, வெகுமரியாதையுடன் நடத் தப்பட்டாள்; அவரளவு அன்பு, தன் தந்தை காட்டி யிருப்பின், தனக்கிக்கதியே நேர்ந்திராதென் றெண் ணினுள்.

'வக்கீல்' ஐயர் வீட்டில் நடந்ததையும், அவரைப் பற்றித் தான் கேள்வியுற்றதையும் உத்தேசித்து, அவருடன் பேசுவதற்குக் கூடச் சிவகாமி இஷ்ட மில்லாதவளாயிருந்தாள்; அத்தகைய குணத்தினரைத், தன் காதலர், எவ்வண்ணம் நண்பராகக்கொண்டு, அவர்வசம் தன்னை ஒப்புவித்துப் போனுரென்று, ஆச்சரியப்பட்டாள். ஆயினும், சுந்தரத்தின் 'கேசு' விஷயமாக அவருடன் பேசவேண்டியிருந்ததால், அவரைத் தம் வீட்டுக்குத் தருவிக்கும்படி, 'போலீஸ் இன்ஸ்பெக்டரை' வேண்டிக்கொண்டாள். அவ்வாறே அவரும் வந்தார். அவர், அவளுடன், அன்றும் பின்பு சிலநாட்களிலும் வெகுநேரம் பேசிக்கொண்டிருந் தாரெனினும், தூர்த்த குணத்தைத் தெரிவிக்கும் ஒரு சொல்லேனும் அவர் வாயிலிருந்து வரவுமில்லை, அவர் அவளை முகமெடுத்துப் பார்க்கவுமில்லை. விஜயமார்த்

தாண்டத்தேவர் புலிமலை ஜமீன்தாராகவும், அவள் அவர் மனையாட்டியாகவும், தாம் 'ஜமீன்வக்கீ' லாகவும் இருந்திருப்பின், எவ்வளவு மரியாதையுடன் அவளை நடத்தியிருப்பாரோ, அவ்வண்ணமே இப்பொழுதும் ஒழுகினார். புலிமலையில் நிகழ்ந்ததை யறிந்தவுடன், மிக மனம்வருந்தி, அநுதாபங்காட்டி, தமக்கு ஒருவரியெழுதித் தெரிவியாததற்காகப் பச்சாத்தாபப்பட்டதுமன்றி, தாம், அன்றே சென்று நடந்ததைக் கலெக்டருக்குத் தெரிவித்து, வேண்டிய ஏற்பாடுசெய்து, சுந்தரத்தை மீட்பதாகவாக்களித்தார். அவர் நடக்கையை நேரிற்கண்டபின்புதான் சிவகாமிக்கு அவரிடம் நம்பிக்கையும் விசுவாசமுமுண்டாயிற்று; தம்மிடத்துள்ள தினையளவு குற்றம் உலகத்தாற் பனையளவாக மதிக்கப்பட்டு, நற்பெயரை இழந்து, பொல்லாராகத் தூற்றப்படும் துர்ப்பாக்கியருள் அவரொருவர் என்பதை அறிந்தாள். ஆனால், அவர் சுந்தரத்தை விடுவிக்கச்செய்த முயற்சி உடனே பயன்பெறவில்லை. அவன்மேல் முறைப்படி 'கேசு' நடத்தப்பட்டது; நல்லதிர்ஷ்டத்தால், அக் 'கேசை' க் 'கலெக்டர்' துரையே விசாரணைசெய்தார். சிவகாமியும் சாக்ஷிசொல்ல நேர்ந்தது. புலிமலையில் அவள் தாய்தந்தையரும் ஜமீன்தாரும் செய்த மிருகத்தனமான இம்சையைப் பொறுக்கமாட்டாது, தன்னையகரால் தனக்குக் காவலாக நியமிக்கப்பட்ட அவர் வேலைக்காரனாகிய சுந்தரத்துடன், சிவகாமி, தானாகவே புறப்பட்டு வந்தாளென்றும்; அவனை நகைகளோடு கடத்திவந்துவிட்டதாக எதிர்க்கட்சி கூறுவது முழுப் பொய்யென்றும்; குற்றவாளிக்கு ஒருவிதமான கெட்ட

எண்ணமும் சொப்பனத்திலும் கிடையாதென்றும் அவன்மேற் 'கேசு' கொண்டுவந்திருப்பது, அவனைப் பிரித்து, அவளை மறுபடியும் உபத்திரவப்படுத்தும் பொருட்டே என்றும், 'வக்கீல்' மன்றாடிப்பேசினார். உரியகாவலினின்றும் அவளைக்கடத்தியதற்காகத் தாமே தண்டனையுற்ற விஜயமார்த்தாண்டத்தேவருக்கு, வேறொருவனை அவளுக்குக் காவலாக நியமிக்க எவ்விதச் சுதந்தரமும் கிடையாதென்று, எதிர்க்கட்சியார் வாதாடினர். 'கலெக்டர்' துரையின் அபிப்பிராயம் நமக்கு முன்பேதெரியுமே: முடிவில், சுந்தரம் விடுதலை செய்யப்பட்டான்; அவள் சுயாதிகாரம் பெறும்வரையும், அஃதாவது இன்னும் ஆறுமாதங்களுக்கு, அவள் வேண்டுகோளின்படி, 'போலீஸ் இன்ஸ்பெக்டரும், 'வக்கீல்' ஐயரும், அவள் தந்தையுடன், சிவகாமிக்குக் காப்பாளர்களாக நியமிக்கப்பட்டனர்.

வேலாயுதத்தேவர் எவ்வளவோ சபதம் செய்து கொடுத்து அழைத்தும், அவருடன் புலிமலைசெல்லச் சிவகாமி சம்மதிக்கவில்லை; 'இனி நீ யென் மகளல்ல; எக்கேடு கெட்டாலும் சரி' என்று சொல்லிவிட்டு, அவர் ஊருக்குத் திரும்பிவிட்டார். சிவகாமி, ஒரு சிறியவீட்டைத் திட்டம்செய்துகொண்டு, 'வக்கீலும் இன்ஸ்பெக்டரும்' கூறியபடி சுந்தரத்தைத்தவிர ஒரு கிழவியையும் பெண்துணையாக ஏற்பாடுசெய்துக் கொண்டு, செஞ்சாலியிலேயே குடியிருக்கலானாள். இதையறிந்த 'கலெக்டர்' துரை, அவள் தைரியத்தை வியந்து புகழ்ந்து, தம் நண்பரான ஒரு

கிறிஸ்தவப்பாதிரியிடம் வேண்டிப்பேசி, பெண்கள் வாசிக்கும் 'மிஷன்' பள்ளிக்கூடத்தில், மாதம் முப்பது ரூபா சம்பளமுள்ள தமிழ் உபாத்திச்சியாக அவளை நியமிக்கச்செய்தார்; பாதிரிதுரை, மாதம் இருபது ரூபாவுக்குமேற் கொடுக்கமுடியாதென்று சொன்ன தற்கு, அவள் செல்வத்தில் வளர்ந்து வந்தவளாதலின் அந்தவேதனம் அவள் செலவுக்குப் போதாதென்று கருதிக், 'கலெக்டர்' துரை, மாதம் பத்துரூபா தாம் கையிலிருந்து கொடுப்பதாகவும், ஆனால் அதையொரு பொழுதும் அவளுக்குத் தெரிவிக்கக்கூடாதென்றும் சொல்லி, அவ்வாறு ஏற்பாடுசெய்தார்; அவ்வண்ணமே, தன் காதலரைப்பற்றிய துயரத்தைத்தவிர வேறொரு குறையுமின்றி, சிவகாமி, சென்னாவியிலேயில் வசித்து வந்தாள். பின்செலவுக்கென்று, மாதம் பத்து ரூபா மீத்துச் சேர்த்தும் வந்தாள்.

புலிமலையைவிட்டுப் புறப்பட்டபின், இவ்வாறு அமரும்வரை, நம் கதாநாயகியுற்ற விபத்துக்களுக்குக் காரணம் என்னவென்று ஆராய்வோமாக. யௌவன மும் அழகும் ஒருங்கு வாய்த்த பெண் ஒருத்தி தனித் தேனும் தன்நாயகனல்லாத யௌவன புருஷனை ஒருவனோ டேனும் சஞ்சாரஞ்செய்யின், எத்தேசத் திலும் சில அசந்தர்ப்பங்களும் அசௌகரியங்களும் நேரிடவே செய்யும்; ஆயினும், நாகரீகமுற்ற நாடு களில், இந்நாட்டைத்தவிர வேறெந்நாட்டிலும், ஒன் றின்பின்னொன்றாக இத்தனை உபத்திரவங்கள் நேர்ந் திருக்கமாட்டாவென்று நாம் உறுதியாய்க் கூறலாம்:

ஏனெனின், இங்குள்ளாரினும் துடுக்கான துஷ்டரும், தூர்த்தரும், பெண்களைக் கெடுத்துப் பிழைப்பதே பிரவர்த்தியாகக்கொண்ட குடிகேடரும், பிறநாடுகளிற் பெருகியுளாரெனினும், அந்நாடுகளில் நடைபெறும் ஒரு வழக்கத்தால் இவ்வாறு நிகழ்ந்திராது: ஸ்திரீகள் சுயாதீனமா யுலாவித்திரிவதும், தம்மினராயினும் அந்நியராயினும் சிறுவராயினும் பெரியவராயினும் புருஷர்களுடனும் சாதாரணமாய்ப்பேசுவதும், இப்புண்ணிய பூமியைத்தவிர, மற்றெங்கும் குலாசாரமாய் அனுஷ்டிக்கப்பட்டுவருகிறது; ஆகவே, இவ்வுலகில் அயோக்கியர்களினும் யோக்கியர்களே மிகப் பெரும்பாலாராக இன்னும் எங்கு மிருத்தலின், தனியே சஞ்சரிக்கும் ஒரு ஸ்திரீ, தான் சந்திக்கும் ஓர் அயோக்கியனுக்குப் பலயோக்கியர்களைச் சந்தித்து, அவனாலுண்டாகக் கூடும் இடுக்கணினின்றும் அவர்கள் மரியாதையுடன் வலிந்து செய்யும் உதவிகளினால் தப்பித்துக்கொள்வாள். அதிசுந்தர ரூபவதியாகிய இராணி யொருத்தியைப்பற்றி ஆங்கில வித்துவான் ஒருவர் எழுதும்பொழுது, அவள் நாட்டில், (பிரஞ்சுதேசம்) எவனாயினும் ஒருவன் அவமரியாதையாக அவளை ஏறட்டு நோக்கின், அப்பார்வையைத் தண்டித்து அவன் மேற் பழிவாங்க, பல்லாயிரம் வாள்கள் தம் உறைகளினின்றும் திடிரென்று ஒருங்குகுதித்தெழுந்து கிளம்பியிருக்கும் என்று கூறியிருக்கிறார். அவ்விதமாய்ச், சிறிதும் தன்னயங்கருதாது, அழகை அழகின் நிமித்தமே மனங்குளிரக்கண்டு, மாசுமறுவில்லா மகிழ்ச்சி

யிலாழ்ந்து, கண்யதை செய்யும் குணம், நம்மவருக்குள் மிகக் குறை யென்பது கேவலம் உண்மையே. அக்குறைக்குக் காரணம், நம்மாதரை, நாம் பெரும்பாலும் சிறைக் காப்பில் வைத்திருப்பதும், ஒரு ஸ்திரீ அந்நிய புருஷன் ஒருவனோடு பேசுதல் மகா பாதகமென்று மதித்திருப்பதுமே. கவனியுங்கள்! செஞ்சாலியிளப் பட்டணத்தில் யோக்கியர்களே இல்லை யென்பதில்லை; ஒரு தூர்த்தனுக்கு நூறு யோக்கியர்கள் இருக்கலாம்; ஆனால், சிவகாமியைப் போன்ற ஒரு பெண், அந்நிய புருஷன் ஒருவனுடன் "வழியெது" என்று கேட்க வேனும் பேசுவதும், புருஷர் எவ்வளவு யோக்கியர்களாயினும், அவளைப் போன்ற ஒரு பெண்ணுடன் தாமாகப் பேசுவதும் இல்லை, முகமெடுத்துப் பார்ப்பதுங்கூட, அக்கிரமமென்று ஏற்பட்டு விட்டால், பின்பு, அவள் உதவி பெறுவதெப்படி? துடுக்கரான தூர்த்தரால்கூட துன்புறு தொழிவது எங்ஙனமாகும்? இத்தூர்த்தர்கூட அவளிடத்துத் துணிந்து பேசுவதற்குக் காரணம் என்னவெனின், அவளைப் போன்ற பெண்கள், கற்பிழந்தாராய் இருந்தாலன்றி, ஏற்றதுணை யில்லாமற் சாதாரணமாய் வெளிப்புறப்படுவது வழக்க விரோதமா யிருத்தலே; கற்பிழந்தமாதரே தக்கதுணையின்றி வெளிவந்துலாவுதலும் புருஷரோடு பேசுதலும் வழக்கமாயிருத்தலின், கற்பரசி யொருத்தி அவ்வாறு வெளிவந்து பேச விதி வசத்தால் நேரின், அவளையும் தூர்த்தையாகவே மதித்தொழுகுகின்றோம். ஆதி ஆரியர் காலத்தில் இவ்வழக்கம் இல்லை யென்றும், துருக்க-

ஆட்சியிலேயே இது பரவிற்றென்றும், கூறுவார் சிலர்; எவ்வனமாயினும், நம்மவரிற் பெரும்பாலாரால் இது புராதன ஆசாரமாக அநுஷ்டிக்கப் பட்டு வருவது மன்றி, அதை யிகழ்ந் தொழுகுவார் நிந்தனைக்கும் உள்ளாகிறார்கள். ஸ்திரீபுருஷர் ஒரே சாதி மிருகங்களைப் போற்கூடிப் பழகுதல், தீங்கையே விளைக்கும்; ஆனால், பூனையையும் எலியையும்போல் விலகி யொழுகுவதும், தீங்கையே விளைக்கும்; தக்க மட்டுமரியாதையோடு பழகுதலே சரி: அங்ஙனம் ஒழுகாத நாம், இருபாலாரும் குற்றமற்ற மனத்தொடு இசைந்து பழகுவதால் விளையும் இணையிலா இன்பத்தையும், அறிவுப் பேற்றையும், ஒருவர் குறையை ஒருவர் நிரப்பி உதவக்கூடிய உதவிகளையும் ஒருங்கிழந்து, விரைவில் விருத்தி யடையாது வீழ்ந்து கிடக்கின்றோம். கற்பரசியாகிய அந்நிய ஸ்திரீ யொருத்தி, நம்மை முக மெடுத்துப் பார்த்துச் சல்லாபமாய் நம்முடன் சம்பாஷிப்பது, முடியாததாய் விட்டது: அவ்வாறு ஒரு ஸ்திரீ இப்பொழுது செய்யின், அவள் நம்மேற் காதல் கொண்டு, நம்மை விரும்புபவளாக அவளை மதிக்கும் ஈனஸ்திதிக்கு, நாம் வந்து விட்டோம். மாதம் முந்நூறு ரூபாவுக்கு மேலான சம்பளமுள்ள வரும், நாலைந்து தாலூக்காக்களுக்கு அதிகாரியுமான ஒரு பிராமண உத்தியோகஸ்தரின் வாலிப மனைவி, தன் கணவர் கீழுள்ள சேவகர்களில் ஒருவனும், மாதம் ஆறு ரூபா சம்பளமுள்ளவனுமான ஒரு துருக்கனை துணையாக, ஒரு பூந்தோட்டத்தைப் பார்க்கச் சென்றதைக் கண்ணுற்று, கற்றறிந்து பட்டமும் பெற்ற கனவான்கள் சிலர், அந்த

அம்மாளைக் கற்பிழந்தவளாக அவதூறு கூறியதை யாம் கேட்டுள்ளோம்; அவ்வாறு அவளைச் சந்தேகித்த தற்கு முக்கிய காரணம், அவள் கணவர் அவளைவிட் டுப் பிரியச் சகியாது எப்பொழுதும் அவளுடன் சல் லாபமாயிருப்பதும், அவர் நண்பரிற் சிலரைக் கண்ட பொழுது, அவள், தான் வீற்றிருக்கும் நாற்காலியி னின்றும் எழுந்து போகாதிருப்பதுமே! இம்மட்டோ, ஸ்திரீ புருஷர் சாதாரணமாய்க் கலந்து பழகும் ஆசா ரத்தையுடைய பிறநாட்டாரில், தீயொழுக்கமுள்ளார் சிலர் கிடக்க, அனைவரும் அத்தகையரென்றும், கற்பே கிடையா தெனறும், அந்நிய புருஷனோடு சல் லாபமாய்ப் பேசி அவன் கையைப்பிடித்து உபசார மாய்க் குலுக்கும் ஒரு ஸ்திரீ அவனுடன் கற்பிழந்தவ ளாகவே இருக்கவேண்டு மெனறும், பெரும்பாலும் நம்புகின்றோம்! கெடுநாளைத் துர்ப்பழக்கத்தால், பிறர் கற்பைக் கண்டு மதிப்பதே நமக்கு அரிதாய் விட்டது!

---

## ஏழாவது அதிகாரம்.

---

### மூடன் வாழ்வு மூன்றேநாள்.



விளாக்குமாற்றுப் பூசைக்குத் தப்பி வீட்டுக் குத் திரும்பிய வீரசங்கிலித்தேவர், இனிச் சிவகாமியைப்பற்றிச் சொப்ப

னத்திலும் நினைப்பதில்லை என்று சித்தாந்தம் செய்து கொண்டார். அவர், மகா மூடசிகாமணியாதலின், அவள் தம்மைப் பேசியதையும் பயமுறுத்தியதையும் பன்னிப்பன்னிப் பகிரங்கப்படுத்தினாராக, அதைக் கேட்டஈப்பையர் முதலியோர், உள்ளுக்குள் நகைத்துக் கொண்டு, ஆச்சரியத்தோடும் சினத்தோடும் பேசு பவர்போல் நடித்து, அவரது துயரத்தை ஒருவாறு ஆற்றினார். இவ்வண்ணம் சிறிது அவிந்த துராசை யானது, செஞ்சாலியிலைப் போலீஸ் இன்ஸ்பெக்டரிட மிருந்து கிடைத்த சமாசாரத்தால் மறுபடியும் கிளர்ந் தோங்காநிற்க, அவளைச் சுலபமாய்ப் பெற்றுவிடலா மென்ற முழுநம்பிக்கையுடன் அவள் தாய் தந்தையரை யும் அழைத்துக்கொண்டு, ஜமீன்தார், செஞ்சாலியிலை போய்ச் சேர்ந்தார்; ஆனால், குமரன் கோயிலில் தாம் செய்த செய்கைக்கு அபராதமாகப் பொருள் நஷ்டம் நேர்ந்ததையன்றி, வேறொரு பலனும் சித்திக்கவில்லை. சுந்தரத்தின் கேசுமுடிவில, கலெக்டர் துரை, மறு படியும் ஜமீன்தாரையும் வேலாயுதத் தேவரையும் அழைப்பித்து, முன்னிலும் பதின்மடங்கு கடுமை யாகப் பயமுறுத்தினார். சிவகாமியும், செஞ்சாலியிலை யிலேயே தங்கிவிட்டாள். ஆகவே, ஜமீன்தார், சென்றபொழுதிலும் சிறிது எளியராய்த் தம்மூருக் குத் திரும்பி வந்து சேர்ந்தார்.

வீரசங்கிலித்தேவரது நடவடிக்கைகளை இதுகா றும் கவனித்துவந்த நண்பர், பொது நன்மைப்பிரிய ராகிய 'மெய்விளம்பி'ப் பத்திராதிபரின் பிரார்த்தனை

க்கு ஆநந்த நடேசர் சிறிதுமே செவிகொடுத்திலர் என்பதை, நன்கறியக்கூடும்.* நாளுக்குநாள் கடன் மேலிட்டு, மாலுமியற்ற மரக்கலம்போல் தத்தளித்து, நா. ச. மு. ல. நாராயணன் செட்டியார் வயிறுகிய பாழ்ங்கசத்தில் ஆழ்ந்துவிடும் நிலைமையில் இப்பொழுது ஜமீனிருந்தது. செட்டியார் புலிமலை அரமனைக்கே குடிவந்து விட்டதுமன்றி, ஜமீன் பரிபாலனத்தையும், தாமே கண்காணித்து வந்தார். ஜமீனது உண்மை ஊழியராகிய சப்பாணித் தேவரையும், சில சிர்வேலைக்காரரையும் தவிர, மற்ற யாவரும் செட்டியாரது நோக்கமறிந்து ஒழுகுவாராயினர்; ஆனால், பேருக்கு மட்டும் ஜமீன்தாராகப் பட்டுடை தரித்துப் பல்லக்குச் சவாரி செய்துவந்த வீரசங்கிலித் தேவர், உண்மையில் நம் செல்வாக்கு அழிந்தமையை உணராதவாறு, செட்டியார் காரியங்களை நடத்திவந்தார். பேர. சுப்பையரோ, 'பாலுக்கும் காவல் பூனைக்கும் தோழன்' என்ற பழமொழிக்கிணங்க, தந்திரமாய் நடந்துவந்தார். அவர் குமாரத்தி கலியாணமும், இன்னும் சில சடங்குகளும், வெகு ஆடம்பரமாகவும் கைச்செலவின்றியும் நிறைவேறின. பத்திரண்டறியாப் பேதையாகிய ஜமீன்தார், ஜமீன்பராமரிப்பைச்சார்ந்த தொல்லைகளெல்லாம் தம்மைவிட்டு நீங்கினதற்கு மனமகிழ்ந்து, எச்செலவுக்கும் தடையின்றிப் பணமளித்துவந்த செட்டியார் எந்த எந்தக் கடன் பத்திரங்களையும் அடை

*காதற்பத்தில் முதலாவது அதிகாரத்தைப் பார்க்க.

மானப் பத்திரங்களையும் விக்கிரயப் பத்திரங்களையும் எதிரே நீட்டினும், தடையின்றி வீரசங்கிலிக் கைச் சாத்துத் தீட்டிவந்தார்; தமக்குள்ள கைமுதலெவ் வளவு கடனெவ்வளவு என்பதை, அவர் ஒரு சிறிதும் அறியாராயும், அறியவிரும்பாராயும் இருந்தார்.

இவ்வண்ணம் நிகழும் நாளையிலே, அவர் மனைவி களில் மூத்தாள் கருவுற்றனளாக, அவள் மகப் பேறுற்றபின், வீரசங்கிலித் தேவரையும் உடந்தை யாகக்கொண்டு, அச் சிசுவின் பேரில் வியாச்சியம் தொடுத்து, துர்விநியோகத்துக்குப் பணமுதவி ஜமீன் சொத்துக்களை அபகரித்துக்கொண்டுவிட்டதாக வழக் காடி, செட்டியாரிடமிருந்து ஜமீனை மீட்டுவிடலா மென்று, சப்பாணித் தேவரும் சப்பையரும் அந்த ரங்கமாய் ஆலோசித்துக் கொண்டிருந்தனர். ஆனால் அவர்கள் எண்ணம், பிரமசாரி எள்ளுச் சொப்பனங் கண்ட கதையாகிவிட்டது. ஏனெனின், தக்கவைத் திய சகாயமின்றி, மூத்தநாச்சியார் சிசுவுடன் பரம பத மடைந்தாள். இது நிகழ்ந்த மாதத்திலேயே, தன் சக்களத்தி கருவுற்ற நாள்முதல் அடங்காத அழுக்காற்றால் பொருமிப் பொருமி நோயுற்று மெலி ந்து வந்த இளையநாச்சியாரும், அவளைப் பின்தொடர் வாளாமுள்: ஒருநாள், ஒரு வேலைக்காரனுடன் களங்க மொன்றுமின்றி அவள் சிரித்துப்பேசியதை அவள் கணவராகிய உத்தமகுண சீலர்கண்டு, மனத்திற் சமு சயமுற்று, அவளைக் கீழே தள்ளி, தம் சப்பாத் தணி ந்த திருவடிகளால் உதைக்க, அதே காரணமாக

அவள் மறுநாள் தேகவியோகமானாள். பலவிதச் சித்திரவதைகளுக்கு உட்படுத்தப்பட்ட பின்பு வேலையினின்றும் நீக்கப்பட்ட அவ்வேலைக்காரன், சுப்பையரே இரகசியமாகத் தூண்டியபடி, இக்கொலையைப் பற்றிச் சேஞ்சாலியிலேக்கு ஒரு 'மொட்டைமனு' அனுப்பினான். விசாரணை அதிகாரிகள் வருமுன், இளைய நாச்சியார் பிடி சாம்பராய்ப் பறந்துபோயிருப்பினும், ஜமீன்தாருக்கு, நாலாயிரரூபா செலவாயிற்று; சுப்பையரும், தம் மகளுக்கு ஒரு பவுன்மாலை செய்து போட்டார்.

இச்சம்பவங்களால், சுப்பையரும் சப்பாணித் தேவரும், ஜமீன்தாருக்கு வேறொரு மனைவியைத் தேடுவாராயினர். குணத்திலும் பணமே பெரிதெனக் கொண்ட பலர், தம்பெண்களைக் கொடுப்பதாக முன்வந்து, சுப்பையருக்கு இலஞ்சம் கொடுக்கவும் உடம்பட்டனர். ஆனால், வீரசங்கிலித் தேவரோ, கலியாண நுகத்தடியைக் கழுத்தில் வைத்துக்கொள்ள விரும்பாதவராய், தம்மைச் சார்ந்தார் வேண்டுகோளுக்கிணங்கினவர் போல நடித்து, வானத்து அம்புலியை வேண்டும் பான்மணம் மாறாப் பாலகனைப் போல, மற்றோர் காவல் நீங்கிச் சுயாதிகாரியாய்ச் செஞ்சாலியிலேயில் வாழ்ந்துவரும் சிவகாமியைத்தவிர வேறொரு பெண்ணையும் தாம் மணம்புரிவதில்லையென்றும், அவளை இணங்கச் செய்யின் தாமும் விவாகத்துக்குச் சம்மதிப்பதாகவும், சாதித்தார். இதைக் கேட்டுச் சப்பாணித்தேவர் மலைத்துவிட்டபோதிலும்,

சுப்பையர் மட்டும் மனந்தளரவில்லை. அவர் சென்று சாலியிலிருக்குச் சென்று தந்திரமாய் விசாரித்ததில், சிவகாமி முன்போலவே பள்ளி உபாத்திச்சியாக வாழ்ந்து வருவதாகவும், கண்ணாள் முன்போல் அவளைக் கருத்தாய் காத்துவருவதாகவும், விஜயமார்த்தாண்டத்தேவர் முத்தலையூர்ச் சிறைச்சாலையிலேயே இருப்பதாகவும், ஒவ்வொரு மாதத்திலும் முதலாவது புதன்கிழமையன்று அவரிடமிருந்து அவளுக்கொரு கடிதம் வருவதாகவும், அன்றே அவள் பதிலெழுதுவதாகவும், அவளுக்கு உதவியாயிருந்த கலெக்டர்துரை வேறு ஜில்லாவுக்கு மாற்றப்பட்டுப் போய்விட்டதாகவும், தெரியவந்தது. உடனே அவர் புலிமலைக்குத் திரும்பி, தமக்குச் செலவுக்குப் போதுமான பணம் கொடுக்கும் பக்ஷத்தில், சிவகாமியை விவாகத்துக்கு இணங்கச் செய்வதாக விருதுகூற, வீரசங்கிலித் தேவர் அதற்குச் சம்மதித்தார். சுப்பையர், ஒரு பை பணத்துடன், இரண்டு நம்பத்தக்க வேலைக்காரரையும் அழைத்துக் கொண்டு புலிமலையினின்றும் புறப்பட்டுப் போய்விட்டார்.

## எட்டாவது அதிகாரம்

---

### மந்திரம்கால் மதிமுக்கால்





தன் காதலரது பிரிவாற்றாமை யொன்றைத் தவிர, சிவகாமிக்கு ஒரு குறையுமே இல்லை. சிறுமிகளுக்குக் கல்வி கற்பிக்கும் தொழில், அவளுக்கு மிக்க மனமகிழ்ச்சியைக் கொடுத்தது. அவளுக்கு மேலதிகாரியாயிருந்த பாதிரி துரையும் துரைசாணியும், அவளை அதிக அன்புடனும் மரியாதையுடனும் நடத்திவந்தார்கள். சில சமயங்களில், கிறிஸ்தவமதத்தின் பெருமையைப்பற்றி அவர்கள் எடுத்துப்பேசி அவளை வாதுக்கழைத்தாலும், அவளை யொருவிதமாகவும் நிர்ப்பந்தப்படுத்தவில்லை. அவர்கள் அளித்த வேதனத்தில், ஒருபாதியே அவள் செலவுகளுக்குப் போதுமானதாயிருந்தது; மீந்ததை, அவள், தருமத்திற் செலவிட்டும், பெரும்பாகத்தைச் சேமித்து வைத்தும் வந்தாள். அவள் முதலில் திட்டஞ்செய்திருந்த வேலைக்காரி, சில துஷ்டர்கள் பேச்சுக்கிணங்கி, அவளுடன் தகாதவண்ணம் பேசத்தொடங்கியவுடன், அவளை நீக்கிவிட்டு, யோக்கியதையும் தன் மரியாதையும் பொருந்திய மற்றொருத்தியைத் தனக்குத் துணையாகக் கொண்டாள். ஒவ்வொரு மாதத்திலும், முதலாவது திங்கட்கிழமை

யன்று நம் கதாநாயகர் அவளுக் கெழுதிய கடிதம், அடுத்த புதன்கிழமை யன்று அவளுக்குக் கிடைத்துக் கொண்டிருந்தது. புலிமலையி லிருந்தபொழுது தனக்குச் சில கடிதங்கள் சேராமைக்குச் சுப்பையரே காரணம் என்று அறிந்துகொண்டாள். இப்பொழுது வந்த கடிதங்கள், அவளுக்கு உற்சாகத்தையும் ஊக்கத் தையும் அளித்த, அவள் பயத்தை மட்டுப்படுத் தின, ஐந்து வருஷங்களையும், பதினைந்து வருஷங் கள்கூட இப்பொழுது போல் காத்திருத்தல் சுலபமா கவே தோன்றிற்று.

18— வருஷம் ஜூன்மாதம் முதலாவது புதன் கிழமை யன்று அவளுக்குவந்த கடிதம், இதற்கு முன் கிடைத்த எல்லாக் கடிதங்களைவிட அதிக உருக்க மாயும், அன்பு செறிந்ததாயும், உற்சாகத்தை யளிக்கத் தக்கதாயுமிருந்தது. சிறைக்காவலாகிய ஐந்தாண்டு களும் கழியுமுன்னமே, குருவேலை அதிசீக்கிரத்தில், தாம் சிறை நீங்கி வெளிவந்துவிடக்கூடு மென்ற விஷயம் அதில் ஒருவாறு குறிப்பிடப்பட்டிருந்தது; உறுதி யில்லாமையினாலேயோ, அல்லது திடீரென்று வந்து அவளை ஆச்சரியத்திலும் ஆநந்தத்திலும் அமிழ்த்தவேண்டு மென்று கருதியோ, அது விபர மாய் எழுதப்படவில்லையென்று தோன்றிற்று; அக் கடிதம், படிப்பவர் மனத்திற் பற்றிக்கொள்ளும் குதூ கலத்துடனும், களிபெருவகையுடனும், எழுதப்பட் டிருந்தது; சிறைமீண்டு திரும்பிவர எதிர்பாராத மன வேக்கத்தோடு எழுதப்பட்டதல்ல வென்பது, திண்

ணம். ஆகவே, அதைப் படித்தவுடன், சிவகாமி, அளப்பரிய மனமகிழ்ச்சியில் ஆழ்ந்தாள். சங்கதியை இரகஸ்யமாய் வைத்துக்கொள்ள முடியாதவளாய், சுந்தரத்துடனும் தன் வேலைக்காரியுடனும் சொல்லிப் பலவாறு ஆலோசிக்கலானாள்; பாதிரி துரை, துரைசானி அவர்களிடம் கூட வெளியிட்டுப் பேசினாள்; எவ்வாறாயினும் விபரமாய்த் தனக்கு மற்றொருகடிதம் உடனே எழுதியனுப்பும்படி பிரார்த்தித்து, தன் காதலருக்குப் பெரியதோர் கடிதம் அனுப்பினாள். அதற்குப் பதில்வரக்கூடிய தினம் வரையும், அவளால் சரியாகச் சாப்பிடவும் முடியவில்லை, படிப்புச் சொல்லிக்கொடுக்கவும் முடியவில்லை. அவள் பதிலை யெதிர்பார்த்த தினத்தன்று ஒருபதிலும் வரவில்லை: மாதம் ஒரு கடிதத்துடன் திருப்தியாயிருந்தவள், இப்பொழுது, ஒரேவாரத்தில் இரண்டு கடிதங்கள் வராமைக்கு மனம் வருந்தினாள். மறுநாளும், சுந்தரம், கடிதத்தை எதிர்பார்த்து, ரயில்ஸ்டேஷனுக்கே போய், அங்கிருந்து தபாற்காரனுடன் தபாலாபீஸ் சென்று, காத்திருந்து, கடைசியில், சிவகாமிக்கு வந்திருந்த ஒருகடிதத்துடன் ஓட்டமாய் வீட்டுக்குவந்தான். அக்கடிதத்தின் விலாசம் தன் எஜமானர் கையெழுத்தில் இல்லாமை அவனுக்குச் சந்தேகத்தைவிளைத்தாலும், ஒருவேளை விலாசம் மட்டும் வேறுயாராவது எழுதியிருக்கக்கூடுமென்று நினைத்தான். அந்தோ! அளப்பரிய ஆவலுடன் அக்கடிதத்தைப் பிரித்துப்பார்க்க, பின் வருமாறு எழுதியிருந்தது:—

உ

முத்தலையூர்,
10-6-18—.

சௌபாக்கியவதி சிவகாமி அம்மாளுக்கு, முத்தலையூர்ச் சிறைச்சாலையிலிருக்கும் 398-நெ. கைதி விஜயமார்த்தாண்டத் தேவருக்காக அச்சிறைச்சாலை 'ரைட்டர்' இராமநாதய்யர் எழுதிக்கொண்டது என்னவென்றால்,

இரண்டுவாரமாகச் சிறைச்சாலையிற் பேதி உபத்திரவம் கடமாட்டமாயிருந்ததில், நேற்றுத் தேவருக்கும் கண்டிருக்கிறது. புதன்கிழமை அனுப்பப்பட்டு இன்று வந்தகடிதத்திற்குப் பதிலெழுத, அவர் அசக்தராயிருக்கிறார். மாதம் ஒரு முறைக்குமேல் எந்தக் கைதியும் கடிதம் எழுதக் கூடாதாகையால், என்னை எழுதச்சொன்னார். தெய்வகிருபையினால் உடம்பு சிறிது சௌக்கியமானபின்பு, பெரியதுரையின் அநுமதிபெற்று, தாமே கடிதத்துக்கு விபரமாய்ப் பதிலெழுதுவதாகச் சொல்லுகிறார்.

இப்படிக்கு,

போ. இராமநாதய்யர்.

இக்கடிதத்தை வாசித்தவுடன், சிவகாமி, இடியுற்ற அரவம்போல் சோர்ந்துவிட்டாள். 'ஒன்றை நினைக்கின் அதுஒழிந்திட் டொன்றாகும்' என்பது போல, ஈசன் திருவுளம் இவ்வண்ணமாயிற்றே! அவள் மனம் பட்டபாட்டை எம்மால் எடுத்தெழுத

வொண்ணாது. அன்றைப் பள்ளிக்கூடத்துக்குப் போக வில்லை. தன் காதலர் தேகஸ்திதியைத் தந்திமூல மாகத் தெரிவிக்கும்படி முந்தலையூர் 'ஜயில்ரைட்டர்' இராமநாதய்யர் விலாசத்துக்கு ஒரு தந்தியை அனுப்பி விட்டு, கண்ணீரும் கம்பலையுமாகப் பதில்நோக்கிக் காத்திருந்தாள். தந்திக்குப்பதில் வரவேயில்லை. மறு நாள் தபாலில், நம் கதாநாயகர் பத்தாம்தேதி மாலையில் இறந்துபோய்விட்டதாக, இராமநாதய்யரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. கடிதத்தை எதிர்பாராமையினால், சுந்தரத்தைத் 'தபால் ஆபீசுக்கு' அனுப்பவில்லை. மாலை யில் தபாற்காரன் கொணர்ந்து தந்த கடிதத்தைப் பிரித் துச் சமாச்சாரத்தை அறிந்தவுடன், சிவகாமி மூர்ச்சித் துக் கீழே விழுந்து விட்டாள்.

செஞ்சாலியிலேயில் ஏதோ காரியமாக வந்ததாகச் சொல்லிக் கொண்டு சிறிது நேரத்தில் வந்து சேர்ந்த போ. சுப்பையர், அவள் துயரத்துக்கு மிக்க அநுதா பங்காட்டி, அவள் தம்மைக் குற்றஞ் சாட்டித் திட்டி யதைக்கூட ஒரு சிறிதும் தம்மேற் போட்டுக் கொள் ளாமல், அவளுக்குப் பலவாறு ஆறுதல் மொழிகள் கூறி, மறுபடியும் வருவதாகவும், அவள் தாய்தந்தை யருக்கு ஆளனுப்புவதாகவும் சொல்லி, வெளியே போய் விட்டார். பின்பு, அவர், தம் சூழ்ச்சி பயன் பட்டுவதாகவே கருதி மகிழ்ந்து, மிகுந்த நகைகளையும் பணத்தையும் எடுத்துக் கொண்டு உடனே புறப்பட் டுச் செஞ்சாலியிலே வந்து சேரும்படி, வீரசங்கிலி மகாராசாவுக்கு அவசரமாய் ஆளனுப்பினார்.

## ஒன்பதாவது அதிகாரம்.

### எரிகிற தாடியில் சுருட்டுப் பற்ற வைத்தல்.



துன்ப வேகம் சிறிது மட்டுப்பட்டவுடன், இனித் தன்னுயிரைத் துறந்துவிடுவதே கடன் என்று சிவகாமிக்குத் தோற்றிற்று. அதை வெளியிட்டால், அவ்வெண்ணத்தை நிறைவேற்ற முடியாதென்று கருதி, யாவரும் சந்தேகியாமலே செய்து விடுகிறதென்று தீர்மானித்தாள். தான் ஆவியை விடுமுன் உலகத்திலுள்ள தன் கடமைகளை நிறைவேற்ற நினைந்து, முதலில், பாதிரி துரைக்கும் துரைசானிக்கும் தன் காதலர் இறந்த சமாசாரத்தைத் தெரிவித்து, தன் 'ராஜிநாமா'வை அங்கீகரித்துத் தன் வந்தனங்களை ஏற்றுக் கொள்ளும்படி, ஒரு கடிதமெழுதியனுப்பினாள்; பின்பு, தான் மீந்திருந்த இருநூற்றைம்பது ரூபாயில், இருநூற்றிருபது ரூபாயைச் சுந்தரத்துக்கும், மிகுதியைத் தன் வேலைக்காரிக்கும் கொடுத்து விடும்படி, வக்கீல் ஐயருக்கு ஒரு கடிதமெழுதி, எளிதிற் புலப்படும்படித் தன் பெட்டிக்குள் மேலாக அதை வைத்தாள்; தன் மனக்கசப்பை வெளியிட்டுத் தன் தந்தைக்கு ஒரு கடிதமெழுதி, அதையும் தன் பெட்டியிலேயே வைத்தாள். தன் மனம் போனபடி இவ்வாறு ஏற்பாடு

செய்து விட்டுத் தன்னுயிரைத் துறப்பதற்குத் தக்க காலத்தையும் கருவியையும் நினைந்து காத்திருக்கையில், பாதிரி துரைசானி ஒரு குதிரை வண்டியில் வந்து சேர்ந்தாள். அவள் வந்து அன்புடன் கண்ணீர்சோர அணைத்துக் கட்டிக் கொண்டவுடன், சிவகாமி, மன வுறுதி தளர்ந்து துக்கம் மேலிட்டு, தேம்பித் தேம்பி அழுதாள். துரைசானி, அவளைத்தேற்றி, தன்னுடன் வெளியே காற்றுடச்சென்று சம்பாஷிக்கும்படி அவளை வேண்டி, நிர்ப்பந்தமாய்த் தன் வண்டியிலேற்றிக் கொள்ள, நல்ல மந்தமாருதம் வீசும் சாலை வழியே இருவரும் சென்றார்கள்.

அப்பொழுது துரைசானி கூறியமொழிகள் சிவ காமி மனத்தை வேறு விதமாய்த் திருப்பிவிட்டன. கடவுளைப் பற்றியேனும், மதவிஷயத்தைப் பற்றி யேனும், உலகவாழ்க்கையின் முக்கியப் பயனைப் பற்றி யேனும், சுவநயத்தையும் சுகத்தையும் பலிகொடுத்துப் பிறர்க்கு உதவி செய்வதையே கடமையாகக் கொண்டு வாழ்நாளைக் கழிக்கும் மேல் வாழ்வைப் பற்றியேனும், சிவகாமி அதுவரையிலும் அதிகமாய் ஆலோசித்த வளல்லள். சூரியனைக் கண்டபொழுது முகமலர்ந்தும், அதனைக்காணுக்கால் வாடிவதங்கியும் வாழும் தாமரை மலரைப்போலக், குழந்தைப் பருவம் முதலே தன் காதலரைக் கண்டுழிக்களித்து மகிழ்ந்தும், காணுக் கால் வாடிவருந்தியும், கேவலம் தாவரப் பொருளுக் கொக்க வாழ்ந்து வந்தவள் அவள்; அவர் கருத்தை யன்றி வேறோர் சுகதுக்கத்தை யறியாள்; அவரே

அவளுக்கு இகப்பேறும் பரப்பேறுமாயிருந்தார்; அவ ளது நற்குணங்கள், அவர் குணங்களின் சாயைகளும், உறுதியான மனக்கோட்பாட்டாலன்றி இயற்கையில் அமைந்தனவுமே. இதுகாறும், துரைசானி, கடவுள், கடமை, முதலியவற்றைப் பற்றிப் பேசும்பொழுதெல் லாம், அவள் மனம், இளஞ்சூரியனைக்கண்ட தாமரை, வானத்தில் மங்கிக்காணும் சந்திரனை எவ்வாறு அனுவு மதியாது மலர்ந்தொளிருமோ, அவ்வாறே, அவள் காதலர்மாட்டுள்ள காதல் வயப்பட்டதாய், அம்மொழி களைக் கணியாதிருந்தது. இப்பொழுதோ, அக்காதல் நிலை ஒழிந்து போகவே, துரைசானியினது மொழிகள் புதியதோர் வலியோடும் செவியேறின. உலகப்பற்றை யொழிக்கவல்லதோர் கொடுந்துயர் உற்றார்க்கன்றி, உலகானுபவங்களில் மூழ்கித்திளைப்பார்க்கு, உண்மை யான ஞானம் தெள்ளெனப் புலப்படுதல் அருமை யென்பது, கேவலம் மெய்யே. ஆகவே, உலகவாழ்க் கையின் நிலையற்ற சுகதுக்கங்களையும்; கடவுளது கிரு பையையும்; ஏனைய ஜீவகோடிகளுக்கில்லாமல் மனி தனுக்குமட்டும் அவர் அளித்திருக்கும் பகுத்தறிவு சுயாதீனம் இவைகளின் பெருமையையும்; அவ்வாறளி த்திருப்பதில் அவர் திருவுளக்கருத்தையும்; தன்னால் திரும்பவும் அளிக்கமுடியாத ஆவியை அழித்தற்கு மனிதனுக்குச் சுதந்தரமில்லையென்னும் பெருநியாயத் தையும்; சுவநயத்தையே பாராட்டி நோக்குங்கால், கஷ்டங்களும் துன்பங்களும் அநியாயமாக நிறைந்துள் ளதாகத் தோற்றும் உலகவாழ்க்கை, பரோபகாரார்த்த

மாய்ப் பார்க்குங்கால், ஆத்மவிருத்திக்கு இன்றியமைமையாச் சந்தர்ப்பங்களும் சௌகரியங்களும் செறிந்து மனோரம்மியமாய்த் தோன்றும் காட்சியையும்; இந்துமதமாயினும் ஆகுக, கிறிஸ்தவமதமாயினும் ஆகுக, புத்தமதமாயினும் ஆகுக, சிறந்த மதங்கள் ஒவ்வொன்றினும், கடவுளே மனிதனாக அவதரித்துத் தோன்றியபொழுது, சாதாரண மனிதர் யாருமே பட்டறியாத் துன்பங்களையும் தீங்குகளையும் தாம் அநுபவித்து, உலக நியாயத்தில் துன்பத்தின் பயனை விளக்கி, உலகர்க்கோர் ஒப்புயர்வற்ற முன் மாதிரியாக ஒழுகிக் காட்டியிருக்கும் அற்புதத்தையும்; தமது தமது கடமைகளை மதியாது, சுகத்தையே கருதி, மனம்போனபடி யெல்லாம் நடப்பவர், வாணளை வீணளாப் பாழாக்குவதையும்பற்றி, இப்பொழுது துரைசானி அன்பும் அறிவும் செறிந்த மொழிகளில் சம்பாஷிக்கச் சம்பாஷிக்க, சிவகாமி மனத்தில், உபேக்ஷைமாறி ஆச்சரியம் பிறந்து, ஆச்சரியம் கவனத்தை விளைத்து, கவனத்தால் அபேக்ஷையும் நம்பிக்கையும் உதித்து, பழைய உத்தேசம் சூரியனைக் கண்ட பனிபோல் ஒழிந்துபோக, இத்தகைய ஞானத்தைத் துரைசானிக்குக் கொடுத்து அவளை நல்வழியில் மனந்தளராது நடாத்தும் கிறிஸ்தவமதத்தில், அவள் சிறிது பற்றுள்ளவளானள். அதையறிந்து, துரைசானி மனமகிழ்ந்து, தான் கூறியவற்றைப்பற்றி ஆழ்ந்து சிந்திக்கும்படிக்கும், அவசரப்பட்டு மனம்போனபடியொன்றையுமே செய்யாதபடிக்கும், அவளுக்குப் புத்தி கூறி, வண்டியைத் திருப்பி அவள் வீட்டில் அவளை

விட்டுவிட்டுத், தான் மறுபடியும் சீக்கிரம்வந்து பார்ப்ப தாகச் சொல்லிப்போய்விட்டாள்.

இதன்பின்பு, தற்கொலை செய்துகொள்வது பாவ மென்று நீக்கிவிடினும், சிவகாமியின் மனம் பலவாறு குழம்பிற்று; ஒன்றையும் முழுநம்பிக்கையாகவில்லை; மறுநாள் துரைசானி யனுப்பிய கிறிஸ்துமதச் சார் பான தமிழ்ப் புத்தகங்கள் சிலவற்றைக் கவனமாய் வாசித்தாள்: அதிகமான வெளிச்சமொன்றும் புலப் படவில்லை; தன் எஜமானரது மரணத்தை நினைந்து நினைந்து இன்னும் பரிதபித்துக்கொண்டிருக்கும் சுந் தரம், இவ்வளவு சீக்கிரத்தில் அவரது அரும்பெருங் காதலை மறந்துவிட்ட தன்னினும், எவ்வளவோ மேலான குணத்தினனென்று எண்ணியிருந்தினள்; துரைசானி இடையிடையே வந்து நெருங்கிப் பேசி யதை, தன்மனம் மிகவும் குழம்பியிருப்பதாகவும், தானுகவே திர்க்காலோசனை செய்து காலக்கிரமத்தில் ஒரு முடிவு சொல்வதாகவும், தன்னை யதிகம் நிர்ப்பந் தப்படுத்தவேண்டாமென்றும் கூறி, தடுத்துவிட்டாள். இப்படிச் சிலநாட்கள் கழிந்தன.

சுப்பையர் வேண்டுகோளின்படி செஞ்சாலியினை க்கு வந்த வீரசங்கிலித்தேவர், விதிவசத்தால், வந்த மறுநாளே, துரைசானியுடன் சவாரிபோகையில் சிவ காமியைப் பார்த்தார். தாம் முன்பு கண்டதிலும் பதின்மடங்கு இப்பொழுது அவள் அழகாயிருப்ப பதைக் காணவே, அவர் மனத்தில் அடங்கா ஆசை

குடியேறியது. தாம் அரிதிற்றப்பிய விளக்குமாற்றுப் பூசையை முற்றும் மறந்து, எங்ஙனமாயினும் அவளை யடையவேண்டுமென்று விரும்பினர். இதற்குத் தூதுத்தொழில்பூண்ட சுப்பையர், சிவகாமியிடம் பாதிரி துரைசானி போய்வருவதையும், அவள் ஒருகால் கிறிஸ்துவேதத்தில் சேர்ந்துவிட்டால் பின்பு தம்மால் அணுகவும் முடியாதென்பதையும் நினைந்து, தம் தந்திரம் வெளிப்படுமுன்னரே அவள் மனத்தை யிணக்கினாலன்றிப் பின்பு ஒன்றுமே பயன்படாதென் பதையறிந்து, அவளிடம் பலகால் சென்று தம் பேச்சால் அவளை யிணக்கமுயன்றார். அஃதொன்றும் பலியாமல், கடைசியில், அவள் அவரைத் தன்வீட் டுக்கு வர வேண்டாமென்று மரியாதையாய்ச்சொல்லி அனுப்பிவிட்டாள். ஜமீன்தார் ஆசையோ, நாளுக்கு நாள் சகித்தற்கரிதாகி, கடைசியில், அவர், எதற்கும் துணிகரமுடையவராய்விட்டார்; தம் காமவெறியில் சிவகாமியைமட்டும் தமக்குக் கொடுத்துவிட்டால், தம் ஜமீனில் பாதிவேண்டுமாயினும் சுப்பையருக்குக் கொடு ப்பதாகச் சொன்னார். செட்டியார் கடனிலும் பாதி சுப்பையரைச் சேருமோ சேராதோ யாமறியேம். ஆகவே, இந்த மூர்க்கராஜாவும் துர்மந்திரியுமாக மறு படியும் ஒரு முரட்டு ஆலோசனை செய்து முடித்தார் கள். பழைய கலெக்டரேனும், போலீஸ் இன்ஸ் பெக்டரேனும், வக்கீல் ஐயரேனும் இல்லாமையும், சிவ காமியின் வீடு நடுப்பட்டணத்திலின்றி ஒரு வெளிப் புறச் சந்திலிருந்தமையும், பணச்செருக்கும், மூடக்

காமமும், அவர்களுக்கு மனதைரியத்தைக் கொடுத்தன.

---

## பந்தாவது அதிகாரம்

அடாஅது செய்வார் படாஅது படுவார்.





இரவு மணி பதினொன்றடித்தாய்விட்டது; பட்டணம் வாய் அடங்கிவிட்டது. சிவகாமி குடியிருந்த சந்து நிச்சப்தமாயிருந்தது, இராக் காவற்காரர் "ஹோ! ஹோ!" என்று வெகுதூரத்தில் கூப்பிடுவது மட்டும் கேட்டது; சிவகாமி கன்னறையில், கையிற் புஸ்தகத்துடனே, கண்ணயர்ந்துவிட்டாள், வேலைக்காரி முன்கட்டிற் படுத்திருந்தாள், வாசற்கதவு தாழிட்டிருந்தது; சுந்தரம் தெருத்திண்ணையில் தூங்கிக்கொண்டிருந்தான்.

பெரியகுதிரைகள் இரண்டு பூட்டியுள்ள ஒரு வண்டி, அந்தச்சந்தின் ஓரற்றத்தில் வந்து நின்றது. அவ்வண்டியிலிருந்து வீரசங்கிலித் தேவரும் பொ. சுப்பையரும் கீழே இறங்கினார்கள். வண்டியின் பின்னிருப்பிலும் முன்னிருப்பிலும் இருந்த மூன்றுவேலைக்

காரர், அவர்களுக்கு வழிகாட்டி முன் சென்றனர்; அவர்களில் ஒருவன் கையில் ஒரு சிறு வெளிச்சமிருந்தது. இரண்டு மூன்றடி செல்லுமுன், "ஹோ! ஹோ! ஹோய்!" என்று காவற்காரர் கூவுவது, இவர்கள் காதில் விழுந்தது. அதைக்கேட்டவுடன், ஜமீன்தார், திடுக்கிட்டு நின்று, "ஐயரே! லோந்து போலீஸ்காரன் வந்திட்டால் என்ன செய்கிறது?" என்று கேட்டார். அதற்குச்சுப்பையர், "சந்நிதானத்திலே அப்படியொன்றும் பயப்படவேண்டாம்; இந்தக் கூக்குரல் நேரடித் தெருவிலிருந்து கேட்கிறது. இந்தப்பக்கம் பீட்டுக் கான்ஸ்டேபிள், இங்கே வரவேமாட்டான்; அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்திருக்கிறேன்; என்ன, அவ்வளவு தெரியாதா?" என்று சொல்லிப் பயத்தைத் தணித்தார்.

பின்பு அவர்கள் மேற்சென்று, சிவகாமியிருந்த வீட்டு வாசலில் நின்றார்கள். ஒருவன் மெதுவாய் 'ஆய்ச்சி,' 'ஆய்ச்சி,' என்று கதவைத் தட்டினன். வேலைக்காரி, இன்னதென்று அறியாமல், எழுந்து கதவைத்திறந்தாள். உடனே எல்லோரும் உள்ளே புகுந்தனர். கண்ணிமைக்குமுன், ஒருவன், வேலைக்காரி வாயில் துணியை அடைத்து, கைகளைப் பின்புறத்திற் சேர்த்துக்கட்டி, வாயைத் திறந்தால் மண்டையைப் பிளந்துவிடுவதாகப் பயமுறுத்தி, அவளை ஒருமூலையில் உட்கார்த்திவிட்டான். இதற்குள், வாசற் றிண்ணையிற் படுத்திருந்த,சுந்தரம்,விழித்துக்கொண்டு உள்ளேவந்து, சுப்பையரை நோக்கி, "என்ன, சாமி,

கொள்ளைக்கா வந்திருக்கிறீர்கள்? இங்கேயும் ஒரு மரக்குஞ்சு இருக்கிறது மறந்துபோய் விட்டதோ?" என்று கேட்டான். அதற்கு, சுவாமியார் "இல்லை, சுந்தரபாண்டியம், அப்படியொன்றுமில்லை. சிவகாம சௌந்தரியைக் கண்டுபோகி, ஊருக்கு அழைத்துப் போகவேண்டும்; இனி, தனியே, இங்கிருப்பது சரியல்ல, என்று மகாராசா அவர்கள் வந்திருக்கிறார்கள்" என்றார். "என் உயிருள்ளமட்டும் உன்னை ஒரு ஈயையும் விடேன்" என்று சொல்லிக்கொண்டு, சுந்தரம், சிவகாமி படுத்திருந்த அறைவாசற்கதவை அடைத்து, அதன்மேற் சாய்ந்து நின்று கொண்டான். இதைக் கண்டவுடன், ஜமீன்தார், அவனைத் தம் வசப்படுத்த நினைந்து, நூறு ரூபா பெறுமானமுள்ள தங்கக் கடியாரத்தையும் சங்கிலியையும் கழற்றி, "இதை இப்பொழுது வைத்துக்கொள், சுந்தரம்; பின்பு உன்னிஷ்டப்படியெல்லாம் செய்வோம்" என்று சொல்லி, அவன் கையிற் கொடுத்தார். அவன் அதைக் கையில் வாங்கி, ஒருநிமிஷம் உற்றுப்பார்த்து, பின்புத் திடீரென்று சுழற்றி அவர் முகத்தில் எறிந்தான். "ஆத்தாடி! என் கண்போச்சு" என்று தம் வலக்கண்ணைக் கையால் பொத்திய விரசங்கிலித் தேவர், தகாத காமத்தால் இந்திரன் ஆயிரம் கண்களைப் பெற்றதற்குப் பதிலாக, அதே காரணத்தினால், வாணாள்முழுதும் ஒற்றைக்கண்ணர் ஆய்விட்டார். நோவு பொறுக்கமுடியாமல் "கொல்லு பயலை" என்று அவர் கூறியவுடன், அவர் வேலைக்காரரில் ஒருவன்

தன் கையிலிருந்த ஒரு குறுந்தடியால் சுந்தரத்தை மார்பில் ஓங்கிக் குத்தினன். உடனே, அவன், அடியற்ற மரம்போல, "தாயே! நான் செத்தேன்" என்று அலறிக்கொண்டு, கீழே விழுந்துவிட்டான். அவன் வாயினின்றும் இரத்தம் பெருகுவதை ஒருவரும் கவனியாமல், அவனை யொருபுறமாகத் தள்ளிவிட்டு, கதவைத் திறந்துகொண்டு, ஒற்றைக்கண் ஜமீன்தாரும், சுப்பையரும், வேலைக்காரரும், சிவகாமியிருந்த அறைக்குட் புகுந்தனர். இதுநிற்க, அதே சமயத்தில், வக்கீல் ஐயரும் மற்றொருவரும், வெகு விரைவாய், சிவகாமி வீடிருந்த சந்தையே நோக்கி வந்துகொண்டிருந்தனர். அவர்கள் பேச்சைச் சற்றுக் கவனிப்போம்.

வக்கீல்:—நானும் இன்று மாலைதான் வந்தேன்; மூன்று வாரமாய்த் திருவநந்தபுரம் பக்கம் போயிருந்தேன்; நான் செல்லுமுன் பார்த்தபொழுது சௌக்கியமாயே இருந்தார்கள். ஆனால், நீங்கள் வருவதைத் தெரிவிக்கவே இல்லையா?

மற்றவர்:—இல்லை; கடைசிக்கடிதத்தில் கொஞ்சம் ஜாடையாய்க் குறித்திருந்தேன். திடீரென்று வந்து சந்தோஷப்படுத்த வேண்டுமென்பது என்னெண்ணம். அதுதான் உங்களுக்கும் எழுதவேயில்லை. எல்லாம், என்ன, இன்னும் மூன்று நாளாகவில்லையே. இங்கே கலெக்டராயிருந்தவர், இப்பொழுது முத்தலையூர் ஜில்லா கலெக்டர். எல்லாம் அவர் கிருபைதான். அவரும் ஜயில் சூப்பிரண்டண்டு துரையும் இந்த

ஜூபிலி மகோற்சவத்தில் என்னை விடுதலை செய்து விடவேண்டுமென்று, பொறுத்தெழுதினார்கள்; அப்படியே கடவுள் கிருபையுமிருந்தது. நான் இன்றுப் பகல்வண்டியில் வந்திருக்கக்கூடும்; ஆனால் இப்போதுள்ள அவகோலத்தோடு பகலில் வரவிரும்பாது, ஒருபொழுது தங்கிவந்தேன். இதுதானு வழி? அல்லது நீங்கள் தவறவிட்டீர்களோ?

வக்கீல்:—இல்லை, இதே தான் வழி; நெருங்கி விட்டோம், அதோ வண்டி நிற்கிறதே, அந்த வழியில் தான் சந்திருக்கிறது.

இதற்குள், இருவரும் குதிரை வண்டிக்குச் சமீபமாய் வந்துவிட்டார்கள். நம் கதாநாயகர் வண்டிச்சாரதியை நோக்கி, "யார் வண்டியிது? இங்கே யேன் நிற்கிறது?" என்று கேட்டார். அதற்கு அவன், "புலிமலை மகாராசா வண்டி; மகாராசா இந்தச் சந்திலே ஒரு வீட்டுக்குப் போயிருக்கிறார்கள்" என்று பதிற் சொன்னன். நம் கதாநாயகர் உடனே ஸ்தம்பித்து நின்றுவிட்டார். ஆகா! இவ்வளவுதானே தம் காதலியின் கற்பும் உண்மையும்? இதைக்காணவோ, தாம், அடங்காப்பேராசையால் தள்ளப்பட்டுத் தழைக்கின்ற மனத்தோடு ஓடியோடி வந்தது?

"வஞ்சனை பண்டு மடந்தை வேடம் என்றே
தஞ்சென மாதரை உன்னலார்கள் தக்கோர்"

என்று கவிகூறியது பொய்யன்றோ? அந்த ஒருபிஷ

த்தில் நம் கதாநாயகர் உற்ற மனத்துயரத்தை என்னென்று கூறுவது.

"உலர்ந்ததநா, உயிர்ஓட லுற்றது உள்ளம்
புலர்ந்தது, கண்கள் பொடித்த பொங்கு சோரி,
சலம்தலைரிக்கத், தக்கதென்கோல் என்றென்று
அலம்தலையுற்ற அரும்புலன்கள் ஐந்தும்."

இதைக் கண்ணுற்றவுடன், வக்கீல் ஐயர், "என்ன, வெகு நன்ருச்சுது; தாங்கள் இவ்வளவு அவசரப் பட்டவர்கள் என்று நான் சொப்பனத்திலும் எண்ண வில்லை. இது சற்றுமே தகாது; இச்சந்தேகம், தங்கள் குணத்துக்கேனும், அந்த அம்மாள் கற்புக் கேனும், சிறிதும் பொருந்தாது. பெண்கள் சுபா வத்தை அறியும் சக்தி எனக்குக் கொஞ்சம் உண்டு; அந்த அம்மாள் கற்புக்கு, நான் என் உயிரையும் பணயம் வைப்பேன். வாருங்கள் போவோம்" என்று சொன்னார். அதற்கு நம் கதாநாயகர், "இனியென்ன சந்தேகம்? பிரத்தியக்ஷப் பிரமாணத்திலும் மேலெ ன்ன இருக்கிறது? இன்னும் ஏதாவது நேரிற்கண் டால், நான் சகியேன், திரும்புவோம் வாருங்கள்" என்று திரும்பினார். வக்கீல் ஐயர், மறுபடியும் ஆக்ஷேபித்து, அவர் கையைப் பிடித்திழுத்துக்கொண்டு மேற்சென்றார். சிவகாமி வீட்டுவாசலை அடைந்த பொழுது, நிச்சப்தமாயிருந்தது; வாசற்கதவு மூடப் பட்டிருந்தது; ஒருவன் மட்டும் கதவண்டையில் காவலாயிருந்தான். கதவைத்தட்டச் சென்றவுடன், "மகாராசா உள்ளே இருக்கிறார்கள்; ஒருவரும்

போகக்கூடாது" என்று அவன் தடுத்தான். வக்கீல் ஐயருமே திகைத்து நின்றுவிட்டார். நம் கதாநாயகரோ, வெறிகொண்டவர்போல் அவன்மேல் விழுந்து அவனைப்பிழுத்துத் தள்ளிவிட்டு, கதவைத் திறந்து கொண்டு உள்ளே பாய்ந்தார். ஆஹா! இதென்ன ஆச்சரியம்! கண்படைத்த காட்சிப்பேறு, இதினும் மேலுண்டோ!

"மாசுண்ட மணியனாள் வயங்கு வெங்கதிர்த்
தேசுண்டதிங்களும் என்னத் தேய்ந்துளாள்;
காசுண்ட கூந்தலாள் கற்பும் காவலும்
ஏசுண்ட தில்லையால், அறத்துக் கீறுண்டோ?"
"வெங்கனல் மூழ்கியும் புலன்கள் வீக்கியும்
தங்குவ அருந்துவ நீக்கி நோற்றவர்
எங்குளர், குலனில்வந் தில்லின் மாண்புடை
மங்கையர் மனத்தவம் நவிலற் பாலதே."

என்றாங்கு, கற்பரசியாகிய சிவகாமி ஒருபாயின்மேல் மூர்ச்சையாய்க் கிடந்தாள்; அவள் நிமித்தம் விடுவிக்கப்பட்ட வேலைக்காரி, அவள் முகத்தில் தண்ணீரைத் தெளித்துக்கொண்டும், வேறு சிகிச்சைகள் செய்து அவளை ஆசுவாசப்படுத்திக்கொண்டு மிருந்தாள்; வலக்கண்ணைப் பொத்திய கையுடன், வீரசங்கிலித் தேவர், "ஐயோ! ஐயோ!" என்று நோவுபொறாது வாய் அரற்றி உலாவிக் கொண்டிருந்தார்; போ. சுப்பையரும் வேலைக்காரர் இருவரும் சூழ்ந்து நின்று கொண்டிருந்தனர்; வீட்டுத்தீபம் ஒன்றும், ஒரு வேலைக்காரன் கையில் ஒரு வெளிச்சமும் பிரகாசித்

துக்கொண்டிருந்தன. உள்ளேசென்ற நம் கதாநாயகர், இருந்த நிலைமையைக்கண்டு, நடுவே பாய்ந்து, பாயில் உட்கார்ந்து, தம் காதலியை வாரியெடுத்து மடிமேற் போட்டுக்கொண்டு, "என் சோமி, நான் வந்துவிட்டேன், பார்; என் கண்ணாட்டி, எழுந்திரு" என்று உரைப்பரிய ஆசையுடனும் உருக்கத்துடனும் சொல்லிக்கொண்டு, சிவகாமியைக் களைப்பாற்ற லாயினர்.



## நிகழ்கால நிலைமை.

எப்பொழுதுமே இரத்தாசயம் பலவீனமாயிருந்தமையால், பந்தவைத்தியத்துக்கும் குணப்படாது, சுந்தரம், தன் எஜமானரைத் திரும்பவும்கண்டு அவரிடத்து அவர் காதலியை மாசு மறுவின்றி ஒப்புவித்த ஆநந்தத்தை இரண்டேநாள் அநுபவித்துவிட்டு, நிர்விசாரமாய் இறந்து போயினளாக; வீரசங்கிலி மகராசா, போ. சுப்பையர் முதலியோர், இராக்காலத்தில், துர்எண்ணத்துடன் வீட்டிற் புகுந்து, துக்கிருத்தியங்களைச் செய்ய முயன்று, ஒருவனை உயிர்ச் சேதமுறும்படி காயப்படுத்திய குற்றத்துக்காகப் பலவாண்டுகள் சிறை விதிக்கப்பட்டு, சிறைச்சாலையிலேயே ஜமீன்தாரும் ஐயரும் தம் பாழான வாழ்நாளை முடித்தனரென்று, ஜனங்கள் சொல்லுகிறார்கள். நம் கதாநாயகரும் கதாநாயகியும், தமிழ்நாட்டையே நீங்கி, அவர்களை இன்னாரென்று அறியாத வடதேசத்திலே, வெகு சுகமாய்க் காலங்கழித்து வருகிறார்கள்; நம் கதாநாயகருக்கு, வியாபாரத்துறையில் மாதம் முந்நூறு ரூபா கிடைக்கின்றது; அவர்கள் மூத்தமகன் சுந்தரபாண்டியன் வெகு நன்றாய் ஹிந்துஸ்தானி பேசுகிறான்; தமிழ பாஷைதான் அவனுக்குக் கஷ்டமாகத் தோன்றுகிறது. சப்பாணித்தேவர், வேலாயுதத்தேவர், மருதி முதலியோருடைய பெயர்கள், இரண்டு வருஷ

களுக்கு முன்னெடுக்கப்பட்ட ஜனசங்கைக் கணக்கில் அகப்படவில்லை. புளிமலை ஜமீனே, இனி அது எக் கேடு கெட்டாலும் நமக்கென்ன?

விஜயமார்த்தாண்டம்

முற்றிற்று.



சுதேசமித்திரன் பிராஞ்சு பிரஸ், சென்னை.